Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

# அகஸ்தியர்

# 12000

## என்னும் பெருநூல் காவியம்

3.







மறை நூலகம், சென்னை-2

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

# அகஸ்தியர் 12000

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

# என்னும் பெருநூல் காவியம்

## (மூன்றாவது காண்டம்)


. தசாதன
மெயின் ரோடு,
திண்டுக்கல்.


பதிப்பாசிரியர் :

எஸ். பி. ராமச்சந்திரன்


Donated by:-
eGangotri Digital Preservation Trust
New Delhi
egangotritrust@gmail.com



தாமரை நூலகம்

7, N.G.O. காலனி,

வடபழனி, சென்னை-600 026.

தொலைபேசி எண் : 420249


CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

தாமரை வெளியீடு 129
முதல் பதிப்பு ஆகஸ்ட், 1994
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
உரிமை பதிவு செய்யப்பட்டது (C)

031,1NSP,L
N4

## நூலைப் பற்றி


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகஸ்தியர் 12000 என்னும் பெருநூல் காவியம் மூன்றாவது காண்டம் |
| பதிப்பாசிரியர் | : | எஸ். பி. ராமச்சந்திரன் |
| வெளியிட்டோர் | : | தாமரை நூலகம் 7, என். ஜி. ஓ. காலனி வடபழனி, சென்னை-26 |
| பதிப்பு ஆண்டு | : | ஆகஸ்ட், 1994 |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு |
| நூல் வடிவம் | : | 18 செ.மீ. X 12½ செ.மீ. |
| அச்சுத்தாள் | : | 10.7 வெள்ளைத்தாள் |
| அட்டை | : | 13.8 சேஷசாயி |
| எழுத்துக்கள் | : | 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 268 |
| பிரதிகள் | : | 1200 |
| பைண்டிங் | : | செக்ஷன் |

**நூல் விலை : ரூ. 35-00**

அச்சிட்டோர் : கார்த்திக் பிரிண்டர்ஸ்,
கோடம்பாக்கம், சென்னை-24


JAGADGURU VISHWARADHYA
SIMHASAN JNANAMANDIR
LIBRARY
Jangamawadi Math, Varanasi
CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

# பதிப்புரை

அகஸ்தியர் பனிரெண்டாயிரம் என்னும் இப்பெரு நூல் காவியத்தின் ஒவ்வொரு காண்டமும் ஒவ்வொரு விதத்தில் புதுமைமிக்கதுவாய்—புதிய துறையில் அமைந்த பாடல்களை உடையதாய் இருப்பது வியப்பளிக்கிறது.

இம்மூன்றாங் காண்டத்தில் அகஸ்தியர் மருந்துகளைப் பற்றியே அதிகமாகக் கூறியிருக்கிறார். அயக்களங்கு செந்தூரம், காந்த செந்தூரம், அப்பிரேக செந்தூரம், இரச செந்தூரம் முதலியவை பற்றிக் கூறிக்கொண்டு வருபவர், இரச செந்தூரத்தால் காயசித்தி பெறலாம் என்று கூறுகிறார்.

சீற்றமுடன் நரைதிரைக ளற்றுமேதான்
சிதாபாசக் களையதனைச் சீராய்ந்து
நாற்றமுள்ள சடலமதை மண்ணிற்செல்லா
நபமுடனே வாசியோகஞ் செய்து கொண்டு
தேற்றமுடன் தேகமெல்லாம் குளிகைபூண்டு
தேசொளிவின் பிரகாசம் பெறுவீர் காணே.

பா. எண் 129

என்று கூறுகிறார்.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வங்கம் முதலான உலோகங்களையும் நூரிசு பாசாணங்களையும் குருவாக்கும் முறைகளை ஆங்காங்கே கூறியிருக்கிறார். குரு மருந்துகள் உடம்பில் பட்டாலே நோய் குணமாகிவிடும். அதன்மேல் பட்ட காற்று உடம்பின்மேல் பட்டால்கூட நோய் குறைந்து விடும். இவை சித்தர் கண்ட அனுபவ முறைகள். அகஸ்தியர் பனிரெண்டாயிரம் போன்ற நூல்கள் கிடையாமற் போன காரணத்தால்தான் சித்த வைத்தியர்கள் குரு முடிக்கும் முறைகளையே மறந்துவிட்டார்கள் என்று கூறுவதும் பொருந்தும்.

அகஸ்திய மாமுனிவர் இந்நூலிலே, பூமியின்மேல் சில பாகங்கள் இயற்கையாகவே மருத்துவ குணங்கள் பொருந்தியவாய் இருப்பதைக் கூறுகிறார். சதுரகிரி பஞ்ச பாஷாணக்காடு என்கிறார்.

நாடான கானகத்தில் பாஷாணங்கள்
நலம் பெரிய பூமியெல்லாம் சுண்ணக்காடு
காடான வனாந்திரமும் பழுக்கும் நாடு
கன்னவனே காயாதியிருக்கும் மூலி
தாடாண்மை கொண்டுமல்லோ வெகுகோடி மாண்பர்
தாரணியில் வந்துறங்கும் தழைத்த காடு
பாடான சித்தர் கற்பம் கொள்ளுங்காடு
பாவலனே என்றெனக்குக் கழறிட்டாரே.

பா. எண் 580

இப்படிப்பட்ட அரிய விஷயங்களைக் கூறும் இந்தப் பெரிய நூல்—இத்துணைக் காலம் கவனிப்பாரன்றிக் காலத்தின் கூறாமல் கொஞ்சம் கொஞ்சமாக மக்கிச் சிதைந்து அழிந்துபோகும் நிலைமைக்கு விடப்பட்டிருந்ததே என்பதை எண்ணும்போது நெஞ்சம் தவிக்கிறது.

இதுபோன்ற பழைய நூல்களை வைத்திருப்பவர்கள் அவை அழியாமல் காப்பாற்றிவிட வேண்டும் என்ற

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

எண்ணம் கொண்டு, பெரிய மனதுடன் கொடுத்து உதவினால் அவர்கள் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் சிறந்த தொண்டு செய்தவர்களாவார்கள். அவர்களை உலகம் உள்ளளவும் மறவாது போற்றித் துதிக்கும் என்பதில் ஐயமில்லை.

எஸ். பி. ராமச்சந்திரன்
பதிப்பாசிரியர்

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

# பொருளடக்கம்



CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha


CC0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha



CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

உ

பதினெண் சித்தர்களில் மகாமகுத்துவம்பொருந்திய

அகஸ்திய முனிவர்

திருவாய் மலர்ந்தருளிய

# பெருநூல் காவியம்

# 12000

# மூன்றாவது காண்டம்

---

## காப்பு

ஆதியெனும் பரஞ்சுடரே குருவேகாப்பு
அப்பனே திருமாலின் துணையேகாப்பு
சோதியெனும் வடிவேலர் பாதம்காப்பு
சுத்தமுடன் வள்ளிதெய்வ யானைகாப்பு
நீதியுடன் நாதாக்கள் பதமேகாப்பு
நிஷ்களங்க மானதிரு வொளியேகாப்பு
பாதிமதி தம்பிரா னையன்காப்பு
பார்தனிலே சித்தர்முனி பாதங்காப்பே. 1

## நூல் வரலாறு

காப்பான காண்டமது பனிரண்டுமாகும்
காசினியி லசுவனியார் கடாட்சத்தாலே
மூப்பான பிணியதனை நீட்பதற்கு
மூதுலகில் நாதாக்கள் ரிஷிகள்தாமும்
வாப்பான அனேகநூல் குருநூலாக
வளமையுடன் பாடிவைத்தார் சமாதிக்குள்ளே
பூப்பான புஷ்பம்போ லித்தநூலைப்
பூவுலகில் யானுமல்லோ திட்டினேனே. 2

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

திரட்டியே பெருநூலாய் குருநூலாக
தீர்க்கமுடன் பனிரண்டு காண்டமாக
வரமுடைய வசுவனியார் கிருபையாலும்
வளம்பெரிய மனோன்மணியாள் கடாட்சத்தாலும்
கரமூன்றித் தவமிருந்து கருவறிந்து
காசினியில் நாதாக்கள் ரிடிகளுக்கும்
சிரங்குனிந்து பதாம்புயத்தை மனதிலுன்னி
சிறப்புடனே பாடிவைத்தேன் பெருநூல்பாரே. 3

பாரப்பா பெருநூலாம் பனிரண்டுக்குள்
பாடினேன் உலகுபதி வதிசயங்கள்
நேரப்பா பனிரண்டு காண்டத்துள்ளே
நேர்மையுடன் பதினெண்பேர் சித்துமார்க்கம்
ஆரப்பா நாதாக்கள் சொல்லாமார்க்கம்
அப்பனே யாமறிந்து கூறினோம்யாம்
தேரப்பா காண்டம்பனி ரண்டுக்குள்ளே
தேற்றமுடன் பாடிவைத்த குருநூலாமே. 4

குருநூலாம் பெருநூலாம் மூன்றாங்காண்டம்
குறிப்புடனே பாடிவைத்த கருநூலாகும்
ஒருநூலு மின்னூலுக் கிணைவேருண்டோ
உத்தமனே புலஸ்தியனே வுண்மையோனே
பெருநூலா மிக்காண்டம் பனிரண்டுக்குள்
பேசாதும் பேசிவைத்தேன் பேருண்டாக
கருவறிந்த பெரியோர்க ளிந்தநூலைக்
கண்டாலும் விடமாட்டார் கவிவல்லோனே. 5

கவியான கவியதுதான் மூன்றாங்காண்டம்
கருவறிந்த புத்திமான் காண்பான்பாரு
புவிமீதில் மகிமைதனை யறியவல்ல
பூவுலகில் யாரறியப் போறாரப்பா
செவிதனக்கு கேளாத கர்மியோர்க்கு
செப்பினா லென்னபலன் யாதொன்றில்லை
அவியாத திருவிளக்கு பெருநூலப்பா
அப்பனே யுந்தமக்குப் போதிப்பேனே. 6

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
போதிப்பேன் நாலுயுக வதிசயங்கள்
பொங்கமுடன் உந்தமக்கு சொல்லுவன்யான்
சாதித்தேன் பனிரண்டு காண்டத்துள்ளே
சட்டமுடன் கிரதங்கள் லேகியங்கள்
ஆதித்தன் சந்திரன்போல் செந்தூரங்கள்
அப்பனே பற்பங்கள் மாத்திரைபோக்கு
நீதியுடன் புகைமாற்கம் கபாடபந்தம்
நிலையான யெண்ணெய்யுடன் கற்கம்தானே. 7

தானான கற்கமுடன் ரசாயனங்கள்
தாக்கான கபாடமாம் சுன்னப்போக்கு
தேனான சூரணமாம் வடகமாற்கம்
தெகுட்டாத மெழுகுடனே தயிலமாற்கம்
கோனான பிளாஸ்திரியும் லேபனங்கள்
கொற்றவனே பட்டுவகை கியாழமாற்கம்
மானான திராவகங்கள் செயநீர்போக்கு
மகத்தான களங்குமுதல் தீராமே. 8

தீநீராம் கட்டினங்கள் நீத்தினங்கள்
தீர்க்கமுடன் கார சாரங்கள்தாமும்
பூநீராம் தேசங்கள் வழங்குமார்க்கம்
புகழான சிடிகைமுதல் சிமிட்டுப்போக்கு
வாநீராம் வழலையென்ற மார்க்கம்யாவும்
வகுப்புடனே குறுக்குவழி கோடா கோடி
தீநீராம் வாலைவைப்பு சிலதுமாற்கம்
தீரமுடன் கூறுதலு முண்மையாமே. 9

## அயக்களங்கு செந்தூரம் கற்பம் வேதைமுகம்

உண்மையா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
ஓகோகோ நாதாக்கள் கூறவிலலை
திண்மையாம் பதினெண்பேர் சித்தர்தாமும்
தீர்க்கமுள்ள நாதாக்கள் ரிடிகள்தாமும்
வண்ணமுடன் அவரவர்கள் செய்தநூலில்
வளமையுள்ள செந்தூர மனேகமுண்டு
எண்ணரிய நற்பொருள் களனேகஞ்சொன்னார்
எழிலான செந்தூர மிதுபோலாமே. 10
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆமேதான் செந்தூர மென்னசொல்வேன்
ஆ—ஆ பதினெண்பேர் கூறவில்லை
தாமேதான் அவரவர்கள் சிந்தைதன்னால்
சாற்றினார் கவர்கோடி லக்கோயில்லை
நாமேதான் கூறினதோர் செந்தூரந்தான்
நாவுமில்லை பாவுமில்லை கூறுதற்கு
போமேதான் யெந்தன்குரு வாக்குபொய்யா
குவலயத்தில் மெய்யாகு மதீதம்காணே. 11

காணவே அயமதுதான் பலமோபத்து
கருவான மணலிரும்பா யெடுப்பாயப்பா
தோணவே மணலிரும்பை யெடுத்துமைந்தா
துப்புறவே தானடித்து துப்புபோக்கு
நீணவே தகடடித்துப் பொடியதாக்கி
நீதியுடன் பொடிதனையே கியாழத்தாலே
மாணவே தானரைப்பாய் நாலுசாமம்
மன்னவனே மைபோலே யரைத்திடாயே. 12

அரைப்பதற்கு கியாழமது யேதென்றாக்கால்
அப்பனே கருநெல்லி தான்றியோடு
திரையகற்றுஞ் செவ்வல்லி பழச்சாறோடு
திகழான கியாழத்தில் சேர்த்தரைத்து
வரைநீங்க வெண்காரம் ரெட்டிப்பாக
வளமையுடன் றான்சேர்த்து அரைப்பாயப்பா
சுரைபோன்ற மூசைதனில் அடைத்துபாலா
சுந்தரனே சில்லிட்டு சீலைசெய்யே. 13

சீலையென்றால் சீலையது யேழுசெய்து
சிறப்புடனே ரவிதனிலே காயவைத்து
வாலையென்ற சரவுலையில் வைத்துவூது
மகத்தான வுலைதனிலே வுருகிநிற்கும்
ஆலையது யென்வழங்கும் வுலையைவிட்டு
அப்பனே தானிறக்கி யாறவிட்டு
வாலையெனும் மனோன்மணியைத் தொழுதுபோற்றி
வண்மையுடன் மூசைதனை வுரைத்திடாயே. 14

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
உடைத்துமிகப் பார்க்கையிலே யென்னசொல்வேன்
வுத்தமனே யயமதுவும் வுருக்குபோலாம்
கடைதிரண்ட வச்சாணி போலயப்பா
கறுப்பதுவும் நீங்கியல்லோ வெளுத்துக்காட்டும்
தடையறவே மறுபடியும் ராவிமைந்தா
தண்மையுடன் பீங்கானில் போட்டுமேதான்
கடையான வாறுவகை திராவகத்தைக்
கருத்துடனே தான்விட்டு ரவியில்வையே. 15

வைத்துமே மூன்றுநா ளானபின்பு
மன்னவனே முன்போல செயநீர்வாரு
நைத்துமே ரவிதனிலே செயநீர்சுண்டி
நாயகனே உப்பதுபோ லிருக்கும்பாரு
பொய்த்துமே போகாது செயநீர்போக்கு
பொங்கமுடன் றானிருக்கும் வழலைபூவாம்
மெய்த்துமே தானிருக்கு மயத்தினுப்பாம்
மேதினியில் யாரறிவார் மட்டிமாடே. 16

மாடான மாவுடது மறியப்போறார்
மானிலத்தில் அயத்தினிட பெருமைபோக்கு
காடான காட்டகத்தில் சித்தர்காணார்
காசினியில் காண்பவனே கருவுள்ளான்பார்
தாடாண்மை கொண்டதொரு வயத்திலுப்பை
சட்டமுடன் றான்சேர்க்க விபரங்கேளு
நீடான பெரிகாலன் தன்னாலாட்டி
நீதியுடன் றானரைப்பாய் சாமம்நாலே. 17

நாலான சாமமது வைத்துமேதான்
நலம்பெறவே மூசைதனில் பொதிந்துமல்லோ
நூலான சீலையது யேழுசெய்து
நுணுக்கமுடன் ரவிதனிலே காயவைத்து
சாலான சரவுலையில் வைத்துஊது
சட்டமுட னாறவிட்டு யெடுத்துப்பாரு
மேலான களங்கமது யென்னசொல்வேன்
மேதினியில் நாதாக்கள் செய்யாரன்றே. 18

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

அன்றான களங்கமதை பதனம்பண்ணு
ஆப்பனே யதன்போக்கு யருமைமெத்த
குன்றான செந்தூரங் கோடாகோடி
கொற்றவனே செய்வார்க ளனந்தம்போக்கு
வென்றிடவே யிப்பாகம் யார்தான்காண்பார்
வேதாந்தத் தாயினது வருளேபெற்றால்
தென்றிசையில் வகத்தியனார் தம்மைப்போலே
தேசொளிவின் சின்மயத்தைக் காண்பார்பாரே. 19

பார்த்தவற்கு யிப்பாகம் பலிக்கும்பாரு
பாலகனே மற்றவற்குப் பலிக்காதப்பா
நேத்தியுள்ள களங்மதை பதனம்பண்ணி
நேர்மையுட னதில்சேர்க்க விபரஞ்சொல்வேன்
மார்த்தமெனும் பதங்கமதை நேரேசேரு
மகத்தான கெந்தியது ரெட்டிப்பாக
சேர்த்துமே தானரைப்பா யின்னஞ்சொல்வேன்
செயசூத மந்திடைக்குக் கூடச்சேரே. 20

கூடவே மனோசிலையும் காலதாகும்
குறிப்பான தாளகமும் காலதாகும்
நீடவே துத்தமுடன் துருசுசேரு
நிஷ்களங்க மாகவல்லோ நாலுசாமம்
சாடவே யாறுவகை செயநீர்தன்னால்
தன்மையுடன் றானரைப்பாய் மைபோலாக
வாடவே யரைத்துபில்லை ரவியில்வைத்து
மார்க்கமுடன் சில்லிட்டு சீலைசெய்யே. 21

சீலையது யெழுசீலை வலுவாய்ச்செய்து
செப்பமுடன் புடமதுவும் கோழியாக
வாலையெனு மனோன்மணியை மனம்நினைந்து
வகையுடனே புடந்தனிலே போட்டாயானால்
காலையெழுஞ் சூரியன் சிவந்தவிம்பம்
கருவான செந்தூர மென்னசொல்வேன்
மாலைதனில் யெடுத்துப்பார் மகிழம்பூப்போல்
மன்னவனே கூறுதற்கு நாவொண்ணாதே. 22

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஒண்ணாது யிப்படியே பத்துமுறைபோடு
வுத்தமனே செந்தூர மென்னசொல்வேன்
கண்ணான சித்தர்களு மிந்தபாகம்
காசினியி லொருவருந்தான் கூறவில்லை
மண்ணாளும் வேந்தர்களு மிந்தபாகம்
மானிலத்தில் கண்டதில்லை யொருவருந்தான்
திண்ணமுடன் யெனதையர் கிருபையாலே
தீர்க்கமுடன் பாலித்தேன் திகழுள்ளோர்க்கே. 23

திகழான செந்தூரம் பதனம் பண்ணு
திறமுடைய வசுவனியார் கிருபையாலே
புகழான முறைபோலே செப்பினேன்யான்
புத்தியுள்ள பூபாலா புகலக்கேளு
நிகலான செந்தூர முண்பதற்கு
நிகழ்ச்சியுடன் முறைபாடு சொல்வேன்யானும்
சகலமும் தானறிந்த சித்தனானால்
சாங்கமுடன் கண்டுகொள்வான் பாருபாரே. 24

## காந்த செந்தூரம்

பாரப்பா யின்னமொரு கருமானங்கேள்
பாலகனே புலஸ்தியனே பண்புள்ளானே
நேரப்பா முன்னுரைத்த காயகற்பம்
நேடிதாக வுண்பதற்கு நியமம்பாரு
கூரவே செந்தூரக் குறுதிசொல்வேன்
குறிப்புடனே கருவாளி யறிவான்பாரு
ஆரமே காந்தமென்ற செந்தூரந்தான்
அப்பனே யானுரைப்பேன் அருமைதானே. 25

தானான செந்தூரப் போக்குசொல்வேன்
தன்மையுள்ள புலஸ்தியனே தம்பிரானே
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனார் யெந்தனுக்குச் சொன்னநீதி
தேனான பலகையென்ற காந்தமப்பா
தோற்றமுடன் றானெடுப்பாய் தெளிவதாக
மானான ஊசியது யிருபத்தொன்று
மன்னவனே பிடிக்கின்ற காந்தமாமே. 26

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

காந்தமாம் நீரதுவும் மொன்றேயாகும்
கருவான காரமது ரண்டேயாகும்
சாந்துபோல் தேன்விட்டு யரைப்பாயப்பா
சட்டமுடன் றானரைப்பாய் நாலுசாமம்
பாந்தளெனும் வெடியுப்பு செயநீர் தன்னால்
பக்குவமாய் தானரைப்பா யெட்டுசாமம்
ஆந்திடவே பில்லையது லெகுவாய்த்தட்டி
அப்பனே ரவிதனிலே காயப்போடே. 27

போட்டுமே மூன்றுநா ளானபின்பு
பொங்கமுடன் வச்சிரமாங் குகையில்வைத்து
நீட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து
நிகழ்ச்சியாய் சரவுலையில் வைத்துஷூது
தாட்டிகமாய் மூசையது அழுகுமட்டும்
சாங்கமுடன் ஊதியபின் னெடுத்துப்பாரு
மாட்டியாய்ச் சத்தெல்லா முருகியல்லோ
மன்னவனே யீயம்போ லிருக்கும்பாரே 28

இருக்கவென்றால் ஈயமதை பதனம்பண்ணு
யெழிலான செந்தூர மென்னசொல்வேன்
திருத்தமுடன் யீயமது பலமொன்றாகும்
தீர்க்கமுள்ள ரசமதுவும் பலமொன்றாகும்
பொருத்தமுள்ள கெந்தியது பலம்ரண்டாகும்
போக்கான வீரமது பலங்காலாகும்
நெருக்கமுள்ள துருசதுவு மரையேயாகும்
நெடிதான மனோசிலையுங் காலதாமே. 29

காலான சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டிக்
கவனமுடன் றானரைப்பாய் நாலுசாமம்
மாலான யாறுவகை செயநீர்தன்னால்
மார்க்கமுடன் பில்லையது லேசாய்தட்டி
பாலான ரவிதனிலே காயவைத்துப்
பாலகனே வச்சிரமாங் குகையில்வைத்து
தாலான சரவுலையில் வைத்துஷூது
சாங்கமுடன் யீயமது யிறங்கும்பாரே. 30

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

பாரேதான் யீயமதை பதனம்பண்ணு
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
பாலகனே வதன்போக்குக் கூறுவன்யான்
நேரேதான் காந்தமது யீயமானால்
நெடிதான கற்பமது சொல்லொண்ணாது
கூரேதான் கற்பத்துக் குறுதிசொல்வேன்
கொற்றவனே முறைபாடு வறியவேண்டும்
ஆரோதான் சொல்வார்க ளெனைப்போலப்பா
அப்பனே யானுனக்குச் சொன்னவாறே. 31

## தாளகயீயம்

வாறான புலஸ்தியனே வண்மைகேளு
வகுப்பான தாளகமும் சேரொன்றாகும்
கூறான துருசியது இரண்டதாகும்
குறிப்பான சிங்கியது சேரொன்றாகும்
மாறாமல் ரண்டையுந்தான் யரைப்பாயப்பா
மகத்தான வாறுவகை செயநீர் தன்னால்
வேறான செயநீரா லரைத்தபோது
வேகமுடன் சரக்கிரண்டு மடிந்துபோச்சே. 32

மடிந்ததொரு சரக்கதனை மைபோலாட்டி
மகத்தான தாளகத்துக் கங்கிபூட்டி
விடிந்ததொரு ரவிதனிலே காயவைத்து
வித்தகனே கற்சுண்ணஞ் சீலைசெய்து
நெடியதுதா னடங்கியதும் புடத்தைப்போடு
நேர்பான புடமதுவும் சரியேயாகும்
முடியான புடமதுவு மாறிப் பின்பு
முசியாமல் தானெடுக்க யீயமாமே. 33

ஈயமென்றா லீயமது யென்ன சொல்வேன்
யெழிலான நாதாக்கள் விள்ளாரப்பா
துய்யநல்ல யீயமது தாரயீயம்
துப்புரவாய் மாசற்ற யீயமாகும்
வெய்யபுகழ் நாதாக்கள் மறைத்தவங்கம்
வேதாந்தத் தாயாருக் குகந்தவங்கம்
பையவே தானெடுத்துப் பதனம் பண்ணு
பாரினிலே வெளியிட்டால் தலைதான் போமே 34

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போகுமே புலஸ்தியனே வெளியிடாதே
பொல்லாத கர்மியுண்டு பாவியுண்டு
ஏகியே யுனதிடத்திற் கைபாகத்தை
யெழிலாகத் தான்பறிப்பார் கபடத்தாலே
ஆகுமென்ற காரியங்க ளுள்ளமட்டும்
அப்பனே தாமிருப்பார் முன்னதாக
பாகுபதம் தெரிந்தாலோ யுன்னையப்பா
பாரினிலே மதியார்கள் திண்ணந்தானே, 35

திண்ணமாம் தாரமென்ற வங்கந்தன்னை
தீக்கமுடன் றானெடுப்பாய்ப் பலமதாக
வண்ணமுடன் காந்தமென்ற சத்துதானும்
வகையுடனே வங்கத்துக் கிரட்டியாகும்
எண்ணரிய வயத்தினிட சத்துதானும்
யெழிலாக காந்தத்துக் கிரட்டியாகும்
ஒண்ணாகத் தான்சேர்த்து துய்யபாலா
உத்தமனே மூசையிட்டு வுருக்கிடாயே. 36

உருக்கியே சத்தெல்லா மொன்றாய்க்கூட்டி
உத்தமனே தானெடுத்து செப்பக்கேளீர்
செருக்கியே கல்வமதி லிட்டுமைந்தா
சேர்க்கவே சரக்குவகை சொல்வேனப்பா
பெருக்கமுள்ள கெந்தகந்தான் ரெட்டிசேரு
பேரான சூதமது வதற்குப்பாதி
நெருக்கமுள்ள துருசதுவு மதற்குப்பாதி
நேர்மையுடன் சிங்கியது கூடக்கூட்டே. 37

கூட்டவே சிங்கியது வதற்குப்பாதி
குணமான மனோசிலையு மதற்குப்பாதி
தாட்டிகமாய் துத்தமது வதற்குப்பாதி
தனியான பூரமது வதற்குப்பாதி
நாட்டமுடன் வீரமது வதற்குப்பாதி
நலமான கார்முகிலு மதர்க்குப்பாதி
தேட்டமுள்ள கெவுரியது மதர்க்குப்பாதி
தெளிவான பாஷாணம் பாதிகூட்டே. 38

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாதியாம் பாஷாணம் மதற்குப்பாதி
பகருகிறேன் அரிதார மதற்குப்பாதி
சாதியாம் லிங்கமது வதற்குப்பாதி
சார்பான லிங்கசெந் தூரமப்பா
வேதியாம் மதியுப்பு வதற்குப்பாதி
வெண்காரம் படிகார மதற்குப்பாதி
ஆதியா முப்பூவும் களஞ்சிகூட்டி
அப்பனே கல்வமதி விட்டிடாயே. 39

இட்டதொரு சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி
யெழில்பெறவே கல்வமதி விட்டுமைந்தா
தொட்டதொரு சரக்கெல்லாம் பொடியதாக்கி
தோராமல் ஜெயநீரை விட்டேயாட்டு
பட்டதொரு சரக்கெல்லா மடிந்துபோகும்
பாலகனே யாறுவகை ஜெயநீரெல்லாம்
அட்டதிசை நாதாக்கள் மெய்ச்சவல்லோ
அப்பனே யெண்சாம மரைத்திடாயே. 40

அரைத்துமே ரவிதனிலே காயவைத்து
அசையாமல் மறுபடியும் பொடியதாக்கி
புரையளவும் போகாமல் ரவியில்வைத்து
புகழுடனே சரக்குதனை பதனம்பண்ணு
நிரையான காசியென்ற குப்பிதன்னை
நீட்சியுடன் தானெடுத்து சீலைசெய்து
குறையாமல் யெழுசீலை வலுவாய்ச்செய்து
கொற்றவனே ரவிதனிலே காயவையே. 41

காய்ந்தபின்பு குப்பிதனை யெடுத்துமைந்தா
கனமான மருந்ததனை குப்பியிட்டு
தோய்ந்தபொருள் சரக்கனைத்து மடைத்துமேதான்
துப்புரவாய் மாக்கல்லால் கொண்டுமூடி
ஆய்ந்தபதந் தன்னுடனே செப்பக்கேளீர்
அப்பனே களவாயாம் பாண்டந்தன்னில்
மாய்ந்திடவே மணலதனை பாண்டந்தன்னில்
மதிப்புடனே விரல்நான்கு வுயரம்போடே. 42

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போடவே குப்பிவாய் தெரியமூடி
பொங்கமுடன் மேர்ப்பாண்டங் கவிழ்த்துமேதான்
நீடவே வாலுகையா மேந்திரத்தில்
நீதியுடன் தானமைத்து செப்பக்கேளீர்
கூடவே ஜாமமது முப்பத்திரண்டு
குறிப்புடனே தாமெரிப்பாய் கமலம்போலே
ஆடவே சீர்மமது யெரிந்தபின்பு
அப்பனே பின்னும்வகை செப்பக்கேளே. 43

செப்பவென்றால் காடாக்கினி முப்பத்திரண்டு
தெளிவுறவே ஜாமமது யெரிப்பாய்மைந்தா
வொப்பமுடன் பட்சமென்ற நாள்தான்சென்று
வுத்தமனே மனோன்மணியை தியானஞ்செய்து
அப்பமென்ற பலகார வர்க்கத்தோடும்
அம்பிகையாள் பதாம்புயத்தை யஞ்சலித்து
யெப்போது மடியேனை காருமென்று
யெழில்பெறவே நைவேத்தியஞ் செய்திடாயே. 44

செய்துமே பாண்டமதைத் திறந்துபாரு
செப்பவென்றால் செந்தூர மருணன்போலாம்
வையகங்கள் தான்புகழும் ரிடிகள்சித்தர்
வளம்பெரிய நாதாக்கள் காணமாட்டார்
துய்யநல்ல செந்தூர மெவர்க்குக்கூடும்
துறைகோடி முறைகோடி தொந்தங்கோடி
பையவே புலஸ்தியனே பகருவேன்யான்
பாலகனே செந்தூரம் பதனம்பண்ணே. 45

பண்ணியே சமாதிமுகம் வைத்துப்போற்றி
பார்தனிலே யெவருக்கும் விள்ளவேண்டாம்
நண்ணியே யுந்தனிடம் ரிடிகள்தாமும்
நாதாந்த சித்தொளிவும் வருவார்பாரு
குண்ணியே யவர்தமக்கு தொண்டுசெய்நீ
கொற்றவனே இதிகாச வார்த்தைகூறுவார்
நண்ணியே நாதாந்த செந்தூரத்தை
நாட்டமுட னவர்பரிக்க நண்ணுவாரே. 46

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பரிக்கவே யவர்மனதி லெண்ணங்கொண்டு
பரிவான வார்த்தையது மிகவுங்கூறி
சிரித்துமே யுந்தனுக்கு யுபதேசங்கள்
செப்புவார் கோடியுக மிருக்கவென்று
பரிக்கமலம் வீற்றிருக்கும் தாயார்பாதம்
பட்சமுடன் யென்னாளும் வாழ்கவென்று
செருக்கமுட னஞ்சலிகள் செய்வாயென்று
செப்புவார் வுந்தமக்கு கோடியாமே. 47

கோடியாம் புலஸ்தியனே குணமுள்ளானே
கொற்றவனே யுந்தமக்கு கூறுவேன்யான்
நீடியே வுடல்பொருள்க ளாவியெல்லாம்
நிஷ்களங்க மாகவல்லோ தத்தஞ்செய்தேன்
தேடியதோர் பொருள்களெல்லா முந்தனுக்கு
தேற்றமுடன் பரம்பரியாய்க் கொள்வாயென்று
சூடியே யென்னாளும் சோரூபந்தன்னில்
சுடரொளிபோல் சுந்தரனே வாழ்வேன்பாரே. 48

வாழ்கவென்று மங்களங்கள் மிகவும்கூறி
மதிப்புடனே சிவராஜ யோகனென்று
தாழ்கவே யொருவருக்கு மஞ்சவேண்டாம்
சற்குருவின் குருபாதம் யெந்தநாளும்
ஆழ்கவே அம்பிகையாள் கிருபையாலும்
அம்பரத்தின் சொரூபநிலை தன்னிற்சென்று
மாழ்கியே போகாமல் மனம்விடாமல்
மாசற்ற நிலைதனிலே நில்லென்பாரே. 49

என்பாரே நாதாக்கள் சித்தர்தாமும்
யெழிலான இதிகாச வார்த்தைசொல்வார்
கன்மவினைக் காளாகி மிகப்போகாமல்
கபடின்றி யுலகுதனில் கண்ணியவானாய்
தென்பொதிகை நாயனிட கடாட்சத்தாலே
தேசொளிவின் சின்மயத்தி னருளினாலே
சன்மார்க்க நிலையறிந்து பதியிற்சென்று
சட்டமுடன் வாழ்கவென்று வரமீவாரே. 50

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வரமதுவு மிகத்தந்து கடாட்சங்கூறி
மன்னவனே யுனைப்போல சித்துமுண்டோ
சரமதுவு மறிந்தசித்து நீதானென்பார்
சற்குருவே பதப்பொருளே நீதானென்பார்
உரமுடைய கற்றூணும் நீதானென்பார்
வுத்தமனே சித்தருட புஜமேயென்பார்
நரமனித சித்தல்லோ வென்பார்பாரு
நாயகனே தேவசித்து என்பார்பாரே. 51

பாரப்பா தேவதா ரிடியென்பார்கள்
பார்தனிலே யவதார புருஷனென்பார்
ஆரப்பா மானிட சித்தோவென்பார்
அப்பனே ஆகாச சித்தோவென்பார்
நேரப்பா சித்தர்களின் கண்ணேயென்பார்
நேர்மையுள்ள தன்வந்திரி யிவர்தானென்பார்
கூரப்பா யாதொன்றுங் கூறவேண்டாம்
கொற்றவனே புலஸ்தியனே புத்திவானே. 52

புத்தியாய் தாமிருந்து புதல்வாகேளு
புங்கசித்து யெட்டுனக்குப் பொருந்தும்பாரு
சத்தியவான் யென்றுசொல்லி பேருண்டாகும்
தாரணியில் ராசாக்கள் மெய்ச்சும்சித்து
எத்திசையு மாண்பர்களும் யுன்னையப்பா
யெழிலாகத் தான்புகழ்வார் மாந்தரெல்லாம்
முத்தியது தான்கிடைக்கு முகில்வண்ணாகேள்
முதன்மையுள்ள சித்தனென்று சொல்லுவாரே. 53

## அப்பிரேக செந்தூரம்

சொல்லுகிறேன் புலஸ்தியனே யின்னங்கேளு
சுத்தமுள்ள பிரதாபா சுகுணமாரா
வெல்லவே நாதாக்கள் சொன்னநூலில்
வெகுதெளிவு வெகுமறைவு மெத்தவுண்டு
அல்லது தீர்ந்துமேதான் சாத்திரத்தை
ஆராய்ந்து பார்ப்பதற்கு யாராலாகும்
நல்லதொரு சித்தர்முனி ரிடிகள்தாமும்
நலமுடனே பாடிவைத்தார் கோடியாமே. 54

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

கோடியாம் புலஸ்தியனே குணமுள்ளானே
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
கூறுகிறேன் வப்பிரேகச் செந்தூரத்தை
தேடியே யாராய்ந்து பலநூல்பார்த்து
தெளிவுடனே கண்டறிந்த பாகமப்பா
நாடியே வப்பிரேகம் சேர்தானப்பா
நலமுடனே தானெடுத்து நவிலக்கேளு
பாடியே நீதமதைத் தூளதாக்கிப்
பாலகனே பாண்டமதி லிட்டிடாயே. 55

இட்டுமே மூலிகைதான் சொல்வேனப்பா
யெழிலான் வந்தரமா மூலியப்பா
தொட்டுமே சாற்பிழிந்து பாண்டமிட்டு
தோராமல் பட்சமது சென்றபின்பு
பட்டுமே கோணிதனி லிட்டுமைந்தா
பழுதறவே கிட்டணையால் பிழியும்போது
விட்டுமே கசடற்று நீதமப்பா
வீரமுடன் கசியுமது விளக்கம்பாரே. 56

விளக்கமாம் நவநீதம் தனையெடுத்து
வித்தகனே ரவிதனிலே காயவைத்து
களக்கமிலா கல்வமதி லிட்டுமைந்தா
கவனமுடன் வெடியுப்பு ரெட்டிசேர்த்து
துளக்கடன் வெடியுப்புக் காலதாகும்
துப்பற்ற வளயலுப்புக் காலதாகும்
பளக்கமுடன் கெந்தியது காலதாகும்
பாங்கான நிமிளையது காலதாமே. 57

காலான சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி
கண்ணான மைபோலே யரைப்பாயப்பா
மாலான வெள்ளெருக்கன் பாலினாலே
மகிமைபெற நாற்பதுநா ளரைத்தபோது
தூலான நவநீதம் வெண்ணெயாகி
துகளற்றுக் குற்றமது நீங்கியேதான்
சேலான மைதனக்கு வொப்பேயாகும்
செகந்தனிலே நீயுமொரு சித்தனாமே 58

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சித்தனென்றே சொல்வார்கள் செகதலத்தில்
செப்புகிறேன் மையதனை பில்லைதட்டி
சத்தியென்ற ரவிதனிலே காயவைத்து
சட்டமுடன் வகலிட்டு சீலைசெய்து
புத்தியுடன் ரவிதனிலே காயவைத்துப்
பொங்கமுடன் கெசபுடமாம் போடுபோடு
பத்தியுடன் புடமாறி யெடுத்துப்பாரு
பாலகனே மாசற்ற நீதந்தானே. 59

நீதமாம் நவநீத பற்பமாச்சு
நீடாழி யுலகுபதி யார்தான் செய்வார்
தோதமுடன் யிப்படியே பத்துமுறைபோடு
தோராத பற்பமது சிவந்துகாட்டும்
சாதகமாய் மறுபடியுங் கல்வமிட்டு
தப்பாமல் யாறுவகை செயநீர்தன்னால்
சூதமெனும் நவநீத ரசமுமப்பா
சுட்டெறிந்து சரக்கதுவுஞ் சிவக்கும்பாரே. 60

பாரேதான் யாறுவகை செயநீர்தன்னால்
பட்சமுடன் றானரைப்பாய் நாலுசாமம்
சீரேதா னரைத்தபின்பு பில்லைதட்டி
சிறப்புடனே ரவிதனிலே காயவைத்து
நேரேதான் காய்ந்தபின்பு தனையெடுத்து
நேர்மையுடன் சில்லிட்டு சீலைசெய்து
வேரேதான் குழிவெட்டி யாட்பள்ளந்தான்
வெட்டவெளி தன்னிலே புடத்தைப்போடே. 61

போடவே புடமதுவு மேதென்றாக்கால்
பொங்கமுடன் கெசபுடமாம் போடுபோடு
நீடவே புடமாறி யெடுத்துப்பாரு
நிகழ்ச்சியுள்ள செந்தூர மென்னசொல்வேன்
நாடவே யிப்படியே யைந்துபத்துபோடு
நலமான செந்தூரம் நவிலவொண்ணாது
கூடவே நாதாக்கள் சொல்லவில்லை
குணமான செந்தூரங் கூறொண்ணாதே. 62

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஒண்ணாது நாதாக்கள் செய்யமாட்டார்
ஓகோகோ புத்தியுளார் சிலரிருப்பார்
அண்ணார்ந்து பார்த்தாலே யவர்முடிப்பார்
அப்பனே வரம்பெற்றோர் முடிப்பார் பாரு
கண்ணான கண்மணியே புலஸ்தியாகேள்
காசினியில் முடிப்பவரே ஞானசித்து
திண்ணமுடன் யிப்பாகம் வெளிவிடாதே
தேசொளிவின் சின்மயத்தைப் போற்றிடாயே. 63

போற்றியே செந்தூரம் பதனம்பண்ணு
பொலிவான செந்தூரம் போகுமார்க்கம்
ஆற்றவே போகாது யெவராலுந்தான்
அப்பனே காயாதிக் குறுதிகற்பம்
மாற்றமென்ற யமனுக்குக் காலனாகும்
மன்னவனே முறைபாடு யானுரைப்பேன்
ஏற்றமுடன் வருந்துதற்கு யிதவுசொல்வேன்
யெழிலான செந்தூரப் போக்குகேளே. 64

போக்கான செந்தூர முண்பதற்கு
பொங்கமுடன் நாதாக்கள் கற்பம்போலே
தூக்கமது தனையகற்றித் துய்யபாலா
சுத்தமுடன் பாலுடனே யன்னமப்பா
வாக்கதுவும் பிசகாது வண்மையோடு
வளமையுட னாலுதிங்கள் பாலோடன்னம்
நீக்கவே புளிகார முப்புநீக்கி
நீதியுடன் தானுண்டு பழக்கஞ்செய்யே. 65

செய்துமே யிப்படியே வழக்கம்பார்த்து
செயலான கற்பமதை பின்னாலுண்ணு
துய்யநல்ல பாலோடு கற்பமுண்டால்
துப்புறவாய் காயமது சட்டைதள்ளும்
வெய்யவே முன்சொன்ன செந்தூரத்தை
விதிப்படியே யுண்பதற்கு வினயங்கேளு
மெய்யுரையாய் யொருவருக்கும் காட்டவேண்டாம்
மேதினியி லுண்பதற்கு பதத்தைக்கேளே. 66


CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேளப்பா புலஸ்தியனே கெணிதவானே
கெவனமுடன் கற்பமது கொள்வதற்கு
பாளப்பா போகாமல் விடைதான்பாரு
பாங்கான வயத்தினிட செந்தூரந்தான்
கோளப்பா நேராமல் வொன்றேயாகும்
குணமான காந்தத்தின் செந்தூரந்தான்
ஆளப்பா செந்தூர மறைகாலாகும்
அப்பனே அப்பிரேகங் கூறுவேனே. 67

கூறுவேன் அப்பிரேக மிருகாலாகும்
கொற்றவனே யிவையெல்லா மொன்றாய்க்கூட்டி
மாறுபடா விடைபாகஞ் சரியாய்க்கொண்டு
மன்னவனே நெல்விடைதா னனுபானத்தில்
வீறுடைய வனுபான மேதென்றாக்கால்
வித்தகனே நத்தையென்ற சூரிமூலி
தேரவே யாராய்ந்து சூரணித்து
தேற்றமுடன் அதில்வைத்து கொண்டிடாயே. 68

கொண்டிடவே வனுபான மேதென்றாக்கால்
கொற்றவனே தேனாகும் வெண்ணெய்யாகும்
திண்டிரைசூழ் தென்தேச மெத்தநன்று
திரைகடலி லத்தேசம் போலேயில்லை
பண்டுளப கிருஷ்ணாவ தாரனப்பா
பாங்குடனே கற்பமது வுண்டதேசம்
தொண்டுசெய்ய யுந்தமக்கு சீஷன்கண்டு
துவக்கமுடன் கற்பமது கொள்ளநன்றே. 69

நன்றான தேசமதிற் கற்பமுண்ணு
நலமுடனே யிருவேளை கொள்ளவேண்டும்
குன்றான மலையோரம் கண்டாராய்ந்து
குறிப்புடனே யந்திசந்தி திரியவேண்டும்
வென்றிடவே மூவாண்டு கற்பங்கொண்டு
வேதாந்தத் தாயாரை மனதிலுண்ணி
தென்றிசைவாழ் சித்தரைப்போல் பெயர்வகித்து
தேசொளிவின் சின்மயத்தைக் காண்பீர்தானே. 70

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தானான புலஸ்தியனே யுனக்கப்பா
தப்பாமல் காயாதி செந்தூரத்தை
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனார் சொன்னதொரு நீதிபோலே
தேனான கற்பத்தை யுண்டாலப்பா
தேகமது கற்றூணா யிரும்புமப்பா
பானான சூரியனும் சுடரேயில்லை
பாலகனே யுன்தேக மிரும்புமாச்சே. 71

இரும்பான தேகமது யென்னசொல்வேன்
எழிலான மகமேரு யென்னலாகும்
துரும்பான தேகமது கற்றூணாச்சு
சுந்தரனே யிந்திரனே சூட்சம்பாரு
கரும்பான வயிரம்போல் தித்திப்புண்டாம்
கசடில்லை நரையில்லை திரையுமில்லை
பெரும்பாண்ட மென்னுமொரு மண்ணின்பாண்டம்
பேரான யிரும்பென்ற பாண்டமாச்சே. 72

ஆச்சப்பா நாலுயுக மிருக்கலாகும்
அப்பனே காலனுக்கு யிடமுமில்லை
மூச்சடங்கி நெடுங்கால மிருக்கலாகும்
முன்னவனே சமாதிமுகஞ் செல்லலாகும்
மாச்சலது வாராது காயத்துக்கு
மண்மறைவி லெப்போது மடக்கங்கொள்ளும்
பாச்சலுடன் மூச்சமுந்தி யுகாந்தகாலம்
பாரினிலே யிருப்பதுவும் திண்ணமாமே. 73

திண்ணமாம் வரைகோடி யிருந்துமென்ன
தேசொளிவின் சின்மயத்தில் யடைந்துமென்ன
எண்ணமது பூமியாசை கொண்டுமென்ன
யெழிலான சித்தர்கட்கும் ரிஷிகளுக்கும்
நண்ணரிய நற்பொருளை நவிலயெண்ணி
நாதாந்த பதாம்புயத்தை மனதிலுன்னி
வண்ணமுடன் யெப்போதுஞ் சமாதிமார்க்கம்
வளமையுட னிருப்பதுவே சத்தியமாமே. 74

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## துருசு செம்புசுத்தி

சத்தியமாய்க் கூறுகிறேன் புலஸ்தியாகேள்
தாரணியில் கீர்த்திபெற்ற எந்தன் கண்ணே
நித்தியமும் நவகோடி ரிடிகள் தம்மை
நினைப்பதுவே யுந்தமக்கு நீதியாகும்
பத்தியுடன் பதினெண்பேர் சித்தர்பாரு
பட்சமுடன் நினைப்பதுவே வுறுதியாகும்
முத்தியது யுந்தமக்கு வாய்க்கும்பாரு
மூதுலகில் நீயுமொரு சித்தனாமே. 75

ஆமேதான் சொல்லுகிறேன் புலஸ்தியாகேள்
அப்பனே கண்மணியே புத்திவானே
நாமேதான் சொன்னபடி செம்புவாங்கு
நயமான துருசுனிட செம்புவாங்கு
போமேதான் வயப்பாண்டந் தனைத்துலக்கிப்
பொங்கமுடன் துரிசுதனைப் பொடியதாக்கி
சாமேதான் துருசதுவும் சாவதற்கு
சட்டமுடன் வகைசொல்வேன் தன்மைபாரே. 76

பாரப்பா துருசுபொடி தன்னைப்போடு
பாங்குபெற பனிசலத்தை யதிலேவாரு
நேரப்பா பூநீரை கொஞ்சம்போடு
நேர்மையுடன் துருசுக்கு நாலிலொன்று
ஆரப்பா கலக்கியதை மூன்றாம்நாள் தான்
அப்பனே கழுவியதை யெடுத்துமைந்தா
சேரப்பா படிகாரம் சாரம்சேரு
செம்மையுடன் ரசமதுவும் பாதிசேரே. 77

சேர்க்கவென்றால் யாறுவகை செயநீர்தன்னால்
செப்புகிறேன் நாற்சாம மரைக்கவேண்டும்
தீர்க்கமுடன் றானரைத்து மைபோலாட்டி
திகழாக வச்சிரமாங் குகையில்வைத்து
ஏர்க்கம்வ சில்லிட்டுச் சீலைசெய்து
யெழிலாக வுலையிலிட்டு வுருக்கிப்பாரு
மூர்க்கமுள்ள துருசதுவும் செம்பேயாகி
முனையான தங்கம்போ லிருக்குந்தானே. 78

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தானான செம்புதனைப் பதனம்பண்ணு
தகைமையுடன் தன்போக்கு கூறுவன்யான்
தேனான செம்புதனை தகடடித்து
செப்புகிறேன் அதன்போக்கு விபரங்கேளு
மானான கடலையென்ற புளிப்புதன்னை
யன்னவனே பூநீறு கூடக்கூட்டி
பானான மைபோல தானரைத்துப்
பாலகனே சிமிழ்தனிலே பதனம்பண்ணே. 79

பண்ணியே மெழுகுதனை தகட்டிற்பூசி
பளிங்குடனே தகட்டிற்கு கீழ்மேலாக
நண்ணமுடன் பூசியபின் காவிக்குள்ளே
நாதாக்கள் முறைபோல புடத்தைப்போடு
எண்ணரிய நற்பொருளாம் கனகசிங்கம்
யெழிலான திரைநீங்கி கசடகன்று
வண்ணமுள்ள பசும்பொன் போல் சோதிகாட்டு
மன்னவனே செம்புசுத்திக் கிணைவேறுண்டோ. 80

## வேதைமுகம்

உண்டான செம்புதனைப் பதனம்பண்ணு
வுத்தமனே யிதன்போக்கு கூறுவன்யான்
கண்டவர்கள் விடுவாரோ செம்பின்போக்கு
காசினியில் சித்தர்முனி ரிடிகள்வேதை
துண்டரிக மானதொரு கர்மிகட்கு
துப்புரவாய்க் காட்டாதே பாவமெய்தும்
அண்டரண்ட முனிநாதர் செய்யும்வித்தை
அப்பனே யுந்தமக்கா யுரைத்திட்டேனே. 81

இட்டேனே யொருவருக்கும் விள்ளவேண்டாம்
யெழிலான துருசுனிட மார்க்கந்தன்னை
பட்டதொரு மரம்போலே வைத்துக்கொண்டு
பாலகனே சீவனத்துக் கிடமதாக
நிட்டையிலே பூசைக்கு உதவியாக
நீதியுடன் சதாகால வஞ்சலுக்கும்
திட்டமுடன் நித்தியமும் பூசைவேத்தியம்
தீர்க்கமுடன் செய்வதற்கு வுறுதியாச்சே. 82

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆச்சப்பா யிச்செம்பை பதனம்பண்ணு
அப்பனே மதிநாலுக் கொன்றுதாக்கு
பாச்சவே வெள்ளியது பழுப்புமாகிப்
பாலகனே யேழுவய துள்ளபொன்னாம்
மாச்சலது வாராது பசுமை பொன்னாம்
மகத்தான நாதாக்க ளுகந்தபொன்னாம்
ஆச்சரிய மானதொரு பசுமைபொன்னாம்
அப்பனே துருசுனிட பொன்னுமாமே 83

பொன்னான பொன்னதுவும் பசுமைபொன்னாம்
பொங்கமுடன் பத்துக்கோர் தங்கஞ்சேர்த்து
தென்னவனே தானுருக்கி வாரடித்து
செப்புகிறேன் பூங்காவி தன்னிலப்பா
மன்னவனே யிப்படியே மூன்றுபுடம்போடு
மகத்தான பொன்னதுவும் தங்கமாச்சு
கன்னவனே யித்தங்க மென்னசொல்வேன்
காசினியில் நாதாக்கள் தங்கமாமே. 84

தங்கமாம் புடத்தங்கம் நயத்தங்கம்
தாரணியில் நாதாக்கள் மெச்சுந்தங்கம்
வங்கத்துக் கசையாத வரணதங்கம்
வளம்பெரிய நாதாக்கள் செய்யுந்தங்கம்
புங்கசித்தி பெற்றவற்கு வாய்க்குந்தங்கம்
புகழான விட்டகுறை யிருந்தோருக்கு
சிங்கமென்ற சிடிகையிது வாய்க்கும்பாரு
சீருலகில் மற்றவற்கு வாய்க்காதன்றே. 85

## வேதை முகம்

அன்றான செம்புக்கு போக்குசொல்வேன்
அப்பனே கெந்தியது நாலுக்கொன்று
தென்றிசையி லசுவனியார் சொன்னவாக்கு
தோற்றமுடன் தோராமல் மதியம்பூண்டு
குன்றான செம்புக்கு கிராசமீவாய்
கொற்றவனே யீய்ந்தபின்பு செப்பக்கேளீர்
வென்றிடவே வோட்டிவிட்டு யூதிப்போடு
வேதாந்தத் தாயினது செப்புமாச்சே. 86

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆச்சப்பா செம்புதனை பதனம்பண்ணு
அப்பனே வெள்ளிதனில் நூத்துக்கொன்று
மூச்சடங்கி யிருந்ததொரு தங்கச்செம்பை
முனையாகத் தானுருக்கி குருவொன்றீய
பேச்சொன்றும் நேராது தங்கச் செம்பால்
பேரின்ப நிலைதனையே காட்டுஞ் செம்பாம்
ஆச்சரிய மாகவல்லோ யெட்டுமாற்று
அப்பனே வேதைமுகங் காணலாமே. 87

காணலாம் கொட்டியதோர் விருச்சிகம்போல்
கனமான வயததுவு மெட்டேயாகும்
பூணலாம் வெகுகோடி யாபரணங்கள்
பூவுலகில் மாந்தர்முத லானோரப்பா
தோணவே தங்கமென்ற செம்பாலப்பா
தோற்றமுள்ள கருக்களெல்லாந் தானமைத்து
மாணமருங் கருவியுள்ள சிலைகள்தன்னை
மகிழ்ச்சியுடன் செய்வதற்கு பொன்னுமாச்சே. 88

ஆச்சப்பா பாண்டியனார் கருக்களெல்லாம்
அப்பனே யிச்செம்பால் செய்தார்பாரு
மூச்சடங்கி யிருந்ததொரு சித்தரெல்லாம்
மூதுலகில் வெகுகோடி விக்கினங்கள்
மாச்சலுடன் றானமைத்தார் லக்கோயில்லை
மானிலத்தில் சோழர்முத லிப்படியேயாச்சு
ஏச்சலின்றி யிப்பாக முடித்தார் சித்தர்
யெழிலான கலியுகத்தி லனேகந்தானே. 89

தானான தேசங்க ளனேக தேசம்
சட்டமுடன் றாமுடித்தார் விக்கினங்கள்
கோனான ராசாதி ராசர்தாமும்
கொற்றவனே யனேகம்பே ரயிக்கியமானார்
மானான மகமபதிகள் கோடியுண்டு
மன்னவனே யவர்களுமே யிந்தபாகம்
தேனான மனோன்மணியாள் கிருபையாலே
தெளிவுடனே முடித்தார்கள் திண்ணங்காணே. 90

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

காணவென்றால் தென்றிசையி லுள்ள கோயில்
கருவான தேவதாஸ் தலங்களெல்லாம்
வேணதொரு விக்கினங்கள் செய்துவைத்தார்
வேதையுள்ள துருசுனிட செம்பினாலே
கோணாமல் சித்துமுனி மெய்ச்சுதற்கு
கொற்றவனே வேணபடி யமைத்துவைத்தார்
பாணம்போ லிம்மருந்து வேதையாச்சு
பலிக்குமோ கர்மிகட்குப் பலிக்காதன்றே. 91

பலிக்கவே பாண்டியனார் சோழமன்னர்
பாலகனே புலஸ்தியனே பண்பாய்ச்சொல்வேன்
சொலிக்கவே துருசுனிட செம்புதன்னால்
சோழர்மூத லானோர்கள் கருவுகட்டி
கெலிக்கவே சிலைமுடித்தார் கோடிமாண்பர்
கேசரத்தில் சித்துமுனி யவர்தான்காண்பார்
பலிக்கவே யிவ்வேதை சித்தர்காண்பார்
பாருலகில் மற்றோரால் காணப்போமோ. 92

## துருசு செம்பால் குப்பிவேதை சூதமுகம்

போகுமே யின்னமொரு மாற்கஞ்சொல்வேன்
பொலிவான புலஸ்தியனே புண்ணியவானே
ஆகுமே யுந்தனுக்கு சூதவேதை
அப்பனே யானுரைப்பேன் அன்புள்ளானே
பாகுபதம் தப்பாமல் பாலாய் கேளாய்
பதிவுடனே சிமிழ்போலே குப்பியொன்று
வேகுதற்கு சூதமதைக் கொல்வதற்கு
விருப்பமுடன் சிமிழதனை செய்திடாயே. 93

செய்துமே சிமிழ்போலே திருகுண்டாக்கி
செப்புகிறேன் வதற்குள்ளாய் சூதமிட்டு
பையவே திருவல்கொண்டு மூடியப்பா
பாங்குடனே சாதமது வேகும்போது
வையவே சிமிழ்தனையே யதனிலிட்டு
வளமையுடன் ஆறியபின் னெடுத்துப்பாரு
துய்யநல்ல சூதமது மடிந்துமல்லோ
சுந்தரனே புட்டுபோ லிருக்கும்பாரே. 94

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

இருக்க வென்றால் செயசூத வெண்ணெயாச்சு
யென்மகனே புலஸ்தியனே யெழில்வல்லோனே
குருக்கமுள்ள சூதவுண்டை யென்னசொல்வேன்
குவலயத்தில் யாரறியப் போறாரப்பா
பெருக்கமுள்ள வேதையிது சொல்லொண்ணாது
பேருலகில் யாரறியப் போறாரப்பா
விருப்பமுடன் கைபாகஞ் செய்பாகத்தால்
வித்தகனே தான்முடித்தும் மகிமைகேளே. 95

கேளேதான் புலஸ்தியனே மச்சரேந்திரா
கெணிதமுள்ள குளிகையது யிதனாலாகும்
நாளேதான் போகாமல் நளினபாலா
நாதாந்த சித்தொளிவுக் குகந்தகண்ணா
வீளேதான் போகாமல் விண்ணின்மாரா
விற்பனனே செயசூதந் தன்னைத்தானும்
ஆளேகேள் படிகாரசுண்ணத்தாலே
அப்பனே சூதமதற் கவசஞ் செய்யே. 96

செய்யவே ஆறுவகை செயநீராலே
செப்பமுடன் றானரைத்துக் கவசஞ்செய்து
உய்யவே மண்மறைவில் புடத்தைப்போடு
வுத்தமனே செயசூத முறுகிக்காட்டும்
பையவே வைந்துபத்து புடமேபோடு
பாங்குடனே சூதமது யிறுகிக்கட்டும்
துய்யநல்ல வயமதுபோ லிறுகிக்கட்டும்
துப்புரவாய் சூதமது மணிபோலாமே. 97

மணியான மணியதுதான் யென்னசொல்வேன்
மகத்தான சின்மயத்தின் மணியேயாகும்
கணிதமுடன் கெவனமணி யென்னலாகும்
காசினியில் யாரறிவார் கெவனந்தன்னை
அணியான மணியதுவும் குளிகையாச்சு
அப்பனே அட்டதிசை யாவுங்காண்பாய்
துணிவுடனே வாயிலிட்டுக் குளிகைகொண்டால்
துப்புரவாய் ஆகாயம் காணலாமே. 98

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணலாம் புலஸ்தியனே கண்ணுள்ளானே
கருவிலமே சிவக்கொழுந்தே கடியபாலா
பூணலாம் குளிகையது கொண்டபோது
புகழான சித்தர்முனி யும்மையப்பா
வேணபடி யுபசார வண்மையோடும்
வேதாந்தத் தாயினது வருளினாலே
நீணவே யுந்தனைத்தான் விதியுங்கேட்டு
வித்தகனே மிகவருந்தல் செய்வார்பாரே. 99

பாரப்பா நாதாந்த சித்தானாலும்
பரிவாக முறைபேசி கதைகள் கூறி
ஆரப்பா வென்றல்லோ வபயஞ்சொல்லி
அப்பனே யெனக்கொன்றுந் தெரியாதென்று
நேரப்பா முகதாவி விதவுகூறி
நேர்மையுடன் குருகொடுத்த குளிகையென்று
சாரப்பா வவர்பேரில் பழிகள் சொல்லி
சாங்கமுடன் மனதுவந்து நடந்துகொள்ளே. 100

கொள்ளவென்றா லுந்தன்மேல் கோபம்நீங்கி
கொப்பெனவே யுந்தனக்கு கிருபைகூறி
எள்ளளவு முறைபாடுந் தெரியாதென்று
ஏற்றமுடன் மனோலயத்தை யறிந்தபின்பு
மெள்ளவே தன்றனக்கு சீஷனாக
மேன்மையுடன் றானமைக்க நினைவுகொண்டு
உள்ளபடி தாமறிந்த ஞானந்தன்னை
வுத்தமனே யுந்தமக்கு போதிப்பாரே. 101

போதிப்பார் ஞானோபதேசந்தன்னை
பொங்கமுட னுந்தமக்கு வுபதேசித்தால்
ஆதித்தன் சந்திரனும் நீர்தானென்று
அப்பனே யவர்பாதந் தாள்பணிந்து
சோதித்து யவர்மனதை மனதிலுன்னி
சுந்தரனே யிந்திரனே சுளுக்கறிந்து
பாதிமதி சடையணிந்த தம்பிரானே
பரமகுரு வந்ததென் பாக்கியந்தானே. 102

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தானான வார்த்தையது கூறும்போது
தண்மையுள்ள தம்பிரா னேதுசொல்வார்
கோனான வசுவனியார் தேவகோவே
கொற்றவனார் பாதத்துக் குகந்தபாலா
மானான மகவதியே மன்னாகேளீர்
மகத்தான ரசுவனியார் சீஷரல்லோ
தேனான வகஸ்தியனார் சீஷதேவே
தேற்றமுட னுந்தமக்கு குறைவாராதே 103

வாராது யென்றுமிக விதவுகூற்வார்
மன்னவனே தென்னவனே மதியம்பூண்டு
நேராது யுந்தன்மேல் கிருபைவைத்து
நேர்ப்புடனே சதாகாலம் வாழ்கவென்று
தோராம லுந்தனிட பதிவாழ்கென்று
துப்புரவாய் வாசீர்ம மிகவுஞ்சொல்லி
ஆராத வார்த்தையது யிதவுகூறி
அப்பனே யவர்கடந்து செல்வார்தானே. 104

## மேற்கூறிய சூதபாகத்தை செந்தூரித்தல்

செல்லவே யின்னமொரு போக்குசொல்வேன்
தெகிட்டாத கருவிலமே ஞானக்கண்ணே
கல்லாத கல்விமுறை தேர்ந்தபாலா
காமப்பால் கட்டறுந்த கரியவாணா
சொல்லாத வார்த்தைக்கு தடுக்குகூறா
சேடாச கலையறிந்த சுத்தவீரா
அல்லலது கொள்ளாத அன்புள்ளானே
அப்பனே யானுரைப்பேன் அதீதந்தானே. 105

தானான மன்னவனே தம்பிரானே
சாற்றுகிறேன் சூதவுண்டை குளிகைதன்னை
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனா ரெந்தனுக்கு யுரைத்தவண்ணம்
தேனான குளிகையது பலந்தானொன்று
செப்புகிறேன் கல்வமதி லிட்டுமைந்தா
கானான முப்பூவில் களஞ்சியொன்று
கண்மணியே தான்போட்டு அரைக்கக்கேளே. 106

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேளப்பா வெந்தியது சரியேயாகும்
கெணிதமுடன் துரிசியது காலதாகும்
நாளப்பா போகாமல் கல்வமிட்டு
நாயகனே யாறுவகை செயநீர்தன்னால்
மீளப்பா நாற்சாம மரைத்தபோது
மிக்கான மெழுகதுபோ லாகும்பாரு
தூளப்பா ரவிதனிலே காயவைத்து
துப்புரவாய் பொடியாகச் செய்திடாயே. 107

செய்துமே மேருவென்ற குப்பிதன்னில்
செப்புகிறேன் யெழுசீலை வலுவாய்ச்செய்து
துய்யநல்ல மருந்ததனைக் குப்பிக்கிட்டுத்
துப்புரவாய் மாக்கல்லால் கொண்டுமூடிப்
பையவே மண்பாண்டந் தன்னிலப்பா
பக்குவமாய் மணலதனைப் பாண்டமிட்டு
வெய்யவே நடுமையம் குப்பிவைத்து
மேன்மையுடன் மேலுமந்த மணலைக்கொட்டே. 108

கொட்டியே மேற்பாண்டம் தானுமூடி
கோபாலா சீலையது வலுவாய்ச்செய்து
நெட்டடா வாலுகையா மேந்திரத்தில்
நேர்மையுடன் றானமைத்து தீயைமூட்டி
திட்டமுட னிருபத்து நான்குசாமம்
தீர்க்கமுடன் றானெரிப்பாய் கமலம்போலே
சட்டமுடன் யெரிந்தபின்பு பட்சஞ்சென்று
தயாபரனே மனோன்மணியைத் தியானம்பண்ணே. 109

பண்ணவே மனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள்
பாலகனே பாண்டமதைத் திறந்துபாரு
திண்ணமுடன் செந்தூர மென்னசொல்வேன்
திகழான வருணன்போல் சொலிக்கும்பாரு
கண்ணபிரான் கொண்டதொரு செந்தூரந்தான்
காசினியில் சித்தருக்குத் தெரியலாகும்
நண்ணமுடன் செந்தூரம் பதனம்பண்ணு
நாதாக்கள் கண்டாலே தொடர்வார்பாரே. 110

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா செந்தூரம் வெள்ளிவீட்டாத்தே
பார்தனிலே வெகுமாண்பர் யுந்தன்மீது
சேரப்பா சினேகிதன்போல் வந்திருப்பார்
தேசொளிவின் சின்மயத்தைக் காட்டுவன்போல்
பேரப்பா யுன்தேச மெந்ததேசம்
பேருறையு மென்றல்லோ பிரட்டுகூறி
ஊரப்பா யெந்நாடு யெந்தசீர்மை
யென்றல்லோ யுந்தனையும் கேட்பார்காணே. 111

கேட்பாரே யாமானால் நீயுமப்பா
கெவனமது தடுமாறி மனதுகுன்றி
சூடப்பா யெமதருகில் வருகவென்று
சுந்தரனே மெய்ஞ்ஞான வார்த்தைசொல்வீர்
பாடப்பா வானாலும் நாங்கள் செய்வோம்
பார்த்திபனே சொல்லென்று முறையைக்கேட்பார்
கூடப்பா யெந்தனுக்கு முறைதானேது
கொற்றவனே யறியேனென் றாணைசெப்பே. 112

செப்பவென்றால் ஆணையது செப்பும்போது
செகதீசா யுந்தனைவிட் டேகுவார்கள்
ஓப்பமுடன் செந்தூரந் தன்னையப்பா
வுத்தமனே முறைபாடு சொல்வேனப்பா
தப்பிதங்கள் வாராமல் துய்யமைந்தா
தயாபரனே வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
அப்படியே தான்கொடுத்து வுருக்கிப்பாரு
அப்பனே வயததுதான் காணார்பாரே. 113

பாரேதான் மருந்தீய்ந்த வெள்ளிதனை
பாலகனே துலமதுவாய் தானெடுத்து
சீரேதான் செம்புதனில் நூற்றுக்கொன்று
செப்புகிறேன் ரவியுருக்கிக் கொடுத்தாயானால்
நேரேதான் செம்பதுவும் மாற்றோபத்து
நேர்மையுடன் கூறுதற்கு நாவேயில்லை
கூரேதான் வாரடித்துப் புடத்தைப்போடு
குறிப்பான தங்கமது யிருபத்தைந்தே. 114

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

இருபது ஐந்தல்லோ மாற்றேயப்பா
யென்னசொல்வேன் தங்கமது மெழுகுதங்கம்
ஒருபோது மானிடர்கள் காணமாட்டார்
ஓகோகோ நாதாக்கள் காணவல்லார்
சொருபமென்ற ரிடிசித்தர் செய்யுந்தங்கம்
சேடனால் கூறவும் நாவுமில்லை
அருபமுள்ள வேதையிது சொல்லொண்ணாது
அப்பனே யாமுனக்கு சொன்னதாச்சே. 115

ஆச்சப்பா யித்தங்கம் வெளிவிடாதே
அண்ணலே யுந்தமக்குச் சொன்னவாற்போல்
முச்சடங்கி நெடுங்கால மிருந்துகொண்டு
முன்னோர்கள் ரிடிநாதர் சித்துதம்மை
பாச்சலுடன் வனங்களெல்லாந் திரிந்தாராய்ந்து
பட்சமுடன் யவர்களுக்கு யேவல்பூண்டு
மாச்சலது நேராமல் பணிகள் பூண்டு
மன்னவனே வணங்கியுப சாரஞ்செய்யே. 116

சாரமென்றால் சாரமது யென்னசாரம்
சட்டமுடன் னாதாக்கட் குகந்தசாரம்
நேரமில்லா சாரமது பணியோபசாரம்
நித்திலங்கும் பூமுடியே நிகழ்த்துவேன்யான்
சோரமின்றி கபடமின்றி சூதுமின்றி
சொல்லுதற்கு யேவலுக்கு முன்னாய்வந்து
தீரமுடன் வஷ்டாங்க யேவல்சாரஞ்
திறமுடனே செய்துமல்லோ கீர்த்திவாங்கே. 117

வாங்கியே செந்தூரங் கொடுக்கவேண்டாம்
வளம்பெரிய நாதாக்கள் கெஞ்சுவார்கள்
ஏங்கியே போகாதே யெந்தன்மாரா
யெழில்விஜைய பூபாலா கற்பேந்திராகேள்
தூங்கியே திரியாதே தூயபாலா
துறையான வழிதனிலே துணிந்துமேதான்
சாங்கமுடன் சன்மார்க்க நிலையிற்சென்று
சட்டமுடன் நயம்பொருந்த கீர்த்திகொள்ளே. 118

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளவே வித்தையது சொல்லவொண்ணாது
கொற்றவனே யிந்திரனே வுன்போலுண்டோ
உள்ளபடி லோகத்து நாதருக்கும்
வுகந்ததொரு சீஷருக்கு முண்மைவானாய்
கள்ளமின்றி நடந்துமல்லோ கசடகன்று
காசினியில் நெடுங்காலம் கற்பமுண்டு
எள்ளவும் பிசகின்றி வார்த்தைகூறி
யெழிலான சின்மயத்தைப் பணிந்துபோற்றே. 119

போற்றியே சதாகாலம் தாயார்பாதம்
பொன்னடிக்குத் தெண்டனிட்டு சிரங்குனிந்து
சீற்றமுடன் நரைதிரைக ளற்றுமேதான்
சிதாபாசக் களையதனை சீராராய்ந்து
நாற்றமுள்ள சடலமதை மண்ணிற்செல்லா
நயமுடனே வாசியோகஞ் செய்துகொண்டு
தேற்றமுடன் தேசமெல்லாங் குளிகை பூண்டு
தேசொளிவின் பிரகாசம் பெறுவீர்காணே. 120

## தீரும் வியாதி

தானான பிரகாச மானபூபா
தயவுள்ள புலஸ்தியனே தம்பிரானே
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனா ரெந்தனுக்குச் சொன்னநீதி
தேனான செந்தூரங் கொண்டபேற்கு
தேற்றமுடன் தீருகிற வியாதிகேளு
பானான ரோகமெல்லாம் பேருரைப்பேன்
பாலகனே கண்மணியே கேளுகேளே. 121

கேளப்பா வாயுவென்ற தெண்பதும்போம்
கெடியான பித்தமது நாற்பதும்போம்
வாளப்பா சேத்துமங்கள் தொண்ணூற்றாறும்
வளம்பெரிய சூலைபதி னெட்டுந்தீரும்
மீளப்பா கிரந்திபதி னெட்டும்போகும்
மிக்கான வயிற்றுவலி யிருபதும்போம்
ஆளப்பா குன்மமென்ற தெட்டும்போகும்
அப்பனே பாண்டுவகை யாறும்போமே. 122

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போமேதான் செயம்பதி னெட்டும்போகும்
பொல்லாத யிருமலது வாறுந்தீரும்
ஆமேதான் வயித்துநோ யிருபத்தொன்றும்
அப்பனே செவிநோய்க ளொன்பதும்போம்
நாமேதான் காசமது யெட்டுந்தீரும்
நலமான கண்ணோய்கள் தொண்ணூற்றாறும்
வேமேதான் வுளமாந்தை யாறுந்தீரும்
வேதாந்தத் தாயினது கடாட்சம்பாரே. 123

பாரேதான் புலஸ்தியனே பண்புள்ளானே
பாலகனே மச்சகேந்திரா மதிவல்லோய்கேள்
கூரேதான் சூதகத்தின் வாயுவுதீரும்
குறிப்பான கழல்வாதம் நான்கும்போகும்
நேரேதா னிடுப்புவலி யாறும்போகும்
நெடிதான வோக்காள மெட்டுந்தீரும்
வீரேதான் மலட்டுவலி யொன்பதும்போம்
வியர்வான குடல்வலிக ளாறும்போமே. 124

ஆறான சுவாசமது யெட்டுந்தீரும்
அப்பனே நாசிநோ யாறும்போகும்
தூறான கரவாத சன்னிநான்கும்
துலையாத பௌத்திரமு மெட்டும்போகும்
கூறான மூலமது வாறும்போகும்
குறிப்பான கிராணியது யெட்டுந்தீரும்
மாறான பீனிசங்க ளெட்டுமாறும்
மகத்தான மண்டையிடி நான்கும்போமே. 125

நான்கான தலைவலிக ளாறும்போகும்
நலமான பிறவீச்சு வாறும்போகும்
மேன்மையுடன் கண்கூச்சம் வெளிச்சமாறும்
மிக்கான படைகள்பதி னாறும்போகும்
வான்பான குஷ்டம்பதி னெட்டும்போகும்
மகத்தான கவுசிகமா வாறும்போகும்
நோன்பான ரோகமது சொல்லொண்ணாது
நொடிக்குள்ளே தீருமடா திண்ணந்தானே. 126

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

திண்ணமாம் நோயதனை பிரிக்கவென்றால்
தீர்க்கமுடன் பெருநூலும் யிடங்கொள்ளாது
வண்ணமுள்ள வியாதிக்கு ரூபஞ்சொல்ல
மகத்தான நாதாக்கள் தன்னாலாகா
எண்ணறிய நற்பொருளா மவிழ்தங்கோடி
யெழிலான வியாதிக்கு லக்கோயில்லை
பண்ணவே பிரமலபி கடந்தோன்செய்வான்
பாருலகில் யாராலுஞ் செய்யொண்ணாதே. 127

ஒண்ணாது பெருநூலில் யெல்லாங்காண
வுத்தமனா ரசுவனியாந் தேவர்தாமும்
நீண்ணமுடன் யெந்தனுக்கு சொன்னவாக்கு
நலமுடனே யானுமல்லோ வுபதேசித்தேன்
அண்ணலெனும் பராபரியாள் தாயாராலே
அப்பனே யுந்தமக்கு போதித்தேன்யான்
கண்ணபிரான் தன்னருளால் ஞானமெல்லாம்
கடுகளவும் பிசகாமல் கழறினேனே. 128

பிசகொன்றும் நேராமல் புண்ணியபாலா
பிரியமுட னுந்தமக்குப் போதித்தேன்யான்
நசகாண்டம் தன்னிலே நுணுக்கஞ்சொன்னார்
நாதாந்தச் சித்தொளிவு மறைத்தாரப்பா
தசகாண்ட மிருகாண்டம் பனிரெண்டுக்குள்
சாற்றினேன் வெகுகோடி மகிமையெல்லாம்
நிசமுடனே நம்பினோர்க் கெல்லாஞ்சித்சி
நீடூழி காலம்வரை யிருப்பார்காணே. 129

காணவே பரஞ்சுடரைக் காணலாகும்
காசினியி லனந்தமதாய் மகிமைகாண்பீர்
தோணவே பொருள்களெல்லா மிதிலேதோயும்
தோற்றமுடன் சின்மயத்தைக் காணலாகும்
மாணவே கும்பத்தி லிருந்துகொண்டு
மகத்தான பூரணத்தை படையலாகும்
வேணபடி கருவிகர ணாதியந்தம்
வித்தகனே யிந்நூலிற் காண்பாய்தானே. 130


CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
காண்பதற்கு ஐயமில்லை யிந்தநூலில்
கற்பகம்போல் மனோன்மணியாள் பாதங்காண்பீர்
சாண்ணுடலம் பிறவியது யில்லையப்பா
சாங்கமுடன் சதாநிஷ்டை கொள்ளலாகும்
மாண்மையுடன் சமாதிமுக மிருந்துகொண்டு
மகத்தான பிறவியது யறுக்கலாகும்
வீண்பருடன் கூடாமல் வீணாயப்பா
விதிகாசப் பொருளதனை மறந்திடாதே. 131

மறந்தாக்கா லுந்தமக்கு வொன்றுமில்லை
மகத்தான பொருளெல்லா மிதிலடக்கம்
கறந்தபால் போலாக கவிவல்லோனே
கட்டிவைத்த பலநூல்க ளனந்தங்கோடி
துறந்துமே யடியேனும் பதாம்புயத்தை
துப்புரவாய் மிகவாய்ந்து பொருளறிந்து
சிறந்ததொரு நூலாக பெருநூலாக
செப்பினேன் பனிரண்டு காண்டமாமே 132

காண்டமா மிந்நூல்போல் யனேகஞ்சித்தர்
கட்டிவைத்தார் வெகுகோடி நூல்களப்பா
ஆண்டுமிக யுககோடி கற்பமுண்டு
அன்புடனே சாத்திரங்கள் பாடிவைத்தார்
தூண்டுமணி போலாக யிந்தநூலை
துறட்டியெனுங் காந்தம்போல் திரட்டினேன்யான்
மீண்டபொருள் இதிற்காண லேசாயுண்டு
மிக்கான பழம்பொருளாம் வேதமாமே 133

வேதமாம் வேதாந்தப் பொருள்களெல்லாம்
மேன்மையுட னின்னூலில் அடக்கமாகும்
போதமாம் சித்தர்முனி ரிடிகள்தாமும்
பொங்கமுட னென்னாளும் போற்றுநூலாம்
ஆதவனா ரருளாலே யெந்தனுக்கு
அப்பனே விட்டகுறை யிருந்ததாலே
நீதமுட னுந்தமக்கு யிந்தநூலும்
நீதியுடன் போதிக்க காலமாச்சே. 134

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆச்சப்பா புலஸ்தியனே அன்புள்ளானே
அரியரிடி நாதர்முனி போற்றும்பாலா
மூச்சடங்கி யிருந்தாலும் யிந்தநூலை
முன்னயாக மறுபடியும் பூமிதனில்
பாச்சலுடன் வந்ததொரு சித்துநாதா
பரிவாக விந்தநூல் காண்பாரப்பா
மாச்சலது நேராது யின்னூல்பார்க்க
மன்னவனே யுலகிலுள்ளோர் மாண்பர்பாரே. 135

பாரேதான் நான்குயுகம் சதுருகத்தில்
பாலகனே வெகுகோடி சித்துநாதர்
வேரேதான் ரிடிகள்நவ கோடிமாண்பர்
வேதாந்த மாண்பர்களு மிருந்தார்பாரு
ஆரோதா னிவ்வளவு யிதிகாசங்கள்
அப்பனே நூல்செய்தா ருண்டோபாரில்
நீரோதான் முன்செனமக் குறையினாலே
நிகழ்ச்சியுடன் காண்பதற்குக் காலமாச்சே. 136

காலமாம் கண்டாலு முந்தமக்கு
காசினியில் கற்பமது வுண்டுமல்லோ
சீலமுடன் பிறவியது யில்லாமற்றான்
செகந்தனிலே நெடுங்கால மிருக்கலாகும்
பாலனவன் போலாக சதாகாலந்தான்
பாரினிலே யோகத்தி லிருக்கலாகும்
மூலமது காணாமல் வெகுகோடிமாண்பர்
உத்தமனே யோகநிலை விட்டார்காணே. 137

விட்டாரே வெகுகோடி மாண்பர்தாமும்
வீணிலே பட்டலைந்து யறிவுகெட்டு
நட்டமது தெரியாமல் நானிலத்தில்
நரககெதி யடைந்துமேதா னாசமானார்
சுட்டலைந்து நூல்பார்த்து துறைகாணாமல்
சுடரொளியைப் பாராமல் சுருண்டுபோனார்
பட்டமது போலலைந்து பாருக்குள்ளே
பரமகெதி யடையாமல் மாண்டார் தாமே. 138

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தாமான புலஸ்தியனே தம்பிரானே
தண்மையுள்ள குருபாலா தயவுள்ளானே
வேமான மானதொரு கருவியெல்லாம்
வேற்றுமைக ளெண்ணாமல் யுந்தமக்கு
சாமானிய மானதொரு பொருளையெல்லாம்
சாற்றினேன் யுந்தமக்கு தன்மைபூண்டு
நாமேதான் போதித்தேன் வலுவுள்ளானே
நயம்பெறவே சீஷனுக்கும் போதிப்பாயே. 139

போதிக்க யின்னமொரு மர்மம் சொல்வேன்
பொங்கமுடன் மனதறிந்து வாக்கறிந்து
சாதிக்க வல்லவனாய் சுட்டெரிந்தோன்
தக்கவகை நிலையறிந்தோன் சாதுவுள்ளோன்
ஆதித்தன் சந்திரன்போல் பிரகாசிப்போன்
அப்பேனே குணபாடு தாமறிந்து
சோதியுடன் மனோன்மணியாள் தாயார் பாதம்
சுடரொளியை போற்றுகின்ற தூய்மை யோர்க்கே 140

தூய்மையாய் வழிபாடு தாமறிந்து
சுத்தமுள்ள வன்பனுக்கு போதிப்பாய்நீ
வாய்மைகொண்டு வீணாக மற்றவர்க்கு
வளமையுள்ள சாத்திரத்தை வெளியிடாதே
மாய்கையது நீக்காத துரோகியுண்டு
மானிலத்தில் யவர்கள்தம்மை விட்டகற்றி
ஆய்மைகொண்டு நெடுங்காலம் காக்கவைத்து
அப்பனே அதன்பிறகு சாதிப்பீரே 141

சாதித்தா லுந்தமக்கு மோட்சமுண்டு
சட்டமுடன் நெடுங்காலங் கீர்த்தியுண்டு
வாதிக்க யாவரையும் தூஷணிக்க
வையகத்தில் தீயனென்ற பேரேவேண்டாம்
சோதியெனும் பரஞ்சுடருங் காணலாகும்
தோஷமது சற்றேனும் தொடராதப்பா
மேதினிக்குள் சித்தரெல்லா முன்னையப்பா
மேன்மையுடன் நெடுங்காலம் வந்திப்பாரே. 142

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வந்திக்க வுலகுபுதி சீமானப்பா
மன்னவனே துதியோடு வாசீர்மிபபார்
நிந்திக்க யெவராலு முடியாதப்பா
நிஷ்களங்க மானதொரு சொரூபியென்யார்
சிந்தித்து சடாட்சரப் பொருளையப்பா
சின்மயத்தால் தானொடுக்கி சினங்கொள்ளாமல்
பந்தனையாய் சதா நித்தஞ் சஞ்சரித்துப்
பாலகனே நெடுங்காலம் வாழ்வீர் தாமே. 143

தாமான புலஸ்தியனே சாற்றுரேன்கேள்
தண்மையுள்ள பூபாலா தருமசீலா
வேமேதான் பதினெண்பேர் சித்தர்தாமும்
வெகுவெகுவாய் பாடிவைத்தார் அனந்தமார்க்கம்
நாமேதான் சொன்னபடி சித்தர்கோடி
நாதாக்கள் கூறினதோ ரனந்தங்கோடி
காமேதான் மறைத்துவைத்தார் கோடாகோடி
காசினியில் விள்ளாமல் மறைத்தார்பாரே. 144

பாரேதான் புலஸ்தியனே பண்புள்ளானே
பகருகிறேன் நாதாக்கள் கூறவில்லை
நேரேதான் துருசுனிட போக்குசொல்வேன்
நெடியான கண்டருட பெருமைமெத்த
வீரேதான் காரமது சொல்லொண்ணாது
விட்டகுறை யிருந்தாலே லபிக்கும்பாரு
சீரேதான் யெனதைய ரசுவனியாந்தேவர்
சிறப்புடனே யெந்தனுக்கு சொன்னவாக்கே. 145

## துருசு போக்கு

வாக்கான துருசுனிட போக்குசொல்வேன்
வளமான துருசதுதான் சேர்தானொன்று
போக்கான துருசதுவும் கொண்டுவந்து
பொன்னவனே தேனதிலே சுருக்குகாட்டு
தூக்கான தேனதுதான் சேர்தானொன்று
துப்புரவாய் சுருக்கதுதான் கொடுத்தபின்பு
நோக்கான பூநீறு தன்னிலப்பா
நொய்யவே தானரைப்பாய் சாமம்நாலே. 146

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

நாலான வாறுவகை செயநீர்தன்னால்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
நலமுடனே தானரைப்பாய் மைபோலாக
பாலான பூநீறு வெண்ணைதன்னை
பாலகனே தானெடுத்து கவசஞ்செய்து
மாலான ரவிதனிலே காயப்போடு
மன்னவனே காய்ந்தபின்பு செப்பக்கேளீர்
சூலான சரக்குக்கு சீலையேழு
சுத்தமுடன் வோட்டிலிட்டு சீலைசெய்யே. 147

சீலையது காய்ந்தபின்பு தெளிவுள்ளானே
செப்புகிறேன் கோழியென்ற புடத்தைப்போடு
காலைதனில் புடம்போடு கருவுள்ளானே
கண்மணியே பிசகொன்றும் நேராதப்பா
மாலைதனில் யெடுத்துப்பார் மச்சகேந்திரா
மன்னவனே கண்டரோ யென்னசொல்வேன்
வாலைதனை பூசித்து வலுவுள்ளானே
வணங்கியே துபமிட்டு யெடுத்துப்பாரே. 148

பார்க்கையிலே பற்பமது யென்னசொல்வேன்
பாலகனே கூறுதர்க்கு நாவோயில்லை
தீர்க்கமுள்ள காரமது சொல்லொண்ணாது
சொன்னாலும் நாவதுதான் வெந்துநீறும்
மூர்க்கமுள்ள கண்டரவர் முடங்கிப் போறார்
முன்னோர்கள் நாதாக்கள் மறைத்துவைத்தார்
ஏற்கவே யிப்பாக முந்தமக்காய்
எழிலுடனே யுபதேசஞ் செய்தவாறே. 149

## சுன்னத் தொந்தம்

வாறான சுன்னமது யென்னசொல்வேன்
மகத்தான போக்குக ளனந்தஞ்சொல்வேன்
கூறான சுன்னத்தைக் களஞ்சியப்பா
குறிப்பான வெடியுப்புக் கங்கிபூட்டி
நீறான வாறுவகை செயநீர்தன்னால்
நிஷ்களங்க மாகவல்லோ வரைத்துமேதான்
ஆறான வெடியுப்புக் கங்கிபூண்டு
அப்பனே ரவிதனிலே காயப்போடே. 150

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போட்டபின் புகேவாடியிட்டு சீலைசெய்ய
பொங்கமுடன் கோழியென்ற புடத்தைப்போடு
வாட்டமுடன் புடமாறி யெடுத்துப்பாரு
வளம்பெரிய நாதாக்கள் செய்யும்வேதை
நீட்டமுடன் சுன்னமதை பதனம்பண்ணு
நீணிலத்தி லிருக்கின்ற சரக்குக்கெல்லாம்
தாட்டிக மானதொரு காலனப்பா
சாங்கமுடன் பற்பமதை பதனம்பண்ணே. 151

பண்ணவே வெடியுப்பு சுன்னந்தன்னை
பாலகனே சூதமதற் கங்கிபூண்டு
வண்ணமுடன் சூதமது துலமேயாகும்
வாகான வெடியுப்பு சுன்னமப்பா
நண்ணமுடன் குன்றியது தானெடுத்து
நலமுடனே வுமிழ்நீரால் மத்தித்தேதான்
சுண்ணமதை மூசையிட்டு சூதம்விட்டு
துப்புரவாய் சில்லிட்டு சீலைசெய்யே. 152

செய்யவே சீலையது வலுவாய்ச்செய்து
செப்புகிறேன் சரவுலையில் வைத்துஹூது
துய்யநல்ல சூதமது துய்யவெள்ளை
துப்புரவாய் யெவராலுங் கூறவொண்ணா
மெய்யான பற்பமது காரமெத்த
மேதினியில் யாராலும் குற்றங்கூறா
அய்யனே புலஸ்தியனே யன்புள்ளானே
அவனிதனில் சித்தர்முனி செய்வார்பாரே. 153

பாரேதான் பற்பமதை யெடுத்துமைந்தா
பாலகனே நாகமென்னுங் கட்டிக்கப்பா
நேரேதான் துலமதுவும் யெடுத்துபாலா
நெடிதான பாளம்போல் தகடதாக்கி
கூரேதான் சூதமென்ற பற்பந்தன்னைக்
கொற்றவனே யரிசிடை யுமிழ்நீராலே
வேரேதான் கைதனிலே மத்தித்தேதான்
வேகமுடன் நாகத்துக் கங்கிபூட்டே. 154

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

பூட்டியே ரவிதனிலே காயப்போடு
புகழான நாகமதை யெடுத்துப்பாலா
நாட்டமுடன் வோட்டிலிட்டுச் சீலைசெய்து
நலமுடனே கவுதாரி புடத்தைப்போடு
வாட்டமுடனே பற்பமது யென்னசொல்வேன்
வளமான கடுங்காரச் சுன்னமாச்சு
தேட்டமுள்ள நாகமென்ற சுனனமப்பா
தெளிவான காரமென்ற சுன்னமாச்சே. 155

ஆச்சப்பா சுன்னமதை யெடுத்துபாலா
அப்பனே கனகமென்ற காரீயந்தான்
பாச்சவே களஞ்சிக்கு அரிசுபோடே
பாங்குபெற மூசையிட்டு வுருக்கித்தீரு
வீச்சுடனே கருநாக முருகியல்லோ
வித்தகனே பற்பமதாய் நீறிப்போகும்
மூச்சடங்கி நாகமது தவளம்போலாம்
மூதுலகில் யாரேனுங் காணார்தாமே. 156

காணாரே கருநாகச் சுன்னமப்பா
கண்மணியே கருவிலமே கவிராஜேந்திரா
தோணாத சரக்கல்லோ யீயமப்பா
தோற்றமுடன் சித்தரிடி கண்டாலேகார்
பூணாத சரக்கெல்லாம் பூணலாகும்
புங்கசித்தி யெட்டுவிளை யாட்டுமார்க்கம்
கோணாமல் சரக்கெல்லா மாடலாகும்
கோபாலா யிம்முறையை வெளிகாட்டாதே. 157

காட்டாதே கைமறப்பைக் காட்டினாக்கால்
காசினியில் யெல்லவரும் சித்தாய்ப்போவார்
ஆட்டாத சரக்கெல்லா மின்னஞ்சொல்வேன்
அப்பனே புலஸ்தியா மச்சகேந்திரா
நாட்டமுள்ள வெள்வங்கம் பலமதாகும்
நயமுடனே சுன்னமது நெல்லிடைதானாகும்
தேட்டமுட னுமிநீரால் மத்தித்தேதான்
செவ்வையுடன் வெள்வங்க மங்கிகாணே. 158

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணவே வங்கியது மிகவாய்ச்செய்து
கண்மணியே ரவிதனிலே காய வைத்துப்
பூணவே யோட்டிலிட்டுச் சீலைசெய்து
புகழாக கோழியென்ற புடத்தைப்போடு
வேணபடி குழிவெட்டிப் புடத்தைப்போடு
வேகமுடன் வங்கமது நீறப்போகும்
பாணம்போல் சுன்னமது யென்னசொல்வேன்
பாலகனே குருபற்ப மென்னலாமே. 159

என்னவே பற்பமதை தானெடுத்து
யெழிலாக சிமிழ்தனிலே பதனம்பண்ணு
துன்னவே பற்பமதை குருவாயெண்ணி
துப்புரவாய் யின்னம்வெகு போக்குசொல்வேன்
நன்னயமாய் சிங்கியது மிருதார்சிங்கு
நலமுடனே துலமதுவாய் நிறுத்துக்கொண்டு
பன்னவே வெள்வங்க சுன்னமப்பா
பாலகனே யரிசியெடை தூக்கிடாயே. 160

தூக்கமுட னாறுவகை செயநீரப்பா
துப்புரவாய் மத்தித்து துணிவுகொண்டு
நோக்கமுடன் சிங்கிக்கு கவசஞ்செய்து
நுணுக்கமுடன் ரவிதனிலே காய வைத்து
ஆக்கமுடன் சில்லிட்டுச் சீலைசெய்து
அப்பனே கோழியென்ற புடந்தான்போடு
நீக்கவே புடமாறி யெடுத்துப்பாரு
நீதியுள்ள பற்பமது சொல்லொண்ணாதே 161

சொல்லவென்றால் பற்பமதை பதனம்பண்ணு
சுந்தரனே மச்சகேந்திரா துய்யபாலா
வெல்லவே கௌரியென்ற பாஷாணந்தான்
வேகமுள்ள காரமதை சுத்திசெய்து
கொல்லுகின்ற பாஷாணம் துலாமொன்றாகும்
கொப்பெனவே சிங்கியென்ற பற்பந்தன்னை
மெல்லவே யாறுவகை செயநீராலே
மேன்மையுட னரிசியெடைக் கூட்டிக்கொள்ளே. 162

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளவே செயநீரால் மத்தித்துத்தான்
குணமாகி கௌரிக்கு வங்கிபூட்டி
மெள்ளவே ரவிதனிலே காயவைத்து
மெதுவாக வோட்டிலிட்டுச் சீலைசெய்து
எள்ளளவு பிசகதுவும் நேராவண்ணம்
எழிலுடனே புடமதுவும் கோழியாக
கள்ளமது நேராமல் கனகபாலா
கனமான புடமதுவும் போடுபோடே 163

போட்டபின்பு புடமாறி யெடுத்துப்பாரு
பொங்கமுடன் பற்பமது யென்னசொல்வேன்
நீட்டமுள்ள சுன்னமது நாவோநீறும்
நிதிதனக்கு யெடமுண்டு நெடுங்காலந்தான்
வாட்டமுடன் வுண்டவர்கு காயகற்பம்
வளம்பெறவே கோடியுக மிருக்கலாகும்
தேட்டமுடன் சுன்னமதை பதனம்பண்ணு
சிவசிவா சித்தர்கண்டால் விடமாட்டாரே. 164

மாட்டாரே சித்துமுனி ரிடியாருந்தான்
மானிலத்தில் நாதாக்கள் தொடருவார்கள்
கேட்டபொருள் யெதுவேண்டு மானாலுந்தான்
கேண்மைகொண்டு கொடுப்பதற்கு வையமில்லை
நாட்டமுடன் பற்பமதை பதனம்பண்ணு
நாமுரைப்போ மின்னம் வெகு போக்கினங்கள்
வாட்டமென்ன புலஸ்தியனே மதிவல்லோனே
மாசற்ற சங்குயென்ற பாஷாணந்தானே. 165

தானான பாஷாணந் துலந்தான் தூக்கு
தன்மையுள்ள முன்சொன்ன கௌரிதன்னை
கோனான வாறுவகை செயநீர்தன்னால்
கொற்றவனே நெல்லிடைதான் மத்தித்தல்லோ
மானான சங்குக்குக் கவசம்செய்து
மன்னவனே ரவிதனிலே காயவைத்து
தேனான வோட்டிலிட்டு சீலைசெய்து
செம்மையாய் குக்குடத்தில் போட்டுபாரே. 166

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா புடமாறி யெடுத்துப்பாரு
பாலகனே தவளம்போல் பற்பமாச்சு
நேரப்பா பற்பமதை பதனம்பண்ணு
நெடிதான போக்குவகை யின்னஞ்சொல்வேன்
சீரப்பா கெந்திக்குப் பத்திலொன்று
தீர்க்கமுடன் வாறுவகை செயநீராலே
ஆரப்பா தான்குழைத்து வங்கிபூட்டி
அப்பனே புடமாகப் போட்டுத்தீரே. 167

தீர்க்கவென்றால் மூன்றாநாள் கவசம்நீக்கி
திறமுடனே பார்க்கையிலே துய்யசோதி
ஏர்க்கவே பற்பமதை யெடுத்துப்பாரு
யெழிலான பற்பமது நாவோயில்லை
மூர்க்கமுள்ள கெந்தியது முறைபாடாக
முன்னோர்கள் சொன்னபடி செய்தாலப்பா
ஆர்க்கவே படல்கட்டி லோகமெல்லாம்
அப்பனே யொருகுடையி லாளலாமே. 168

ஆளவென்றால் கெந்தியது காரமெத்த
அப்பனே பற்பமதை பதனம்பண்ணு
மாளவே பற்பத்தை யெடுத்துமைந்தா
மன்னவனே வகைமானம் சொல்வேனப்பா
மீளவே வீரமது பலமொன்றாகும்
மிக்கான பற்பமது யிடைநெல்லாகும்
தூளதுவும் தானெடுத்து துய்யபாலா
துப்புரவாய் தானெடுத்து மத்திப்பாயே. 169

மத்திப்பா யாறுவகை செயநீராலே
மன்னவனே வீரத்துக் கங்கிபூட்டி
சுத்தியாய் ரவிதனிலே காயவைத்து
துப்புரவாய் வோட்டிலிட்டுச் சீலைசெய்து
பத்தியாய் கோழியென்ற புடந்தான்போடு
பாலகனே புடமாறி யெடுத்துப்பார்க்க
எத்திசையும் மெய்க்கவ்ல்லோ நாவோயில்லை
யெழிலான பற்பமது கூறொண்ணாதே. 170

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

...NAMANDIR LIBRARY
Jangamawadi Math, Varanasi
Acc. No. 8055

ஒண்ணாது சுன்னமது யென்னசொல்வேன்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
ஓகோகோ நாதாக்கள் விள்ளாரப்பா
மண்ணாளும் வேந்தர்களு மிந்தபாகம்
மானிலத்தில் கண்டறிய மாட்டாரப்பா
திண்ணமுடன் மகுத்துவங்கள் வெளிவிடார்கள்
தீர்க்கமுடன் வும்மைவந்து யடுத்துக்கார்த்து
வண்ணமுடன் முறைபாடு கேட்பாரப்பா
மயங்காதே மச்சகேந்திரா மதிவல்லோனே. 171

## முன்சொன்ன பற்பங்களை யுண்பதற்கு காயகற்ப வனுபானம்

மதியான மச்சகேந்திரா மகிபவானே
மானிலத்தில் பற்பமதை யுண்பதற்கு
துதியான பாகமது யென்னசொல்வேன்
துப்புரவாய் சூரணமா மூலிகற்பம்
விதியான மூலியது கவுதும்பையாகும்
வித்தகனே பகமூலி எலிகாலாகும்
அதிதமாம் கரும்பசளை அகத்திவெள்ளை
அப்பனே சுரகாஞ்சி பீலியாமே. 172

பீலியாம் சுடுதுரத்தி கருந்துளசியாகும்
பிதிர்மூலி சிறுதர்ப்பை கோவையாகும்
மூலியாம் விடதாரி விஷ்ணுகிரந்தை
முனையான சிறுபுள்ளு பண்ணையாகும்
வேலியாங் கொடிவேலி கற்றாமரையாகும்
வேகமுள்ள சொரியானின் மூலியாகும்
நீலியாம் தனுர்மூலி சூரியகாந்தை
நிஷ்களங்க மானதொரு புடையனாமே. 173

புடையனாம் சிறுகொழுஞ்சி சித்திரமாலை
புகழான தும்பையொடு துரட்டியாகும்
நடையான வழுதளையாம் தும்பற்பூண்டு
கருவான வெள்ளி லோத்திரமேயாகும்
படையான வெளுச்சியுட பிசினுமாகும்
பண்பான கருவேலின் பிசினுமாகும்
தடையறவே பழுபாகல் காட்டுப்பாகல்
தாக்கான சஞ்சீவி யமுர்தந்தானே. 174

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தானான சோதியென்ற விருட்சந்தானும்
தண்மையுள கருஞ்சூரை செஞ்சூரையாகும்
கோனான தேவதா புஷ்பமாகும்
கொற்றவனே யல்லியிட புஷ்பமாகும்
தேனான பொன்னினா வாரைபுஷ்பம்
தெகிட்டாத மனோன்மணியாள் புஷ்பமாகும்
மானான கொன்றைமலர் புஷ்பமாகும்
மகத்தான பாதிரியின் புட்பமாமே. 175

புட்பமாம் சங்கர வல்லியாகும்
புகழான மதுரமென்ற வல்லியாகும்
நுட்பமாம் வானந்த வல்லியாகும்
நூலான தாமரையாள் கிழங்குமாகும்
பெட்புடைய ருத்திரமாஞ் சடையேயாகும்
பேரான மல்லியுட கிழங்கேயாகும்
நெட்பமாம் பூவந்திப் பட்டையாகும்
நெடிதான கருஞ்சாரைப் பட்டையாமே. 176

பட்டையா மிதுகளெல்லாம் வகையொன்றாக
பாலகனே சூரணமாய் செய்துகொண்டு
திட்டமுடன் வெவ்வேறாய் சூரணித்து
தீர்க்கமுடன் சீனியது கூடச்சேர்த்து
சட்டமுடன் முன்சொன்ன மருந்தையப்பா
சாங்கமுடன் வகைவகையாய் பிரித்துமேதான்
வட்டமுடன் சூரணத்தில் கடியதாக
வாகுடனே களஞ்சியது கூட்டிக்கொள்ளே. 177

கொள்ளவே சூரணத்தில் பற்பந்தன்னை
கொற்றவனே வெவ்வேறாய் யெடுத்துமைந்தா
அள்ளவே யரிசிடைதான் நிறுத்துக்கொண்டு
அப்பனே சூரணத்தி லனுபானித்து
உள்ளபடி தேன்நெய்யில் கொண்டாயானால்
வுத்தமனே காயமது யிறுகும்பாரு
தெள்ளமுர்த மானதொரு காயகற்பம்
தெகிட்டாது புண்ணியனே தெளிவாய்க்கேளே. 178

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேளேதான் யந்திசந்தி கொண்டபோது
கெவனமது மேல்நோக்கும் கெணிதவானே
பாளேதான் போகாது காயகற்பம்
பாங்கான சுவாசமதை மேல்நோக்காது
வீளேதான் சட்டையது தள்ளும்பாரு
வித்தகனே தேகமது கற்றூணாகும்
நாளேதான் நெடுங்கால மிருக்கலாகும்
நாதாந்த சித்தொளிவு போலிருக்கலாமே. 179

இருக்கலாம் கோடியுகங் கணக்கோயில்லை
யிருந்தாலும் நாள்பகலும் தெரியாதப்பா
வெருக்கலாம் பூலோக வாசையப்பா
விட்டகுறை யிருந்தாலே யிருக்கலாகும்
நெருக்கமுடன் ரேசகபூ ரகத்தையுன்னி
நேர்மையுடன் பூரணத்தை மனதிலெண்ணி
செருக்குடனே நெடுநாளா யோகஞ்செய்து
சேர்வையுடன் மண்மீதி லிருப்பாய்பாரே. 180

## போசன அளவு கூறல்

பாரப்பா புலஸ்தியனே பண்புள்ளானே
பாகமுட னின்னமும்யா னுரைப்பேனப்பா
சீரப்பா மூவாண்டு காலைமாலை
சிறப்புடனே கற்பமது வுண்ணும்போது
நேரப்பா ராக்காலம் பசுவின்பாலாம்
நெடிதான பகற்காலம் காரசாரம்
ஆரப்பா மூவாண்டு வுண்ணவேண்டும்
அப்பனே வதன்பிறகு செப்பக்கேளே. 181

செப்பவென்றால் யையாண்டு தன்னிலப்பா
செம்மலுடன் போசனமும் வேண்டலாகா
ஒப்பமுடன் யன்னமதை வெறுக்கவேண்டும்
ஓகோகோ நாதாக்கள் கூத்துகூத்து
எப்படியும் பத்தாவ தாண்டிலப்பா
யெழிலுடனே சமாதிக்குயேக வேண்டும்
தப்பிதங்கள் நேராமல் துய்யபாலா
தரணிதனி லிருப்பதுவே சமாதிதானே. 182

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தானான கற்பமது வுண்டுசெய்தால்
 தண்மையுடன் நெடுங்கால மிருக்கலாகும்
கோனான வையகத்தை மறக்கவேண்டும்
 கொற்றவனே புலிப்பாணி மைந்தாகேளு
தேனான மனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள்
 தேசொளிவின் சின்மயத்தைக் காணலாகும்
பானான பரஞ்சுடரே நண்ணவேண்டும்
 பரவெளிக்கு யெப்போதும் யாளாவீரே. 183

## சற்பராசன் மாத்திரை

ஆளவென்றா லின்னமொரு புதுமைசொல்வேன்
 அப்பனே நாதாக்கள் கூறாரன்றே
தேளதுதான் கொட்டியதோர் பான்மைபோல
 தெகிட்டாத மார்க்கமப்பா சொல்லொண்ணாது
பாணமென்ற பாணமது ராமபாணம்
 பகருகிறேன் பண்மையுள்ள மச்சகேந்திரா
கூளமென்ற மருந்துவகை யனேகமுண்டு
 கொற்றவனே யிதன்பெருமை கேளுகேளே. 184

கேட்கவென்றால் சற்பராசன் பெருமைதன்னைக்
 கெடியான சித்தர்கள்தான் கூறவில்லை
மீட்கமுள்ள படைராசன் சற்பராசன்
 மிக்கான மருந்துக்குக் காலனாகும்
நாட்படவே நெடுநாளில் முடியுமாத்திரை
 நாதாக்கள் ரிடிகள்முத லானோர்செய்வார்
நீட்கமுடன் ராஜாதி ராசர்செய்வார்
 நேர்மையுடன் மற்றோர்கள் செய்யாரன்றே. 185

செய்யவென்றால் விதியாளி செய்வான்பாரு
 தேற்றமுடன் விட்டகுறை யிருந்தோர்செய்வார்
துய்யபெரு மாத்திரையின் பெருமைதன்னை
 துப்புரவாய் சேடனுந்தான் கூறமாட்டான்
வையகங்கள் தான்புகழ் வாரிந்தப்போக்கு
 வளமையுடன் செய்பவனே புத்திவானாம்
பையவே யானுரைப்பேன் பதுமநாபா
 பாலகனே யிம்முறையை பகுந்துபாரே. 186

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா முறைபாடு பகருவேன்யான்
பாருலகில் மருந்துவகை பெருமைமெத்த
சீரப்பா லிங்கமது பலமொன்றாகும்
சிற்பரனே பூரமது பலமொன்றாகும்
நேரப்பா வீரமது பலமொன்றாகும்
நெடிதான பாஷாணம் பலமொன்றாகும்
கூரப்பா சிங்கியது பலமொன்றாகும்
குறிப்புடனே தாளகமும் பலமுமொன்றே. 187

ஒன்றான கெவுரியது பலமொன்றாகும்
வுத்தமனே கெந்தகமும் பலமொன்றாகும்
குன்றான வரிதாரம் பலமொன்றாகும்
கூரான நிமிளையது பலமொன்றாகும்
வென்றிடவே சூதமது பலமொன்றாகும்
வேகமுள்ள நாகமது பலமொன்றாகும்
சென்றிடவே மனோசிலையும் பலமொன்றாகும்
செப்பியதோர் காந்தமது பலந்தான்கூட்டே. 188

கூட்டவே கார்முகிலும் பலந்தானொன்று
குணமான தீமுறுகல் பலந்தானொன்று
தாட்டிகமாம் வஞ்சனமாம் பாஷாணந்தான்
தகைமையுள்ள பலமதுவு மொன்றேயாகும்
வேட்டமுடன் வயத்தொட்டி பாஷாணந்தான்
விருப்பமுடன் பலமதுவும் சரியாய்க்கூட்டி
நீட்டமுடன் வவுலு பாஷாணமப்பா
நிஷ்களங்க மாகவல்லோ பலமுஞ்சேரே. 189

சேர்க்கவே யின்னம் வெகு கருமானங்கேள்
செயலான வுப்பினிட மார்க்கங்கேளு
ஏர்க்கவே மதியுப்பு பலமொன்றாகும்
யெழிலான கறியுப்பு பலமொன்றாகும்
மூர்க்கமுள்ள கடலுப்பு பலமொன்றாகும்
முனையான சவுட்டுப்பு பலமொன்றாகும்
தீர்க்கமுள்ள கல்லுப்பு மொன்றதாகும்
திறமான யிந்துப்பு பலமதாமே. 190

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தாமான வ[illegible]யுப்பு பலமொன்றாகும்
தகைமையுள்ள கருவுப்பு பலமதாகும்
நாமான மானதொரு சாரந்தானும்
நலமான சீனமது பலமொன்றாகும்
ஆமான மென்றதொரு காரந்தானும்
அப்பனே யுவருப்பு பலமுமாகும்
போமேதான் பாறையுப்பு பலந்தானாகும்
பொன்னவனே கெந்தியுப்பு பலந்தான்தூக்கே. 191

தூக்கவே எவச்சாரம் பலமொன்றாகும்
துப்புரவாய் சத்தியென்ற சாரமப்பா
நோக்கமுடன் பலமதுவு மொன்றேயாகும்
நொடிதான பவளமது வொன்றேயாகும்
நீர்க்கமுடன் சலாசத்து பற்பந்தானும்
நிலையான கல்மதமும் பலமொன்றாகும்
பாக்கமுடன் கல்நாறு பலமொன்றாகும்
பாங்கான வண்டக்கல் பலமுஞ்சேரே. 192

சேர்த்துமே யின்னமும் யாமுரைப்போம்பாரீர்
செயலான கற்கவகை யாமுரைப்போம்
நேர்த்தியாய் யொவ்வொன்றுஞ் சுத்திசெய்து
நேரான சரக்குகளைச் சூரணித்து
பூர்த்தியாய் முறைப்படியே பலமாய்கூட்டு
புண்ணியனே முறையதுவும் பிசகாவண்ணம்
சீர்த்திபெற சரக்கதுவு மென்னவென்றால்
சிவயோக ராசனுமே செப்புவேனே. 193

## கற்கவகை கூறுதல்

செப்புவேன் புலஸ்தியனே புண்ணியவானே
செகதலத்தி லுன்னைப்போல் புண்ணியனுண்டோ
ஒப்பமுட னுந்தமக்கு யமைந்தவாற்தான்
வுத்தமனே யெவருக்கு வாய்க்குமோசொல்
தப்பிதங்கள் நேராமல் துய்யபாலா
தண்மையுடன் தானுரைப்பேன் தயவுள்ளானே
அப்படியே யுரையுமென்று புலஸ்தியருந்தானாய்
அடிபணிந்து குருதனக்குப் பணிந்திட்டாரே. 194

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பணிந்ததொரு புலஸ்தியற்கு வகஸ்தியரும்போ
பாங்குடனே இதிகாச வார்த்தைசொல்வார்
துணிவுடைய புலஸ்தியனே மச்சகேந்திரா
துப்புரவாய் கற்கவகை செப்புவேன்கேள்
மணிபோன்ற சரக்குவகை யேதென்றாக்கால்
மாசற்ற சுக்கதுவும் பலமொன்றாகும்
கனிவான மிளகதுவும் கிராம்புதிப்பிலி
கருவான பட்டையுடன் ரேவல்தானே. 195

தானான ரேவல்சின்னி பலமொன்றாகும்
தாக்கான கிராம்பதுவும் பலமொன்றாகும்
தேனான கோஷ்டமுடன் மதுரந்தானும்
தெளிவான மாஞ்சிலது பலமொன்றாகும்
பானான செவ்வியம் பலமொன்றாகும்
பாலகனே சித்தரத்தைப் பலமொன்றாகும்
மானான செம்பூரான் பலமொன்றாகும்
மாசற்ற காட்டாத்திப் பலமொன்றாமே. 196

ஒன்றான கெருடனது கிழங்குதாமும்
வுத்தமனே பலமதுவாய்ச் சேர்த்துக்கொள்ளு
குன்றான குங்குமமும் பலமொன்றாகும்
கூரான லவங்கமது பலமொன்றாகும்
சென்றிடவே குரோசானி யோமமப்பா
செவ்வியம் பலமதுவுஞ் செப்பலாகும்
தன்றான சூரிவேர் நத்தைச்சூரி
தாக்கான கொடிவேலி பூண்டுதானே. 197

தானான பூண்டுடனே சீரம்ரண்டு
தன்மையுள்ள நற்சீரம் பலமொன்றாகும்
கோனான படையோடு குறிஞ்சான்வித்து
கொற்றவனே கஸ்தூரி பலமுஞ்சேரு
தேனான கோரோசனை பலமொன்றாகும்
தெகிட்டாத கருவாயின் பட்டையப்பா
மானான மதிப்பூண்டு வெள்ளைப்பூண்டு
மன்னவனே பலமாக நிறுத்துக் கொள்ளே. 198

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளவே தேசாவர வாய்விளங்கம்
கொற்றவனே வகைவகைக்குப் பலமொன்றாகும்
தெள்ளமுர்த மானதொரு கடுக்காயப்பா
தெளிவான மாசக்காய் தான்றியப்பா
கள்ளமில்லாக் காட்டத்தி விரைதானப்பா
காவலனே வகைவகைக்குப் பலமதாகும்
வெள்ளமதில் தானமிதக்கும் கழற்சிக்காய்தான்
வேட்கையுடன் பலமதுவாய் சேர்த்துக்கொள்ளே. 199

சேர்க்கவே சிறுபுள்ளு வடியின் வித்து
செயலான திருநீற்று வித்துங்கூட்டு
பூர்க்கவே வெள்ளரியின் குமட்டிவித்து
புகழான வாளியென்ற வித்துமாகும்
ஏர்க்கவே செம்பாளைக் கசப்புப்பாளை
யெழிலான வித்ததுவும் பலமாய்ச்சேரு
ஆர்க்கவே யிதுகளெல்லாம் வகைதப்பாமல்
அப்பனே யிளவறுப்பாய் செய்துகொள்ளே. 200

செய்யவே சூரணமாய் பாகமாக்கிச்
செப்புகிறேன் முன்சொன்ன சரக்கோடொக்க
பையவே குழிக்கல்லி லிட்டுமல்லோ
பாலகனே தானமைத்து விபரங்கேளு
வையகங்கள் தான்புகழும் மூலியப்பா
வளமையுடன் கண்டுமல்லோ மிகவாராய்ந்து
மெய்தவறா கைபாகம் பிசகிடாமல்
மேன்மையுடன் தானரைப்பாய் நெடுநாள்தாமே. 201

## மூலிகை அறைப்பு

தாமான மூலிகையா லரைக்கவேண்டும்
தன்மையுள்ள புலஸ்தியனே தர்மபாலா
கோமான்கள் செய்வார்க ளிந்தப்போக்கு
கொற்றவனே மற்றோர்கள் செய்வாருண்டோ
நாமானந் தனைப்பெற்ற மாண்பரப்பா
நாயகனே செய்வாங்க இதிகாசந்தான்
சீமான்கள் செய்வதற்கு வையமில்லை
சிற்பரனே விற்பரனே தெளிவாய்க்கேளே. 202

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தெளிவான முறையதுதான் சற்பராசன்
தேர்ந்தெடுத்த மாத்திரைக்கு யளவேயில்லை
மொளியான பதங்களெல் லாமிதிலேகாண்பீர்
முறைபாடு வழிபாடு யறியலாகும்
வெளியான பதங்களுக்கு பரிபாஷையாவும்
விளக்கமுறப் பாடிவைத்த பெருநூலாகும்
உளிபோன்ற வாயுதங்கட்கச் சாணியாகும்
வுத்தமனே மூலிவகை முறையைக்கேளே. 203

முறையான முறையதுவு மென்னவென்றால்
மூதுலகில் நாதாக்கள் கூறவில்லை
திறையகற்றிப் பண்டிதற்கு தெளிவதாக
தீர்க்கமுடன் பாடினதோர் சற்பன்மாத்திரை
குறையொன்றும் நேராது குபேரன்மாத்திரை
குவலயத்தில் காண்பதற்கு நெடுநாட்கிட்டும்
பறையறைந்த பாவனைபோல் பாருள்ளோர்க்கு
பாலித்தேன் சித்தர்மெய்ச்சப் பண்பாய்த்தானே. 204

பண்பான மூலியது யெட்டியாகும்
பாலகனே யீராறு சாமமாட்டு
கண்பான சாமமது யாட்டிப்பின்பு
கன்னவனே தென்னவனே கருவுள்ளானே.
திண்பான மூலியது குமட்டியாகும்
திறமாக சாமமது யெட்டேயாகும்
நண்பான சாமமது வரைத்தபோது
நாயகனே மெழுகதுபோல் காணலாமே. 205

காணலா மூலிவகை யின்னஞ்சொல்வேன்
கண்மணியே புலஸ்தியனே கவிகொள்மாரா
பூணவே பாளையது யென்னசொல்வேன்
புகழான ஆடுதிண்ணாப் பாளையப்பா
வேணதொரு மூலியுண்டு விண்ணின்மாரா
வேகமுட னகாரமுள்ள மூலிபார்த்து
தோணவே சாற்பிழிந்து சுகுணமாரா
துப்புரவாய் தானரைப்பாய் சாமம்நாலே. 206

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

நாலான சாமமது வரைத்தபின்பு
நாயகனே யின்னமது மூலிசொல்வேன்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
காலான மூலியது கடுங்காரமூலி
காசினியில் சித்தர்முனி யுரையாமூலி
பாலான மூலியது யென்னவென்றால்
பாலகனே பசுமூலி சார்தான்கொண்டு
மேலான மாத்திரையை யரைக்கவேண்டும்
மேன்மையுட னின்னும்வகை யுரைப்பேன்நானே. 207

தானான மூலியது செந்தொட்டியாகும்
தண்மையுடன் சார்பிழிந்து செப்பக்கேளீர்
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனார் யெந்தனுக்கு யுரைத்தமூலி
பானான பசுமூலி சிவதைமூலி
பாலகனே தானரைப்பாய் சாமம்நாலு
மானான கொங்கணனார் மூலியப்பா
மன்னவனே கருமூலி விஷமூலிகாணே. 208

காணவே புலஸ்தியனே கண்ணுள்ளானே
காவலனே நாவலனே கருதக்கேளும்
பூணவே புண்ணாக்கர் சொன்னமூலி
புகழான பாலையடா பசும்பாலையப்பா
தோணவே சார்பிழிந்து சாமமெட்டு
தொகுப்புடனே தானரைப்பாய் மெழுகுபோலே
நீணவே மூலியது காய்ந்தபின்பு
நீமகனே மூலிவகை யின்னங்கேளே. 209

கேளேதான் புலஸ்தியனே கெவனவானே
கெடியான மூலியது யின்னமுண்டு
கோளேது குற்றமது நேரமாற்றான்
கொற்றவனே சொர்ன்னமென்ற தழைதானப்பா
பாளேதான் போகாமல் பண்புள்ளானே
பகருகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
மீளேதான் தழையதுவு மென்னவென்றால்
மிக்கான கருந்தூரா யென்னலாமே. 210
CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

என்னவே தழையதுதான் சாற்பிழிந்து
Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha
யெழிலுடன் நாற்சாம மரைத்தபோது
துன்னவே மெழுகதுவு மென்னசொல்வேன்
துப்புரவாய் நாதாக்கள் கூறலாகா
பன்னவே மெழுகதுவும் நீலவர்ணம்
பாலகனே யீயம்போ லிறுதிக்காட்டும்
சொன்னபடி மூலியது காரமெத்த
சுந்தரனே கற்றா மரையும்பாரே. 211

பாரேதான் தழையதுவு மென்னவென்றால்
பாலகனே கற்றாமரை யென்னலாகும்
சேரேதான் கொண்டுவந்து சாற்பிழிந்து
செப்புகிறேன் வறுசாம மரைத்தபோது
தீரேதான் மெழுகதுவு மிறுகியல்லோ
திறமான செந்நிறம்போ லிருக்கும்பாரு
கூரேதான் கசுவற்று மெழுகுபோலாம்
குவலயத்தில் சித்தர்சொல்லா தழையுமாமே. 212

## இமயகிரி சித்தர்மூலி

தழையான தழையதுவு மின்னமுண்டு
தற்பரனே புலத்தியனே தம்பிரானே
பழையமலை யிமையகிரி பர்வதத்தில்
பாங்குடனே வீற்றிருக் குஞ்சித்தரப்பா
மழைதனக்கும் ரவிதனக்கும் காயுஞ்சித்து
மன்னவனே புசண்டரென்றே செப்பலாகும்
பிழையொன்றும் நேராத புசண்டரப்பா
புண்ணியனே யவருண்ட மூலிகேளே. 213

மூலியாம் கிரிவட்ட மூலியப்பா
முனையான சித்தர்களை மிரட்டுமூலி
காலியாஞ் சிரவணமா மூலியப்பா
கடுங்காரத் தழையதுதான் காரமெத்த
சாலியனார் பாண்டமதை யுடைக்குமூலி
சார்பான மலைமீதி லிருக்குமூலி
வாலிபத்தை தானளிக்கும் வரணமூலி
வளம்பெரிய மூலிகையின் வண்மைபாரே. 214

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வண்மையா மூலியது பசண்டர்மூலி
மகத்தான தழையதுதான் கூறப்போமோ
திண்மையாந் தழையதுவும் சாற்பிழிந்து
தீர்க்கமுடன் றானரைப்பாய்ப் பத்துசாமம்
உண்மையாம் சாமமது வானபின்பு
வுத்தமனே மெழுகதுவைக் கண்டபோது
நண்மையுடன் கருநீல வர்ணங்காட்டும்
நாதாந்த சித்தொளிவும் சொல்லாரன்றே. 215

அன்றான மூலியது தழைகளுண்டு
அப்பனே சித்துமுனி சொல்லாரப்பா
குன்றான மலைபோல வனேகமூலி
குவலயத்தில் மெத்தவுண்டு வதீதமெத்த
தென்றிசையில் வாழுகின்ற பவணந்தியப்பா
தேசமெல்லாந் தான்றிரிந்து கண்டாராய்ந்து
பொன்போன்ற தழையதுவு மேதென்றாக்கால்
பொங்கமுடன் றானுரைப்பே னுகந்துகேளே. 216

## பவணந்தி கற்ப தழைச்சாறு

கேளப்பா புலத்தியனே கெவுனவானே
கெடியான வுத்தார மேதென்றாக்கால்
தூளப்பா சிறுபொடியாம் தழைதானுண்டு
துப்புரவாய் காலனென்ற மூலியாகும்
வாளப்பா வடகோடி கானகத்தில்
மகிழ்ச்சியுடன் சித்தர்களு முண்டமூலி
தேனப்பா விஷமுதலா யெதுவானாலும்
தேற்றமுடன் கடித்தாலும் யேறாதென்னே. 217

என்னவே தழையதுவுஞ் சார்பிழிந்து
யெழிலாக வெண்சாம மரைத்தபோது
துன்னவே மெழுகதுவுங் கறுத்துக்காணும்
துறையோடு வரைக்கையிலே மைபோலாகும்
பன்னவே மெழுகதனை ரவியில்வைக்கப்
பாலகனே தும்பதுபோல் பூர்க்கும்பாரு
வின்னமிலாப் பொடியதனைப் பதனம்பண்ணு
வித்தகனே மின்னம்வெகு மூலியாரே. 218

CC-0. ... Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா மூலியது யேதென்றாக்கால்
பாலகனே பகருகிறேன் பண்பாய்க்கேளு
நேரப்பா தும்பலென்ற பூண்டுதானும்
நெடிதான சாரதுவு மிகப்பிழிந்து
காரப்பா யெண்சாமம் தானரைப்பாய்
கண்மணியே அரைக்கையிலே மெழுகுபோலாம்
சீரப்பா மெழுகுதனைக் காணும்போது
சிற்பரனே மேகம்போ லிருக்குந்தானே. 219

தானான மெழுகுதனை மைபோலாட்டித்
தயாபரனே குளிகையது செய்வாயப்பா
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனார் யெந்தமக்குச் சொன்னவாற்போல்
மானான மாத்திரையாங் கருஞ்சீரகம்போல்
மன்னவனே குளிகையது செய்யவேண்டும்
பானான மாத்திரையை பதனம்பண்ணு
பாலகனே போக்குவகை யின்னம்கேளே. 220

இன்னமுந்தான் வெகுபாடு முறைபாடெல்லாம்
யெடுத்துரைக்க நாவுமில்லை பாவுமில்லை
நன்னயமாய் குளிகைதனை மாச்சுதற்கு
நலமான முறைபாடு சொல்வேனப்பா
பன்னவே ரோகமது போவதற்குப்
பாலகனே வனுபானம் பகருவேன்யான்
சொன்னபடி பாகமதாய் கொண்டாயானால்
சுந்தரனே நோயதுவும் போகுந்தானே. 321

தானான புலத்தியனே மச்சகேந்திரா
தண்மையுள்ள கண்மணியே தயாளவானே
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனார் யெந்தனக்குச் சொன்னநீதி
பானான தேனதனில் கொண்டவற்கு
பாகமுடன் ரோகமது தீரும்பாரு
தேனான வெண்ணெய்தனில் கொண்டாயானால்
தேங்கியே ரோகமெல்லாந் தெளியுங்காணே. 222

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

காணவே யிந்தியது சொரசந்தன்னில்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
கன்னவனே கொண்டவற்கு சேத்துமநூறும்
ஊணவே யுடலைவிட் டேகும்பாரு
வுத்தமனே கடலேழுக் கப்பால்போகும்
நாணவே வாதமென்ற தெண்பதும்போம்
நலமான சுரமறு பத்துநான்கும்
நீணவே பித்தமது நாற்பத்திரண்டும்
நெகிழ்ச்சியுடன் வுடலைவிட் டேகும்பாரே. 223

பாரேதான் கிரந்திபதி னெட்டுந்தீரும்
பாங்கான சூலைபதி னாறும்தீரும்
நேரேதான் பாண்டுவகை யாறும்போகும்
நெடிதான குஷ்டம் பதினெட்டும்போகும்
வீரேதான் கபரோக மகன்றுபோகும்
மிக்கான சிலவிஷங்க ளற்றுப்போகும்
கூரேதான் குன்மமது யெட்டுந்தீரும்
குடிலமது கொள்ளாது தணியும்பாரே. 224

தணியுமே காசமது யாறும்போகும்
தாக்கான வோக்காள மெட்டும்போகும்
அணியான யுடலமது காந்திமெத்த
அப்பனே செவிரோக மொன்பதும்போம்
துணிவுடனே கொண்டவற்கு விந்துநஷ்டம்
தொல்லுலகில் கிடையாது சித்தர்விள்ளார்
பணிசெய்து யிம்முறையை வாங்கவேண்டும்
பாலகனே யின்னமுந்தான் கூறுவேனே 225

கூறுவேன் புலத்தியனே புண்ணியபாலா
குவலயத்தில் சித்துமுனி யனேகஞ்சொன்னார்
மாறுபட மருந்துவகை யதீதஞ்சொன்னார்
மகத்தான மாத்திரைபோ லாருஞ்சொல்லார்
தேறுதலா யின்னம்வெகு ரோகஞ்சொல்வேன்
தெளிவான ரோகமது யென்னவென்றால்
ஆறுதலாய் படைகள்பதி னெட்டும்போகும்
அப்பனே நாசிரோக மாறும்போமே. 226

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போமேதான் சிலவிஷங்க ளற்றுப்போகும்
பொல்லாத ரோகமெல்லாங் கழன்றுபோகும்
வாமேதான் ரோகவகை யனைத்துஞ் சொன்னோம்
வளம்பெரிய நாதாக்கள் கூறவில்லை
ஆமேதான் சித்தர்முனி ரிடிகள்தேவர்
அவரவர்கள் செய்தநூல் மர்மமெத்த
நாமேதான் சொன்னதொரு பெருநூலப்பா
நாட்டினிலே யாராலுங் கூறாதன்றே. 227

அன்றான சாத்திரத்தி லுளவுகாணார்
அப்பனே சித்தர்களின் மர்மங்காணார்
குன்றான மலைபோலே சாத்திரங்கள்
கூறினார் வெகுகோடி மாண்பற்காக
தென்றிசையாம் பொதிகைதனில் ரிடிகள்சித்தர்
தேற்றமுடன் மலைமீதில் குகையிற்சென்று
வென்றிட நூலனைத்தும் சமாதிகொண்டார்
வேதாந்தத் தாயாரு மறிவார்பாரே. 228

பாரேதான் பதினெண்பேர் சாத்திரங்கள்
பாருலகில் பாடிவைத்தார் பூஷணம்போல்
நேரேதான் சமாதிமுக மறைத்துவைத்தார்
நெடிதான மாண்பர்களுங் காணாமற்றான்
கூரேதான் காண்டம்பன் னீராயிரத்தில்
குறிப்புடனே யாமுரைத்தோம் லக்கோயில்லை
சீரேதான் புலஸ்தியனே யிந்நூலப்பா
சிறப்புடனே காசினியோர்க் குரைத்தோங்காணே. 229

காணவே பெருநூல் பன்னிரண்டுகாண்டம்
காசினியில் நாதாக்கள் கூறாவண்ணம்
தோணவே யுலகனைத்துங் காணவேண்டி
துப்புரவாய் பாடிவைத்தேன் புலஸ்தியாகேள்
வேணபடி கருவிகர ணாதியந்தம்
விட்டகுறை தொட்டகுறை யாவுங்கண்டு
ஆணவங்கள் தானகற்றி மைந்தாபாரு
அப்பனே சமாதிமுகஞ் சாதிப்பாயே. 230

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

சாதிக்க வின்னூலை சாற்றினோம்யாம்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
சதுருகமுங் காணாத பெருநூலப்பா
சோதிக்க நூலளவு யிதிலே தோயும்
சூட்சாதி விதியனைத்தும் காணலாகும்
வாதிக்கும் பதினெண்பேர் நூல்கள்தன்னில்
வாகுடனே பாடிவைத்த மர்மமெல்லாம்
பேதிக்க வின்னூலா லறியலாகும்
பேதமில்லை சூதமில்லை பிழைக்கத்தானே. 231

## அகஸ்தியர் புலஸ்தியருக்கு தருக்க நூல் கூறல்

தானான பிரகாச மானரூபா
தயவான புலஸ்தியனே தகையையோனே
கோனான வசுவனியா மெந்தன்தேவர்
கொற்றவனா ரெந்தனுக்குச் சொன்னவண்ணம்
மானான பதினெண்பேர் தர்க்கநூலில்
மாட்சியுடன் கூறினதோர் கெணிதமெத்த
பானான நூல்களது பகுப்புச்சொல்வேன்
பாலகனே கண்மணியே பண்பாய்க்கேளே 232

கேளேதான் தர்க்கநூ லேதென்றாக்கால்
கெவனமுடன் நாதாக்கள் கூறும்நூல்தான்
தாளே தான் மச்சமுனி தர்க்கமுன்னூறு
தகமையுடன் பாடிவைத்தார் சொச்சம்பத்து
வீளேதான் சட்டமுனி தர்க்கமுன்னூறு
வித்தகனே சொச்சம்பதி னாறதாகும்
வீளேதான் தன்வந்திரி யெண்ணூர்தர்க்கம்
மிக்கான சொச்சம்பதி னாறதாமே. 233

தாமேதான் புசண்டரது யெண்ணூறுதர்க்கம்
தாக்கான சொச்சமது முப்பத்திரண்டு
ஆமேதான் கௌபாலர் முந்நூறுதர்க்கம்
அப்பனே சொச்சமது யெட்டதாகும்
வேமேதான் ரோமரது யிருநூறாகும்
வேட்கமுடன் சொச்சமது நான்கதாகும்
நாமேதான் பராசரது பெருநூல்தர்க்கம்
நாட்டினார் ஆயிரத்தின் நூறுகாணே. 234
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணவே தேரையர் இருநூறாகும்
கழறினார் தர்க்கநூல் சொச்சமாறு
பூணவே ராமரிட தர்க்கமப்பா
புகலுகிறே னாயிரத் திருநூறாகும்
தோணவே யூகிமுனி தர்க்கமப்பா
தோராத பாடலது வறுநூறாகும்
நீணவே விடைக்காடர் பெருநூல்தர்க்கம்
நிகழ்ச்சியுடன் பாடிவைத்தார் சொச்சம்பத்தே. 235

பத்தான சிவவாக்கியர் தர்க்கநூலாம்
பாடிவைத்த குறுக்கிடையாம் முன்னூறாதும்
சித்தான கொங்கணவர் தர்க்கநூலாம்
சிறப்புடைய நூலதுநா னெண்ணூறாதும்
முத்தான நந்தியது தர்க்கநூலா
முடிவான காண்டமது இருநூற்றுசொச்சம்
வித்தான யாக்கோபு தர்க்கநூலாம்
வீரான காண்டமது நாலதாமே. 236

நாலான காண்டமது பாடல்முன்னூற்
நலமான சொச்சமது பாடல்பத்து
மாலான திருமூலர் தர்க்கநூலாம்
மகத்தான பாடலது வைநூற்றுப்பத்து
தாலான பதினெண்பேர் சிலபேரில்லை
தகமையுடன் யெந்தன்மேல் கூட்டமிட்டு
வாலான நூற்களிலே தர்க்கங்கூறி
வகைகெட்டுப் போனவர்கள் சிலபேராமே. 237

பேரான கூட்டமதில் பொதிகைசித்தர்
பேருலகில் கீர்த்திபெற்ற நாதர்தாமும்
சீரான மனுவொன்று கேட்டபோது
சீர்பாடு முறைபாடு தெரியாமற்றான்
கூரான வார்த்தையது யடவுகூறி
குற்றமுட னமனுக்கு வாளனாகி
தூரான நிந்தையது வருகாமற்றான்
துப்புரவாய் மனதுவந்து பணிந்திட்டாரே. 238

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

பணிந்துமே வெகுபரடு முறைமைகொண்டு
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
பாடிவைத்த சாத்திரங்கள் முறைபாடெல்லாம்
துணிந்துமே பொதிகை'மூலி சித்தர்தம்மால்
துங்கமுடன் கருவிகர ணாதியந்தம்
தணிந்ததொரு நூல்களிலே கோளாராய்ந்து
தண்மையுடன் முடிவணங்கி தாள்பணிந்து
அணிந்துமே பரிசுமுதல் யாவும்பெற்று
அன்புடனே யவரவர்கள் குகைசென்றாரே. 239

## கமலமுனி நூல் வரலாறு

சென்றாரே கமலமுனி நாதர்தாமும்
தெளிவான நூற்பாடி வாங்கல்செய்ய
குன்றான நூலதனை யெந்தன்பக்கல்
கொப்பெனவே அரங்கேற்றல் செய்வதற்கு
வென்றிடவே யாசீர்மந் தன்னைத்தேடி
வேட்கையுடன் சித்தர்பதந் தன்னைநாடி
தென்றிசையாம் பொதிகைமுனி கூட்டத்தாற்கு
தேற்றமுடன் மனதுவந்து வரங்கேட்டாரே. 240

கேட்டாரே கமலமுனி தாள்பணிந்து
கிருபையுடன் தென்பொதிகை சபையோர்முன்னே
கூட்டமுடன் அரங்கேற்றல் செய்யவென்று
கொப்பெனவே கமலமுனி கூறும்போது
வாட்டமுள்ள நூலதுவை வாங்கவில்லை
வளம்பெரிய நாதாக்கள் தர்க்கங்கூறி
நீட்டமுள்ள பொதிகைசித்தர் யிந்தனூலை
நிகட்சியுடன் வினயங்கள் கேட்டார்காணே. 241

காணவே பொதிகைதனி லிந்தனூலைக்
காவலனே புலஸ்தியனே கவிராஜேந்திரா
பூணவே யிந்நூல்தான் சொற்பனூலை
புகழாக அரங்கேற்றல் கூடாதென்று
ஆணவமாய் தான்கூற முனிவர்கேட்டு
அப்பனே முகங்கூப்பி மனதுசோர்ந்து
நாணயமாய் நூலதனை கைக்கொண்டேகி
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.
நளினமுடன் தன்குகைக்கு நடந்திட்டாரே. 242

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நடந்தாரே கமலமென்ற முனிவர்தாமும்
நயமுடனே தட்சணா மூர்த்திபக்கல்
தொடர்ந்தாரே யவர்பாதங் காணவென்று
துப்புரவாய் மலையோரஞ் செல்லும்போது
அடர்ந்ததொரு சித்துமுனி ரிடியாரெல்லாம்
அங்ஙனவே கூட்டமிட்டு முனிவர் ம்மை
கடந்துமே முகதாவில்க் கண்டுமேதான்
கனிப்புடனே வினயமது கேட்டார்தானே. 243

தானான கமலமுனி யாருங்கண்டு
தண்மையுடன் சித்தர்முனி நாதருக்கு
பானான பெருநூலாந் தன்னூல்தன்னை
பட்சமுடன் அரங்கேற்றல் செய்வதற்கு
கோனான யென்தேவ ரகஸ்தியாரைக்
கொற்றவனார் தன்பாதம் தொழுதுபோற்றி
மானான னூலதனை யரங்கேற்றற்கு
மகிட்சியுடன் கேட்டேனே நாதர்காணே. 244

நாதர்பால் விடைகேட்க சித்தரங்கே
நாதாந்த முனியாரும் கூடாதென்றார்
வேதாந்த னூலதனைக் கொண்டுவந்தேன்
வித்தகரே அரங்கேற்றல் செய்யவென்றார்
தீதான னூலதுதான் யென்றுகூறி
தெளிவுடனே வரங்கேற்ற வில்லையென்றார்
சூதான வார்த்தையது யறிந்துகொண்டு
சூட்சமுடன் தம்பதிக்கு சென்றிட்டாரே. 245

## கமலமுனியார் பெருநூலை சதுரகிரியில் அரங்கேற்றியது

இட்டாரே சித்துமுனி கமலர்தாமும்
யெழிலாக சதுரகிரி மலையோரந்தான்
சட்டமுடன் ரோமரிஷி தன்னைக்கண்டார்
சாங்கமுடன் முன்னடந்த விதிகாசத்தை
திட்டமுடன் தாமுரைத்தார் முறைபாடாக
தீர்க்கமுடன் ரோமரிஷி கேட்டபோது
பட்டயம்போல் வரங்கேற்றல் செய்வதற்கு
பாங்குடனே சம்மதம் கொண்டருளினாரே. 246

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

அருளினார் ரோமரிடி நாதர்தாமும்
அங்ஙனவே நூலதனைக் கண்டபோதே
தெருளவே யிம்மலையில் காவியத்தை
தேற்றமுடன் நாதாந்த சித்தர்முன்னே
இருளகன்ற குகைதனிலே ரிடிகள்தேவர்
யெழிலாகக் கூட்டமிட்டு கும்பல்சேர்ந்து
மருளகற்றிக் கிரந்தமதை கண்டாராய்ந்து
மார்க்கமுடன் வரங்கேற்றல் செய்தார்பாரே. 247

## கமலமுனியார் சதுரகிரியில் சமாதியடைந்தது

பாரேதான் புலஸ்தியனே பண்புள்ளானே
பாருலகில் நாதாக்கள் ரிடிகள்சித்தர்
நேரேதா னவரவர்கள் நூல்கள்கூறி
நெடுங்காலம் கோடிவரை யிருந்தாரப்பா
சீரப்பா கமலமுனி யொருவரப்பா
சிற்பரனே நூல்பாடி யுடனேகற்பம்
தேரேதா னுட்கொண்டார் கற்பந்தன்னை
தேற்றமுடன் சமாதிவழிக் கேகினாரே. 248

ஏகவே கமலமுனி சீஷவர்க்கம்
யெழிலாகத் தாமழைத்தார் கோடிசங்கம்
போகவே சமாதிமுகஞ் செல்வதற்குப்
பொங்கமுடன் சிலகால மிருந்துமல்லோ
தேகமதை சிலகாலம் பூலோகத்தில்
தெளிவுடனே யாரொருவர் காணாமற்றான்
யூகமதாய் மறைத்துவைத்து சிலநாட்சென்று
உத்தமரும் வருவதற்கு நண்ணினாரே. 249

நண்ணவே தன்மனதி லெண்ணங்கொண்டு
நாட்டிலுள்ள சீஷவர்க்கந் தனையழைத்து
வண்ணமுடன் யான்வருங் காலமட்டும்
வாகுடனே சமாதிமுகம் காத்திருங்கள்
எண்ணமது முடிந்தபின்பு யானுமப்பா
ஏற்றமுடன் பூவுலகை காண்பதற்கு
திண்ணமுடன் வருங்கால மளவுமட்டும்
தீர்க்கமுடன் சமாதிமுகம் காரென்றாரே. 250

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

காரென்று கும்பமுனி கூறும்போது
காசினியி லிருந்ததொரு சித்தர்தாமும்
நேரொன்றுங் கூறாமல் ரிடிகள்தேவர்
நெடுங்காலஞ் சென்றமட்டும் பாதுகாத்து
தேரென்ற சமாதிமுகம் வருகுமட்டும்
தேர்வேந்தே நாங்களுந்தா னேவல்செய்வோம்
வேரொன்று துரோகமது செய்யமாட்டோம்
வித்தகரே விண்ணுடைய சித்துதாமே. 251

சித்தான சித்துமுனி ரிடிகளெல்லாம்
சீர்பெறவே வாக்குரைத்தார் முனியாருக்கு
சத்தமுடன் றாமுரைத்து நிற்கும்போது
தயாளமுடன் கமலமென்ற முனிவர்தாமும்
செத்தவர்போல் சதுரகிரி மலையோரத்தில்
சென்றாரே மடுவோரந் தராதலத்தில்
மெத்தமனக் களிப்புடனே தேகந்தன்னை
மேதினியில் தாமறைத்தார் முனிவர்தானே. 252

தானான முனிவரும் கமலர்தாமும்
தகமையுடன் சமாதிமுகஞ் செல்லும்போது
கோனான பெருநூலாஞ் சாத்திரத்தை
கொப்பெனவே தன்னுடனே சமாதிகொண்டா
தேனான சரித்திரத்தைப் பாடியல்லோ
தேற்றமுடன் மலைதனிலே வரங்கேற்றற்கு
மானான வகஸ்தியனார் கூட்டத்தார்கள்
மார்க்கமுடன் அரங்கேற்றல் இலையென்றாரே. 253

என்றதொரு மொழியதனைக் கேட்டசித்தர்
யெழிலாக நூல்தனைக் காட்டாமற்றான்
சென்றுமே தன்னுடனே சாமதிகொண்டு
செயலான சாத்திரத்தை வுருகும்போது
தென்றிசையி லெந்தமது மலைக்குட்சென்று
தேற்றமுடன் னரங்கேற்றல் செய்யப்பின்னும்
வென்றிடவே தன்மனதி லடக்கங்கூறி
வெட்டவெளி யம்பலத்தில் சென்றிட்டாரே. 254

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

## கமலமுனி சமாதிமுகம் திரும்பிவருதல்

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

இட்டாரே கமலமுனி வருநாளாச்சு
யெழிலான சீஷவர்க்கம் கோடிமாண்பர்
விட்டகுறை தவறாமல் சீஷவர்க்கம்
விதிப்படியே முறைப்படியே காத்திருந்து
சட்டமுடன் கமலமுனி சமாதிதானும்
தாள்திறந்து தான்வெடித்து வருங்காலத்தில்
தொட்டகுறி போலாக சீஷவர்க்கம்
தொடர்ந்துமே யவர்பதியில் கார்த்தார்காணே. 255

காணவே முடிசாய்த்து வஞ்சலித்துக்
கார்த்தாவாங் கமலமுனி பாதங்காண
ஆணவங்கள் தானொடுங்கி சீஷர்தாமும்
அன்புடனே கார்த்திருந்தார் யேவலுக்கு
மாணமருங் கல்வியுள்ள சீஷர்கூடி
மார்க்கமுடன் சமாதிமுக மிருக்கும்போது
வேணயுப சாரமுடன் முனிவர்தாமும்
வேட்கமுடன் சமாதிவிட்டு யேகினாரே. 256

ஏகியே கரந்தனிலே நூலுங்கொண்டு
யெழிலுடனே சமாதிவிட்டு வருகும்போது
சாகமுடன் சீஷவர்க்கத் தோர்கள்கூடி
சட்டமுடன் கமலமுனி பாதம்போற்றி
வேகமுடன் சதுரகிரி தன்னைவிட்டு
வேட்கமுடன் வையகத்தைக் கண்டார்தாமும்
பாகமுடன் கமலமுனி ரிடியார்தாமும்
பாங்குடனே சமாதிவிட்டு வந்திட்டாரே. 257

வந்தாரே கமலமுனி ரிடியாருந்தான்
வளம்பெரிய வையகத்தில் தேவர்தாமும்
அந்தமுடன் சமாதிவிட்டு வந்தபோது
அருண்மைந்தா புலஸ்தியனே செப்பக்கேளீர்
விந்தையுடன் சாத்திரத்தைக் கையிலேந்தி
விட்டகுறை நீங்கியல்லோ சமாதிநீங்கி
சொந்தமுடன் பொதிகைக்கு வந்தேன்சாமி
சுந்தரனே யெந்தனையாட் கொள்ளென்றாரே. 258

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளென்று சொல்லியல்லோ முடிகள்சாய்த்துக்
கொற்றவனே எந்தனது சாத்திரத்தை
உள்ளபடி தம்பொதிகை முனிவர்முன்னே
முயற்சியுட னரங்கேற்றல் கொள்ளவேண்டும்
எள்ளளவும் பிசகது நேராவண்ணம்
யென்தேவா யென்குருவே யருளவேண்டும்
தெள்ளமுர்த மானதொரு சாத்திரத்தை
தேற்றமுட னரங்கேற்றல் செய்யென்றாரே. 259

என்றாரே கமலமுனி ரிடியார்தாமும்
யெழிலுடனே கேட்குமந்தக் காலந்தன்னில்
குன்றான மலைதனிலே யிருந்தசித்தர்
கொப்பெனவே கோபமது தணிந்துமேதான்
பன்றான சாத்திரத்தை வரங்கேற்றற்கு
பாங்குடனே மனதுவந்து மனமிரங்கி
வென்றிடவே வரங்கேற்றல் முடித்துபின்பு
வேட்கமுடன் சாபமது கொடுத்தார்பாரே. 260

பாரேதான் சாத்திரத்திற் குவமைகூறி
பளிங்குடனே சாபமது பலிக்கவென்று
நேரேதான் சித்தரெல்லா மொன்றாய்க்கூடி
நேர்மையுடன் சாபமது கொடுத்தாரங்கே
வீரேதான் சாபமது கொடுக்காவிட்டால்
மேதினியில் யெவரையுந்தான் மதிகொள்ளார்கள்
பேரேதான் யுலகமெலாம் சித்தாய்ப்போகும்
பேருலகில் ரகசியங்கள் வெளியாய்ப்போமே. 261

போமேதான் மாண்பர்களில் கருமியுண்டு
பொல்லாத பாவிகளு மனேகருண்டு
நாமேதான் சொன்னபடி சாத்திரங்கள்
நளினமுடன் தேவரக சியங்களெல்லாம்
ஆமேதான் யவரவர்கள் செய்தநூலும்
அப்பனே மேதினியில் கண்டுகொள்வார்
தாமேதான் கைமறப்பு யிருக்கவேண்டும்
காசினியி லாருந்தான் மதியார்காணே. 262

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணவே கமலரிஷி முனியாருக்கு
கருவான சித்தர்முனி ரிடிகள்பேர்கள்
தோணவே யவரவர்தம் வந்தமட்டும்
தொல்லுலகில் மறைப்புவகை யிருக்கவேண்டும்
வேணபடி யுத்தார மறுமங்கூறி
விருப்பமுடன் முனியாற்கு யிதவுகூறி
சீணமது நேராமல் சித்தருக்கு
சிதாபாசக் கலைதனியே தந்திட்டாரே. 263

தந்தாரே விசுவாச மருளும்பெற்று
தண்மையுடன் கமலமுனி சித்தர்தாமும்
அந்தமுடன் சிரங்குனிந்து வஞ்சலித்து
அப்பனே புலஸ்தியனே விடையும்பெற்று
தொந்தமுடன் தம்பதிக்கு சென்றாரங்கே
தோராமல் ரிடிகள்முதல் சித்தர்தாமும்
சொந்தமுடன் விடைகொடுத்தார் பூபாலாகேள்
சுத்தமுடன் சமாதிமுகம் சென்றிட்டாரே. 264

## புலஸ்தியர் அகஸ்தியரை மூன்றுயுகத்து மானிடருக்கும் மசானங் காத்தவ ராரென்று கேட்டல்

இட்டதொரு காரணமும் முடிவாய்க்கொண்டேன்
யென்தேவா யென்குருவே சங்கைதீர
தொட்டகுறி போலாக யுகத்தின்சங்கை
தேற்றமுடன் யெந்தனுக்கு கூறவென்ன
சட்டமுடன் வகஸ்தியரும் மனதுவந்து
சாங்கமுட னுபதேசம் சங்கைகூர்வார்
திட்டமுடன் மனங்கசிந்து புலஸ்தியர்தாமும்
தீர்க்கமுடன் சிரங்குனிந்து கேட்பார்தானே. 265

தானான புலஸ்தியனே தம்பிரானே
தண்மையுள்ள கண்மணியே தயாளவானே
மானான யுகமதிலே மசானசங்கம்
மானிடவர் பிறந்திறந்த மசானசங்கம்
தேனான யென்தேவ ரசுவனியாந்தேவர்
தேற்றமுட னெந்தமக்குச் சொன்னநீதி
கோனான நாலுயுக ராஜராஜர்
கொற்றவனா் ராஜபதி கொண்டார்தாமே. 266

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொண்டதொரு ராசமுடி கோடிமன்னர்
குவலயத்தி லாண்டவர்கள் லக்கோயில்லை
கண்டதொரு சாத்திரங்கள் யிதிகாசங்கள்
காசினியில் புராணங்கள் கட்டுவகையாவும்
விண்டவர்க ளிச்சங்கை மசானசங்கை
விண்ணுலகில் பாடிவைத்தோர் யாருமில்லை
அண்டமுனி ராட்சதரும் கண்டாரில்லை
அப்பனே யறிந்தமட்டும் சொல்லுவேனே. 267

சொல்லுவேன் புலஸ்தியனே சுந்தராகேள்
சுத்தமுடன் யாமுரைப்பேன் சுருபானந்தா
வெல்லவே லோகத்தின் மகிமையப்பா
விட்டகுறை யிருந்தவற்கு வாய்க்கும்பாரு
தொல்லுலகில் மனோன்மணியாள் கிருபையாலும்
தொடுகுறிபோல் யெந்தமக்குச் சொன்னநீதி
அல்லல்வினை தானகற்றி அன்புள்ளானே
அப்பனே புலஸ்தியனே அன்பாய்க்கேளே. 268

கேளேதான் புலத்தியனே மச்சகேந்திரா
கெவனமுள்ள கண்மணியே கவிவல்லோனே
ஆளேதான் திரேதாயி னுகத்திலப்பா
அப்பனே திருச்சங்கு வயோத்தியாண்டார்
மீளவே யவர்மைந்த னரிச்சந்திரன்தான்
மிக்கான லோகபதி வரசுசெய்தார்
வேளமது செய்துமல்லோ மன்னன்றானும்
விருப்பமுடன் சிலகால மாண்டார்பாரே. 269

பாரப்பா புலஸ்தியனே தமிழ்வல்லோனே
பட்சமுடன் றாமுரைப்போம் பதிவல்லோனே
நேரப்பா வரிச்சந்திர னாளுங்காலம்
நேர்மையுட னவர்தமக்கு நேர்ந்ததுன்பம்
தூரப்பா மனைவியை யிழந்ததோஷம்
துப்புரவாய் சத்தியத்தை யனுசரித்து
சீரப்பா சொல்லுமொழி தவறாவண்ணம்
சீற்றமுடன் மசான கரைகாத்தார்தானே. 270

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

தானான வக்கரலந் தான்தொடங்கி
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தாரணியில் மசானகரை காப்பார்கண்டீர்
தேனான ராஜாக்கள் கோடிமன்னர்
தேர்வேந்தர் துரைமக்கள் லக்கோயில்லை
மானான கோடிமனு ராசுமக்கள்
மானிலத்தில் கலியுக முறியுமட்டும்
பானான பராபரியாள் கிருபையாலும்
பாருலகை யாண்டாரே கோடிபேரே. 271

கோடியாம் ராசமன்னர் யாண்டமட்டும்
கொற்றவனா ரரிச்சந்திர பூபாலன்றான்
தேடியே மசானகரை லோகமெல்லாம்
தேர்வேந்த வரிச்சந்திரன் சுடலைகார்ப்பார்
நாடியே சாத்திரங்கள் கூறும்வண்ணம்
நளினமுடன் கண்டதுண்டு யிதுவேறில்லை
பாடியோதோர் புராணங்கள் முன்யுகத்தில்
பாருலகின் சங்கையது தெரியார்காணே. 272

தெரியாமல் சாத்திரமும் கூறவில்லை
தெளிவுடனே யிதிகாசங் கூறவில்லை
சரியான சோதிடமும் மசானசங்கை
சட்டமுடன் கருமகாண்டஞ் சொல்லவில்லை
சுருதிபொருள் வேத யாகமுமப்பா
சொரூபர்முதல் பெரியோர்கள் கூறவில்லை
நிருபர்முதல் வண்டத்தின் ரிடியோர்தாமும்
நீதியுட னாருந்தான் கூறாதன்றே. 273

கூறுவேன் புலஸ்தியனே யறிந்தமட்டும்
குறிப்பாக வசுவனியார் சொன்னநீதி
தேறுதலாய் கண்டுமே யுளவாராய்ந்து
தேற்றமுடன் திரேதாயி னுகத்தின்முன்னே
மாறுபடா தேகமது வழிந்தபோது
மன்னவனே மசானமென்ற கரைக்கேயப்பா
நீறுபடா தேகமதை சாம்பலாக்க
நிஷ்களங்க மானதொரு தேரட்டியாமே. 274

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

தோட்டியாம் சுடுகாடு புறங்காடப்பா
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தொல்லுலகில் சுட்டெரிக்கும் வெட்டியான்றான்
மாட்டிமையாய் புறங்காடு யவனேயல்லால்
மானிலத்தில் வேறொரு ராசனில்லை
நாட்டினிலே புறங்காடு காத்தான்தோட்டி
நானிலத்தில் மற்றொருவர் காத்ததில்லை
தாட்டிகமா வரிச்சந்திர னொருவனப்பா
தாரணியில் புறங்காத்தா ரில்லைபாரே. 275

## அகஸ்தியர் புலஸ்தியருக்கு சோடசமாத்திரை யுரைத்தல்

பாரப்பா புலஸ்தியனே புத்திவானே
பகருகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
ஆரப்பா வெனைப்போல சொல்வாருண்டோ
அப்பனே யுந்தமக்காய் கூறினோம்யாம்
பேரப்பா சோடசமாம் குளிகைதானும்
பிரியமுடன் யானுரைப்பேன் மச்சகேந்திரா
தீரப்பா லிங்கமது துலமொன்றாகும்
தீர்க்கமுள்ள பூரமது துலம்ரண்டாமே. 276

ரெண்டான வீரமது துலமொன்றாகும்
நெடிதான காரமது துலமொன்றாகும்
செண்டான கெவுரியது துலமொன்றாகும்
செழிப்பான மதியுப்பு துலம்ரெண்டாகும்
திண்டான பாஷாணம் துலமொன்றாகும்
திறமான நிமிளையது துலமொன்றாகும்
பண்டான கெவுரியது துலமொன்றாகும்
பாலகனே கண்டரது துலங்கால்தானே. 277

காலான துத்தமது துலமொன்றாகும்
கருவான சிலையதுவும் துலங்காலாகும்
மாலான தாளகமும் துலமொன்றாகும்
மாசற்ற சிங்கியது துலமொன்றாகும்
சாலான சூதமது துலம்ரண்டாகும்
தாக்கான நாபியது துலமொன்றாகும்
பாலான சீனமது துலமொன்றாகும்
பாலகனே தொட்டியது துலங்கால்பாரே. 278

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா யிதுவெல்லாங் கல்வமிட்டுப்
பாலகனே யாறுவகை செயநீர்தன்னால்
நேரப்பா மைபோலே சாமமாட்டு
நெடுங்காரந் தானடங்கி யடங்குமட்டும்
ஆரப்பா மாத்திரைபோல் தானுருட்டி
அப்பனே ரவிதனிலே காயப்போடு
சீரப்பா குளிகையது யென்னசொல்வேன்
செகத்திலுள்ள நாதாக்கள் கூறாரன்றே. 279

அன்றானசிவ குளிகை காரமெத்த
அப்பனே யாராலுங் கூறவொண்ணா
குன்றான குடோரியது யென்னசொல்வேன்
குவலயத்தில் சித்துமுனி கூர்வதுண்டோ
தென்றிசையாம் பொதிகைமுனி ரிடியார்தாமும்
செப்பினார் மானிடர்கள் பிழைக்கவென்று
வென்றிடவே குளிகையது வுண்டபேர்க்கு
வேதாந்தத் தாயினுட வருளுண்டாமே. 280

உண்டான பராபரியு முன்னே நிற்பாள்
வுத்தமனே காயாதி யிதுவேயாகும்
திண்டான சாத்திரங்கள் கோடியுண்டு
செப்பினார் யிம்முறைபோ லாருங்கூறார்
சண்டமா ருதம்போல குளிகைகண்டு
சாற்றவில்லை சித்தர்களும் நாதர்தாமும்
கண்டிதமாய் யிந்நூல்தான் பெருநூலப்பா
கருதினேன் பனிரண்டு காண்டமாமே. 281

காண்டமாம் பனிரண்டு பிரிவுக்குள்ளே
காட்டினோம் லோகவதி சயங்களெல்லாம்
பூண்டேனே யிந்நூலாம் பெருநூலுக்குள்
புட்பகம்போல் ரோகவகைப் பிரித்துச்சொன்னேன்
தாண்டவம்போல் மனோன்மணியாள் கிருபையாலும்
தாயாரும் சாபமதை நீக்கியல்லோ
ஆண்டகையா மெந்தனது கிருபையாலே
அறைந்திட்டேன் பன்னீரா யிரந்தான்காணே. 282

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணவே குளிகைதன்னைக் கொண்டோர்க்கு
காசினியில் ரோகவகை தீரும்பாரு
தோணவே யனுபான மறிந்துகொண்டால்
தொல்லுலகில் ரோகமென்ற மேகம்போகும்
நீணவே கருமேகம் வெள்ளைபோகும்
நீடியதோர் மேகவகை யிருபத்தொன்றும்
கோணமது வாராது குய்யரோகம்
குவலயத்தில் பஞ்சுபோல் பறக்குந்தானே. 283

பறக்குமே பாண்டுவகை யாறுந்தீரும்
படருகின்ற தாமரையும் பதிகெட்டோடும்
இறக்கமில்லா ஊழியென்ற காற்றும்போகும்
யென்மகனே சாமளா தேவியெங்கே
திறமுடைய குளிகையினால் திமிர்கள் நீங்கும்
தீராத வயிற்றுவலி விம்மல்போகும்
உறமுடைய மாத்திரையே கூறப்போமோ
வுத்தமனே யீளையது காசம்போமே. 284

போமேதான் சில்விஷங்க ளற்றுப்போகும்
பொல்லாத குன்மமெட்டும் மகோதரம்போகும்
நாமேதான் சொன்னபடி கவுசைபோகும்
நலமான பீலிகையும் நவின்றுபோகும்
வேமேதான் சூலைபதி னெட்டும்போகும்
வேதாந்தத் தாயினிட கிருபையாலே
ஆமேதான் தந்தத்தின் வாயுதீரும்
அப்பனே கபாலவலி தீரும்பாரே. 285

தீருமே புண்புரைகள் யாவும்போகும்
தீராத சயரோகம் பதினெட்டும்போகும்
சேருமே தாதுவலு ரத்தமுண்டாம்
செழிக்குமே மேனியது திடமோமெத்த
வீருடனே நரம்புமது திமிர்த்துக்காட்டும்
வித்தகனே கொட்டாவி சோம்பல்போகும்
சீருடனே ரோமமது செழிப்பேகாணும்
சிற்பரனே தேகமது கற்றூணாமே. 286

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

கல்லான தூணதுவோ கரும்புபோலாம்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
காவலனே நாவலனே கழறவொண்ணா
செல்லான மண்ணதுதான் தின்னாதப்பா
செழிப்பான தேகமது காந்திமெத்த
நல்லதொரு வாசியது மேல்நோக்காது
நாடாது காலனவ னருகில்வாரான்
சல்லியமும் அதரணமும் கிட்டேநேரா
சாங்கமுடன் யாமுரைத்த குளிகையாமே. 287

## புலத்தியருக்கு சண்டமாருதம் கூறல்

குளிகையா மின்னமொரு போக்குசொல்வேன்
கொற்றவனே புலத்தியனே குணமுள்ளானே
நளினமுடன் சண்டமாரு தந்தானப்பா
நலமுடனே சாற்றுகிறேன் நண்புள்ளானே
தெளிவான செந்தூர மென்னவென்றால்
தேற்றமுடன் கூறுகிறேன் தெளிவுள்ளானே
வெளியான பூரமது ரெண்டேயாகும்
வேகமுள்ள வீரமது வொன்றேயாமே. 288

ஒன்றான லிங்கமது யெட்டேயாகும்
ஓகோகோ கெந்தியது நாலதாகும்
குன்றான சூதமென்ற செந்தூரந்தான்
கொற்றவனே ரெண்டையு மிடைதானாகும்
வென்றிடவே தாளகமும் வொன்றேயாகும்
வேகமுடன் றானரைப்பாய் நாலுசாமம்
பொன்றிடவே யாறுவகை செயநீர்தன்னால்
பொங்கமுடன் றானரைப்பாய் சாமம்நாலே. 289

நாலான சாமமது யரைத்தபோது
நாயகனே செந்தூர மென்னசொல்வேன்
காலான செந்தூரம் சொல்லொணாது
காவலனே நாவலனே கழறப்போமோ
மாலான செந்தூரங் குன்றியப்பா
மன்னவனே தேனதனில் கொண்டாயானால்
பாலான செந்தூர வேகத்தாலே
பாலகனே தேகமது ரோகம்போமே. 290

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போமேதான் குலைவலி கன்னிபோகும்
பொல்லாத மேகவலி ரோகம்போகும்
நாமேதான சொன்னபடி கசரோகங்கள்
நளினமுடன் சயரோக வலியும்போகும்
வேமேதான் வெகு நோய்கள் புண்ணும்போகும்
வெடிசூலை துடிசூலை யெல்லாம்போகும்
ஆமேதான் சிலவிஷங்க ளற்றுப்போகும்
அப்பனே குதிரைவலி தானும்போமே. 291

தானான பிரகாச மானபூபா
தனியான சிறுபாலா தயவுள்ளானே
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனா ரெந்தனுக்குச் சொன்னநீதி
பானான பூபதியாம் செந்தூரந்தன்
பாலகனே கண்டமட்டும் யானுரைப்பேன்
வேனான செந்தூர மென்னவென்றால்
வெற்றியுடன் யாமுரைப்பேன் வேந்தேகேளே. 292

## பூபதி செந்தூரம்

கேளப்பா புலத்தியனே புண்ணியவானே
கெவனமுடன் கூறுகிறேன் குணமுள்ளானே
பாளப்பா போகாமல் செந்தூரந்தான்
பாடுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
தாளப்பா தங்கமது நேக்குகட்டி
தண்மையுடன் கெந்தியது சரிநேரொக்க
நீளப்பா சம்பழத்தின் சாற்றினாலே
நிஷ்களங்க மாயரைப்பாய் சாமம்நாலே. 293

சாமமது தானரைப்பாய் மைபோலாக
சாங்கமுடன் தங்கத்திற் கங்கிபூட்டு
யேமமதில் தகடதனில் பூசிமைந்தா
யெழிலான ரவிதனிலே காயவைத்து
சாமமது வாராமல் சீலைசெய்து
சட்டமுடன் யெழுசீலை வலுவாய்ச்செய்து
நேமமுடன் புடந்தனிலே கோழியாக
நேர்மையுடன் றான்போடக் களங்குமாமே. 294

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

களங்கான களங்கதனை தானெடுத்துக்
கணிதமுடன் நிம்பழத்தின் சாற்றினாலே
தளம்பெறவே தானரைப்பாய் யாறுசாமம்
திட்டமுடன் மைபோலே தானுமாட்டி
உளம்பெறவே பில்லையது லகுவாய்தட்டி
வுத்தமனே ரவிதனிலே காயவைத்து
திளம்பெறவே சில்லிட்டுச் சீலைசெய்து
தீர்க்கமுடன் கோழியென்ற புடந்தான்போடே. 295

போடவே புடமதுவு மாறிப்பாரு
புகழான புலத்தியனே கருவுள்ளானே
தேடவே செந்தூர மென்னசொல்வேன்
தேசமதில் யார்செய்வார் சித்தர்செய்வார்
கூடவே யிம்முறைபோல் பத்துமுறைபோடு
குமுறவே சம்பழத்தின் சாற்றினாலே
நீடவே நீயரைப்பாய் கைவிடாமல்
நெடிதான மைபோல சாமம்நாலே. 296

நாலான சாமமது வரைத்துமைந்தா
நலமுடனே வில்லைதட்டி நயமதாக
பாலான ரவிமுகத்தில் காயவைத்துப்
பாலகனே சில்லிட்டு சீலைசெய்து
மேலான கோழியென்ற புடந்தான்போடு
மேன்மைபெற புடமாறி யெடுத்துப்பாரு
சூலான செந்தூரம் வர்ணங்காட்டும்
சுந்தரனே வருணன்போல் சொலிக்கும்பாரே. 297

சொலிக்குமே செந்தூரம் பதனம்பண்ணு
சுந்தரனே புலஸ்தியனே சொருபவானே
கெலிக்கவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
கெடியான வயமதுவும் பலந்தானப்பா
வலிதான வயமதனை தகடதாக்கி
வளம்பெறவே தகட்டின்மேல் பூசக்கேளீர்
மெலிவான கெந்தகத்தை சரிநேரொக்க
மேன்மையுடன் சம்பழத்தின் சாற்றாலாட்டே. 298

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆட்டப்பா மைபோலே யரைத்துமைந்தா
அப்பனே தகட்டின்மேல் பூசிப்பின்பு
தாட்டிகமாய் ரவிதனிலே காயவைத்து
தகமையுடன் கோழியென்ற புடத்தைப்போடு
நாட்டயநுங் களங்காகி நொறுங்கியேதான்
நலமான பொடிபொடியாஞ் சிறுதூளாகும்
நீட்டமுடன் தூள்தனை யெடுத்துமைந்தா
நீதியுடன் சரக்குவகை செப்பக்கேளே. 299

செப்பவென்றால் களங்குடனே துருசுசேரு
செயலான சூதமது வீரஞ்சேரு
ஒப்பமுடன் சிங்கியது சரியதாக
ஒருநிறையாய்ப் பலத்துக்குக் காலதாக
மெப்புடனே சம்பழத்தின் சாற்றினாலே
மேன்மைபெற களங்கதுதான் கூடச்சேர்த்து
செப்பியதோர் சம்பழத்தின் சாற்றினாலே
சேர்த்தரைப்பாய் சாமமது யெட்டதாமே. 300

எட்டான சாமமது மைபோலாட்டி
யென்மகனே தானரைத்துப் பில்லைசெய்து
திட்டமுடன் ரவிதனிலே காயவைத்து
தீர்க்கமுடன் சில்லிட்டுச் சீலைசெய்து
வெட்டவெளி யானதொரு வனாந்தரத்தில்
வெளியாங்க மானதொரு புடத்தைப்போடு
தொட்டதொரு செந்தூர மென்னச்சொல்வேன்
துரைராஜ சுந்தரனே நாவொண்ணாதே. 301

ஒண்ணாது செந்தூர மென்னவென்றால்
வுத்தமனே முன்போல புடந்தான்போடு
மண்ணான பிரிதிவுதான் செவப்புமெத்த
மன்னவனே செந்தூரஞ் சொல்லொண்ணாது
கண்ணான செந்தூரம் பத்துமுறைபோடு
கருவான செந்தூரங் காரமெத்த
திண்ணமுடன் செந்தூரம் பதனம்பண்ணு
தீர்க்கமுட னின்னமொரு மார்க்கங்கேளே. 302

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

மார்க்கமாம் புலஸ்தியனே மச்சகேந்திரா
மதிப்புடனே கூறுகிறேன் மைந்தாகேளு
தீர்க்கமுடன் நாகமது பலமொன்றாகும்
திறமான சிங்கியது பலமுங்கால்தான்
சீர்க்கமல மானதொரு விரமப்பா
சிறப்பான பலமதுவும் காலதாகும்
பூர்க்குகின்ற மதியுப்பு பலமுங்கால்தான்
புகழான லிங்கமது பலங்காலாமே. 303

காலான சரக்குவகை கணக்கதாக
கருவாகத் தானிறுத்திக் கல்வமிட்டு
மேலான நாகமதைப் பொடியதாக்கி
மேன்மைபெற சரக்குகளை யொக்கச்சேர்த்து
தாலான சம்பழத்தின் சாற்றாலாட்டி
தகமைபெற பில்லையது லேசாய்தட்டி
சேலான ரவிதனிலே காயவைத்து
செம்மலுடன் வோட்டிலிட்டுச் சீலைசெய்யே. 304

சீலையது யெழுசீலை வலுவாய்ச்செய்து
செம்மலுடன் கோழியென்ற புடந்தான்போடு
மாலைதனில் புடமாறி யெடுத்துப்பாரு
மன்னவனே செந்தூர மென்னசொல்வேன்
வேலையென்ற செந்தூரந் தனையெடுத்து
மேன்மைபெற பின்னுமந்த கல்வமிட்டு
ஆலைபோல் தானரைத்துப் பில்லைசெய்து
அப்பனே ரவிதனிலே காயப்போடே. 305

போடேதான் யிப்படியே பத்துமுறைபோடு
போக்கான செந்தூரஞ் சிவப்புமெத்த
நீடான செந்தூரம் பதனம்பண்ணு
நீமகனே மறுபடியும் பகரக்கேளு
கூடேதான் யின்னமொரு மார்க்கங்கேளு
குறிப்பான ரவியென்ற செம்புதானும்
ஆடேதான் செம்பதுவும் பலந்தானொன்று
அப்பனே யிடையதுவும் நிறுத்துக்கொள்ளே. 306

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

கொள்ளவே செம்புதுவை தகடதாக்கி
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
கொற்றவனே யதற்குநிகர் மருந்துகேளு
எள்ளளவும் பிசகாது புலத்தியாகேள்
யென்மகனே மருந்துவகை யானுரைப்பேன்
கள்ளமின்றி நேராது கெவுரியப்பா
கருவான லிங்கமது பூரமப்பா
உள்ளபடி சொல்லுகிறேன் கெந்திதானும்
வுத்தமனே வீரமது சரியாய்க்கூட்டே. 307

கூட்டவே வகைவகைக்குக் காலதாக
குமுறவே தானரைப்பாய் சம்பழத்தால்
தாட்டிகமாய் யெண்சாம மரைத்தபின்பு
சாங்கமுடன் தகடதனில் மேலேபூசி
மாட்டிமையாய் ரவிதனிலே காயவைத்து
மன்னவனே ஓட்டிவிட்டு சீலைசெய்து
தேட்டமுடன் கோழியென்ற புடந்தான்போடு
தேசிகனே புடமாறி யெடுத்துப்பாரே. 308

பார்க்கையிலே செந்தூர மென்னசொல்வேன்
பாலகனே புலத்தியனே பண்புள்ளானே
சேர்த்துமே செந்தூரந் தனையெடுத்து
சிதாபாசந் தனைநினைந்து சிறியபாலா
ஆர்க்கவே மறுபடியும் கல்வமிட்டு
அப்பனே மைபோலே சம்பழத்தால்
தீர்க்கமுடன் மைபோலே யாட்டிமைந்தா
திறமுடனே பில்லையது செப்பக்கேளே. 309

செப்பவென்றால் ரவிதனிலே காயப்போடு
செங்கமலக் கையானே துய்யபாலா
ஒப்பமுடன் ஓட்டிவிட்டுச் சீலைசெய்து
ஓகோகோ நாதாக்கள் பாகம்பொய்யா
அபபனே கோழியென்ற புடந்தான்போடு
அரகரா யென்னசொல்வேன் செந்தூரந்தான்
துப்புரவாய் செந்தூரந் தனையெடுத்து
துரைராஜ சுந்தரனே பத்துமுறைபோடே. 310

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

முறையான முறைபாடு பிசகாவண்ணம்
முடியான் புலஸ்தியனே முதன்மையோனே
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
குறையதுவும் நேராமல் குணமுள்ளானே
கொற்றவனே பத்துமுறை யிப்படியே போடு
திறையான செந்தூர மென்னசொல்வேன்
தீர்க்கமுள்ள மருந்ததனை பதனம் பண்ணு
நிறையான முறைபாடு யின்னஞ்சொல்வேன்
நீதியுடன் மாணாக்கள் பிழைக்கத்தானே. 311

தானான புலஸ்தியனே தன்மையோனே
தகைமையுள்ள பெரும்சாலா மச்சேந்திரா
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொற்றவனா ரெந்தனக்கு வுரைத்ததர்மம்
தேனான மனோன்மணியாள் கிருபையாலும்
தேசொளிவின் சின்மயத்தி னருளினாலும்
பானான பரஞ்சுடரின் புண்ணியத்தால்
பகருகிறேன் யின்னமொரு மார்க்கங்கேளே. 312

மார்க்கமாம் புலஸ்தியனே மதிவல்லோனே
மாசற்ற கரிவங்கம் பலந்தானொன்று
தீர்க்கமுள்ள சுத்தியது வலுவாய்ச்செய்து
திகழுடனே தகடதுவும் நையத்தட்டி
பூர்க்கவே தாளகமும் சிலைதானொன்று
புகழான துருசுடனே சுத்தமப்பா
ஏர்க்கவே சரக்கதுவும் சரிநேராக
யென்மகனே யெடைகண்டு நிறுத்துக்கூட்டே. 313

நிறுக்கவே சரக்கதனை கல்வமிட்டு
நேர்படவே மைபோல தாமரைத்து
பொறுக்கவே வங்கமென்ற தகட்டிற்பூசி
பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
பெருக்கவே யோட்டிலிட்டு மூடியேதான்
பேரான கவசமது வலுவாய்ச்செய்து
செருக்கமுடன் வராகமென்ற புடந்தான்போடு
செம்மலுடன் புடமாறி யெடுத்துப்பாரே. 314
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரேதான் [illegible] கலங்கிநிற்கும்
பாங்கான களங்கதனை யெடுத்துப்பாலா
நேரேதான் சரக்குவகைச் சேர்ந்தவங்கம்
நெடிதான சரக்கெல்லாம் கல்வமிட்டு
தீரேதான் சம்பழத்தின் சாற்றினாலே
தீர்க்கமுடன் றானரைப்பாய் யெட்டுசாமம்
கூரேதான் றானரைத்து பில்லைதட்டி
குற்றமது நேராமல் ரவியில்வையே. 315

வைத்துமே யோட்டிலிட்டு யோடுமூடி
வளம்பெரிய சீலையது வலுவாய்ச்செய்து
பொய்த்துயே போகாமல் புண்ணியவானே
புகழான புடமதுவும் போடுபோடு
மெய்க்கவே செந்தூர மெடுத்துப்பாரு
மேன்மக்காள் பிழைப்பதற்கு புலத்தியாகேள்
மைக்கமலம் வீற்றிருக்கும் தாயார்பாதம்
மன்னவனே யென்னாளும் போற்றுவேனே. 316

போற்றுவேன் பத்துமுறை யிப்படியே போடு
பேரான செந்தூர மென்னசொல்வேன்
ஆற்றியே பூசையது வெகுவாய்ச்செய்து
அப்பனே செந்தூர மென்னசொல்வேன்
நீற்றமுடன் செந்தூரம்போகும் போக்கு
நீதியுடன் நாமுரைப்பேன் நேர்மையாக
தேற்றமுடன் முறைபாடு சொல்லுவேன்யான்
தெளிவுடனே கைபாகஞ் செப்பக்கேளே. 317

செப்பவே முன்செய்த செந்தூரந்தான்
செவ்வையுடன் குணபாடு கண்டறிந்து
ஒப்பமுடன் பஞ்சலோக செந்தூரத்தை
ஓகோகோ நாதாக்கள் சொன்னவண்ணம்
தப்பிதங்கள் நேராமல் தயவுள்ளானே
தகைமையடன் பஞ்சலோக செந்தூரத்தை
மெப்புடனே பஞ்சபூத மெடைதான்கண்டு
மேன்மைபெறக் கல்வமதில் போடுபோடே. 318

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

போட்டுமே யாறுவகை செயநீர் தன்னால்
பொங்கமுடன் றானரைப்பாய் நாலுசாமம்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
நீட்டமுடன் றானரைத்துக் குப்பிக்கேற்றி
நேர்மையுடன் மாக்கல்லால் மூடியேதான்
தாட்டிகமாய் யெழுசீலை வலுவாய்ச்செய்து
தன்மைபெற ரவிதனிலே காயவைத்து
நாட்டமுடன் தளவாயாஞ் சட்டிதன்னில்
நலம்பெறவே மணல்தனையே கொட்டிடாயே 319

கொட்டியே விரல்நாலு வுயரம்போடு
கொற்றவனே குப்பிதனை நடுவேவைத்து
திட்டமுடன் மேலுமந்த மணலைக்கொட்டி
தீர்க்கமுடன் மேற்சட்டி கொண்டுமூடி
சட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து
சாங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
பட்டயம் போல் வாலுகையாந் தன்னிலப்பா
பாங்குபெற வேழுநா ளெரித்திடாயே. 320

எரித்துமே யிரவுதனி லாறவிட்டு
யென்மகனே புலஸ்தியனே வெழின்மாராகேள்
செரிக்கவே தீயாறி யெடுத்துப்பாரு
சிவப்பான செந்தூரம் யென்னசொல்வேன்
முரித்துமே செந்தூரங் கறுத்திருந்தால்
முன்போல யாறுவகை செய்நீர் தன்னால்
குரித்ததொரு சாமமது கணக்குபோல
கொப்பெனவே கல்வமிட்டு வறைத்திடாயே. 321

அறைத்துமே மைபோலே தானறைத்து
அப்பனே ரவிதனிலே காயவைத்து
திறையதுவும் நேராமல் துய்யபாலா
துப்புரவாய் பொடியாக்கிக் குப்பிக்கேற்றி
முறைபோலே முன்போலே மணலைக்கொட்டி
முனியான சித்தர்ரிடி நாதர்தம்மை
குறையொன்றும் நேராமல் செந்தூரந்தான்
குழுறவே சிவக்கவென்று பணிந்திடாயே. 322

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பணிந்துமே செந்தூரந் தனையெடுத்தும்
பாவலனே நாவலனே பகர்வேனப்பா
துணிந்துமே சீசாவிற் பதனம்பண்ணு
துகளற்ற செந்தூர மென்னசொல்வேன்
அணியான செந்தூரம் பூசையப்பா
அப்பனே சொர்ன்ன வயிரவன்றான்பூசை
கனிவுடனே பூசையது கொண்டபோது
காவலனே சாபமது நிவர்த்தியாச்சே. 323

ஆச்சப்பா பூசையது வானபின்பு
அப்பனே சீசாவிற் பதனம்பண்ணு
பேச்சொன்றுங் கூறாதே பூபாலாகேள்
பேரான கர்மிகளும் பாவருண்டு
பாச்சலுட னுமையடுத்து மருந்துகேட்பார்
பாலகனே முறைபாடு வழியுங்கேட்பார்
மாச்சலது நேராமல் துணிவுகொண்டு
மன்னவனே யாதொன்று மிலையென்பாயே. 324

என்னவே மருமமது நீயுரைத்தால்
எழிலுடனே யுனையொன்றுங் கேட்கமாட்டார்
துன்னவே யொன்றுமிலை யென்றுகூறி
துப்புரவா யகலவிட்டு பின்னேசென்று
நன்னயமாய் தன்மனதி லுள்ளடங்கி
நாயகனே தம்பதிக்குச் செல்கவென்று
சொன்னயமாய் விடைபெற்று போவாரப்பா
சுந்தரனே யிந்திரனே செப்பக்கேளே. 325

செப்பவென்றால் யுந்தனிட மர்மங்கண்டால்
தேசிகனே புலஸ்தியனே கண்ணியவானே
தப்பிதங்கள் நேர்ந்துவிடும் தலைதான்போகும்
தாரணியி லுந்தன் மேல் கருவுவைப்பார்
எப்படியு முந்தனுயிர் போக்கவென்று
யெக்காலம் யுகமுடிவு காலமட்டும்
ஒப்பமுடன் பகையதுவும் மனதிற்கொண்டு
யுந்தனையுங் கொல்வதற்கு நண்ணுவாரே. 326

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நண்ணுவார் புலஸ்தியனே நளராஜேந்திர
நானிலத்தில் யுளவுடனே யிருக்கவேண்டும்
திண்ணமுடன் யனுதினமும் சிந்தர்பாதம்
தீர்க்கமுடன் யெந்நாளும் துதிக்கவேண்டும்
குண்ணுதலாய்க் கண்டவதற்கு யேழ்மைபோலே
கொற்றவனே யிருந்துமேதான் காலம்போக்கு
பண்ணவே யுந்தனையுமாராலாகா
பாவலனே நாதர்பதம் நண்ணுவாயே. 327

நாதரென்றால் சித்தர்முனி யருளும்வேண்டும்
நாட்டினிலே பெரியோர்கள் கிருபைவேண்டும்
போதமென்றால் போதமது ஞானங்கொள்ளு
பொன்னவனே சிவஞானப் பொருளேவேண்டும்
நீதலென்றால் துரியாதிதங் காணவேண்டும்
நிஷ்களங்க மானதொரு குறியே வேண்டும்
பாதமென்றால் மனோன்மணியாள் பட்சம்வேண்டும்
பாலித்தா லுந்தமக்கு சித்தியாமே. 328

சித்தியா மஷ்டசித்துக் காண்பீரப்பா
சீர்பெறலாம் வையகத்து வதிசயங்கள்
முத்திபெற வழியுண்டு பாதையுண்டு
மூர்க்கமுட னிருந்தவற்கு வொன்றுமில்லை
எத்திசையுங் கீர்த்தியுண்டு செயமுமுண்டு
யெழிலான சாயுச்சிய பதவியுண்டு
சத்தியத்தை சதாகால மறக்காமற்றான்
சாங்கமுடன் ரிடிகள்பதம் போற்றுவாயே. 329

போற்றியே புலஸ்தியனே சுந்தராகேள்
பொங்கமுடன் முன்னுரைத்த செந்தூரத்தை
ஆற்றலுடன் காயாதி கற்பம்போல்
அனுதினமும் மண்டலந்தான் காலைமாலை
சீற்றமுடன் தேனதனில் கொண்டாயானால்
சிற்பரனே தேகமது கற்றூணாகும்
தேற்றமுடன் நெடுங்கால மிருக்கலாகும்
தேர்வேந்தே புலஸ்தியனே தெளிவாய்க்கேளே. 330

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேளப்பா புலத்தியனே மச்சேந்திரா
கவனமுடன் சொல்லுகிறேன் கெவனபாலா
மீளப்பா முன்னுரைத்த செந்தூரத்தை
மீட்சியுடன் மானிடர்கள் கொண்டாரானால்
பாளப்பா தேகமது போகாதப்பா
பாருலகில் நெடுங்கால மிருக்கலாகும்
ஆளப்பா சுவாசமது மேல்நோக்காது
அப்பனே செந்தூரப் பெருமைதானே. 331

பெருமையாம் செந்தூர மென்னசொல்வேன்
பேரான மானிடர்கள் சாகுங்காலம்
அருமையா யாத்துமந் தானேகுங்காலம்
அனித்தியமா மரணமென்ற சமீபந்தன்னில்
ஒருமையுடன் முலைப்பாலில் தேனிற்கொண்டால்
வுத்தமனே யெழுந்துமே வார்த்தைசொல்வான்
திருவினையால் கிருபையினால் வார்த்தை பேசி
திரும்பியே தான்படுப்பான் திண்மைபாரே. 332

பாரேதான் செத்தசவம் போலானாலும்
பட்சமுடன் யெழுந்துமல்லோ வார்த்தைசொல்வார்
நேரேதான் முகதாவில் மொழிகள்கூறி
நேர்மையுடன் றான்போவார் கைலாயந்தான்
கூரேதான் பூபதியாஞ் செந்தூரந்தான்
குவலயத்தி லார்செய்வார் யோகிசெய்வார்
சீரேதான் செந்தூரப் போக்கை கண்டோர்
சிதாபாச க்களைதனையே காணுவாரே. 333

காணுவார் செந்தூரங் குன்றியுண்டால்
காசினியில் நோயேது பிணிகளேது
ஆணுவங்கள் காமியங்கள் மிகவுண்டாகும்
அப்பனே யேழானைப் பலனுண்டாகும்
கோணுவென்ற வாதமது யெண்பதும்போகும்
கொடிதான சூலைவலி பதினெட்டும் போகும்
ஊனுடலந் தேகமது யிறுகியல்லோ
வுத்தமனே ரோகமது கழன்றுபோமே. 334

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

பேரமேதான் சயரோகம் பதினெட்டும்போம்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
பொல்லாத குன்மமெட்டும் பாண்டுவாறும்
வேமேதான் மேகமென்ற யிருபத்தொன்றும்
வெட்டவெனி கானகத்தி லேகும்பாரு
ஆமேதான் ராசரது ராசக்கட்டி
அப்பனே பிளவையென்ற புண்ணுமாறும்
நாமேதான் சொன்னபடி மதுமேகந்தான்
நாடாது வுடலைவிட்டு யேகுந்தானே. 335

ஏகுமே மந்தார காசம்போகும்
யெழிலான சன்னிமுதல் பதினெட்டும்போம்
போகுமே சுரங்களறு பத்துநாலும்
பொலிவான படைகளிரு பத்துநான்கும்
சாகுமே சொரிகளிரு பத்திரண்டும்
சற்பத்தின் விஷமதுவுஞ் சண்ணிப்போகும்
வாகுடனே சில்விஷங்க ளற்றுப்போகும்
வயிற்றுவலி பொருமல்முத லகன்றுபோமே. 336

அகலுமே ரோகவகை யெல்லாம்போகும்
அப்பனே கிராணிவகை யாவும்போகும்
நிகலுமே சர்வநோய் கசரோகம்போகும்
நீடான ரோகமது நிலைநில்லாது
திகலுமே வுதிரமது பெருகிக்காணும்
தீர்க்கமுடன் பலவிஷங்க ளற்றுப்போகும்
புகலுமே தேகமது கற்றூணாகும்
புங்கசித்தி தேகமது மின்னும்பாரே. 337

மின்னுமே தேகமது சிவந்துகாட்டும்
மிக்கான கண்ணிரண்டுஞ் செவ்வலரியாகும்
துன்னுமே ரோமங்கள் கறுத்துக்காட்டும்
துப்புரவாய் நரைதிரையு மற்றுப்போகும்
தென்பொதிகை சித்தர்முனி ரிடிகள்நாதர்
தேர்வேந்தர் சீஷவர்க்கம் கிருபையாலே
மன்னரிட ராசாதி கிருபையாலே
மாறாமல் தென்னவன்போ லிருக்கலாமே. 338

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

இருக்கலாஞ் சதாகாலம் பிணியுந்நீங்கி
யெழிலுடனே வையகத்தி லிருக்கலாம்பார்
சுருக்கமுட னின்னமொரு மார்க்கஞ் சொல்வேன்
சுத்தமுள்ள கண்மணியே கழறக்கேண்மோ
பெருக்கமுடன் யிம்மருந்தை சித்தர்பாகம்
பேசாமல் மவுனமதாய் போக்குசொல்வேன்
இருட்கடலை நீக்கியருட் கொண்டாற்போல
யெழிலுடனே தாக்கும்வகை கூறுவேனே. 339

கூறுவேன் முன்னுரைத்த செந்தூரத்தை
குணமுள்ள புலஸ்தியனே குமுதவானே
தேறுதலாய் லோகமதிற் பாச்சுதற்கு
தெளிவுடனே போக்குவகை செப்பக் கேளீர்
நாறுகின்ற செம்பதிலே நூற்றுக்கொன்று
நாட்டமுடன் றானுருக்கி குருவொன்றீய
மாறுதலாய் களிம்பகன்று ரவிதானப்பா
மன்னவனே மாற்றதுவும் பத்ததாமே. 340

பத்தான மாற்றதுவு மென்னசொல்வேன்
பாங்கான தங்கமது சொல்லப்போமோ
சித்தான சித்துமுனி செய்யுந்தங்கம்
செம்மலுடன் பிறவியென்ற தங்கமாச்சு
முத்தான தங்கமது முயன்றதங்கம்
மூதுலகில் நாதாக்கள் செய்யுந்தங்கம்
வித்தான புடத்துக்கு யுகந்ததங்கம்
வீரான தங்கமது சொல்லொண்ணாதே. 341

ஒண்ணான தங்கமது கூறொண்ணாது
வுத்தமனே சுயத்தங்கம் புடத்துக்கேகா
கண்ணான வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
கன்னவனே தானுருக்கி குருவொன்றீய
மண்ணான வெள்ளியது பழுக்கும்பாரு
மகத்தான மாற்றதுவோ நாவொண்ணாது
திண்ணமுடன் வாரடித்துப் புடத்தைப்போடு
தீர்க்கமுடன் [illegible]றொண்ணாதே. 342

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கூறவென்றால் நாவில்லை பரவுமில்லை
குறிப்பான தங்கமது மாற்றோபத்து
சீறலது வாராத சுயத்தங்கமப்பா
செப்புகிறேன் காவிக்கும் புடத்துக்கேகா
மாறலது வாராது வலுத்ததங்கம்
வளம்பெரிய நாதாக்க ளுகந்ததங்கம்
தேறலற்ற சுயத்தங்கம் பிரிதிவுதங்கம்
தெளிவான தங்கமென்றே செப்பலாமே. 343

செப்பவென்றால் யின்னமொரு வயணஞ்சொல்வேன்
செங்கமலக் கண்ணானே கருவுள்ளானே
துப்பலென்ற குடவனிலே கொடுத்தாயானால்
துப்பற்ற தங்கமென்ற யேமமாச்சு
கொப்பெனவே நூற்றுக்கு குருவொன்றீய
கோபாலா மாற்றதுவுங் கூறொண்ணாது
மெய்யலுடன் வாரடித்துப் புடத்தைப்போடு
நெடிதான தங்கமது சொல்லொணாதே. 344

சொல்லவென்றால் புடத்துக்கு வசையாத்தங்கம்
சுடரொளிபோல் வையகத்தில் வீசுந்தங்கம்
கொல்லனது யுலைக்களத்துக் குகந்ததங்கம்
கொற்றவனே ராசாக்க ளணியுந்தங்கம்
புல்லறிவால் யாமுணர்ந்து வறிந்தமட்டும்
புங்கவனே யாமுரைத்த பதவித்தங்கம்
அல்லல்வினை தானகற்றி வையகத்தில்
அப்பனே சதாகாலம் வாழ்குவாயே. 345

## அகஸ்தியர் புலஸ்தியருக்கு அஷ்டபூபதி மாத்திரை கூறல்

வாழவே யின்னமொரு வயணம்கேளு
வளமையுள்ள புலஸ்தியனே மச்சகேந்திரா
சூழவே அஷ்ட பூபதிதானப்பா
சுத்தமுடன் யாமுரைப்பேன் சுந்தராகேள்
சாழவே லிங்கமது பலமொன்றாகும்
சார்பான பூரமது பலமொன்றாகும்
நீழவே வீரமது பலமொன்றாகும்
நிஷ்களங்க மானதொரு சிங்கியாமே. 346

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சிங்கியாம் பலமது மொன்றாகும்
சீரான பாஷாணம் பலமொன்றாகும்
இங்கிதமாங் கெந்தியது பலமொன்றாகும்
யெழிலான சூதமது பலமொன்றாகும்
அங்கமுள்ள தாளகமும் பலமொன்றாகும்
அப்பனே சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டு
புங்கசித்தி கொண்டதொரு சரக்கனைத்தும்
புகழுடனே குழிக்கல்லில் தன்னிலாட்டே. 347

ஆட்டவே சரக்கெல்லாம் வொன்றாய்க்கூட்டி
அப்பனே மூலிவகை செப்பக்கேளீர்
தாட்டிகமாய் கையானின் சாற்றினாலே
கவுனமுடன் தானரைப்பா யாறுசாமம்
நீட்டமுடன் பெருங்கையான் சாமம்நாலு
நீடான பொற்கையான் சாமம்நாலு
வேட்டமுடன் பொன்னாவரை சாமம்நாலு
வேகமுள்ள கரிப்பானின் சாமம் நாலே. 348

நாலான சாமமது வரைத்தபின்பு
நலமான நெல்லிக்காய் சாமம்நாலு
காலான முசுக்கையது சாமம்நாலு
கருவான நொச்சியது சாமம்நாலு
தாலான கொடிவேலி சாமம்நாலு
தாக்கான சூரையது சாமம்நாலு
மேலான மூலியது சூரையப்பா
மேன்மையுள்ள பசளையது சாமம்யாறே. 349

ஆறான கரும்பசளை சாமம்நாலு
அப்பனே வேளையது சாமம்நாலு
நாறான புனல்த்தண்டு சாமம்நாலு
நாயகனே செம்முள்ளி சாமம்நாலு
கூறான மத்தஞ்சாற் சாமம்நாலு
குறிப்பான துளசியிற் சாமம்நாலு
பாறான செவ்வள்ளி சாமம்நாலு
பாங்கான கண்டங் கத்திரிதான் வேரே. 350

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

சேர்த்துமே தானரைப்பாய் சாமம்நாலு
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
செம்மலுட னின்னமுந்தான் மூலிசொல்வேன்
தீர்த்தமெனுங் கருந்துளசிச் சாமம்நாலு
திறமான கௌதும்பை சாமம்நாலு
மார்த்தமெனும் விடதாரி சாமம்நாலு
மகத்தான குமரியது சாமம்நாலு
சார்த்தகியாழ் கொண்டதொரு மூலியப்பா
சதுரான விஷ்ணுமூலி தானுங்கூட்டே. 351

தானான மூலியது சொல்லொண்ணாது
தண்மையுள்ள புலஸ்தியனே மச்சசேந்திரா
தேனான மூலியது காரமெத்த
தெகிட்டாத மூலியப்பா பிராணமூலி
கோனான குருமூலி செங்கண்மூலி
கொற்றவனே வீசுரமா மூலியப்பா
பானான மூலியது சாமம்நாலு
பளிங்குடனே தானரப்பாய் பண்பாய்க்கேளே. 352

பண்பான மூலியது நெய்ச்சட்டியாகும்
பாலகனே நாற்சாம மறைத்தபின்பு
திண்பான கருங்கொள்ளு மூலியப்பா
திறமான தாழியது நாலுசாமம்
நண்பான கோவைச்சாற் நாலுசாமம்
நலமுடனே தானரைப்பாய் மைபோலாக
கண்பாக பிரமிச்சார் சாமம்நாலு
கதிப்புடனே தானரைப்பாய் கருவுள்ளானே. 353

கருவான மூலியப்பா யேதென்றாக்கால்
கவிராஜ புலஸ்தியனே கவிராஜேந்திரா
திருமண மூலியது பிரமையப்பா
தீர்க்கமுள்ள மூலியினால் சாமம்நாலு
மருவான செந்தொட்டி தழை தானப்பா
மார்க்கமுள்ள மூலியினால் சாமம்நாலு
ஏருவான சோகைப்புல் லாறுசாமம்
யெழிலுடனே தானரைப்பாய் மைபோல்தானே. 354

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

தானான காவட்டம் பூண்டுதானும்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தண்மையுடன் தானரைப்பாய் யெட்டுசாமம்
வேனான தழையபபா கொட்காவேளை
வேட்கமுடன் தானரைப்பாய் யெட்டுசாமம்
வேறான தழையப்பா கொட்காவேளை
வேட்கமுடன் தானரைப்பாய் நான்குசாமம்
கோனான பூனையென்ற சாற்தானப்பா
கொற்றவனே தானரைப்பா யேழுசாமம்
தேனான மண்ணாக்கின் பூடுதானும்
தேற்றமுடன் தானரைப்பாய் சாமமெட்டே. 355

எட்டான சாறதனால் மைபோலாட்டு
யெழிலான ரவிதனிலே காயவைத்து
திட்டமுட னதில்சேர்க்க செயநீர்கேளு
திடமான செயநீரா மேதென்றாக்கால்
அட்டதிசை நாதாக்கள் கண்டாராய்ந்த
அருட்பொருளாஞ் செயநீராம் யாருங்காணார்
சட்டஞுடன் யானுரைப்பேன் சங்கையில்லா
சதுரான செயநீரின் போக்குதானே. 356

## செயநீர் போக்கு

போக்கான செயநீராம் யேதேன்றாக்கால்
பொலிவாகச் செப்புகிறேன் பொதிகையோனே
தாக்கான கல்லுப்பு பலமொன்றாகும்
தகமையுள்ள யிந்துப்புப் பலமொன்றாகும்
நீக்கான மதியுப்பு பலமொன்றாகும்
நிஷ்களங்க மானதொரு கரியுப்பாகும்
நோக்கான வளையலுப்புப் பலமொன்றாகும
நொடிதான உவருப்புப் பலந்தான்கேளே. 357

கேளப்பா சவுட்டுப்புப் பலமொன்றாகும்
கெடியான சாரமது பலமொன்றாகும்
நீளப்பா படிகாரம் பலமொன்றாகும்
நிஷ்களங்க மானதொரு மூங்கலுப்பு
தாளப்பா யவச்சாரம் பலமொன்றாகும்
தாக்கான பூநீறு சரியதாகும்
மீளப்பா யிதுவெல்லா மொன்றாய்க்கூட்டி
மிக்கான கல்வமதில் போட்டிடாயே. 358

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போட்டுமே பனிசலத்தை விட்டுப்போட்டு
பொங்கமுடன் தானரைப்பாய் சாமம்நாலு
நீட்டமுடன் அரைத்தபின்பு மைந்தாபாரு
நிஷ்களங்க மானதொரு பனியில் வைப்பாய்
வாட்டமுடன் பனிதனிலே சலமேயாகி
வளம்பெரிய காரமுள்ள செயநீராகும்
மீட்டமுடன் செயநீரில் வீரம்பூரம்
மிக்கவே சலந்தனிலே கரைத்திடாயே. 359

கரைத்துமே செயநீரைத் தானிறக்கி
கன்னவனே சீசாவிற் பதனம்பண்ணு
திரைத்ததொரு செயநீரைக் காரமேத்தி
தீர்க்கமுடன் முன்சொன்ன மருந்தையப்பா
நிரைத்துமே கல்வமதி லிட்டுமைந்தா
நிகழ்ச்சியுடன் தானரைப்பா யாறுசாமம்
விரைத்துமே போகாமல் மெழுகுபாகம்
விருப்பமுடன் செயநீரா லரைத்திடாயே. 360

செயமான நீரதனா லரைக்கும்போது
செப்பவொண்ணா கார சாரங்கள்சேர்ந்து
நயமான பாஷாணம் வீரடங்கி
நலமான குளிகையென்ற பேருமாச்சு
சுயமான குளிகைக்கு நாமதேயம்
சுருபமென்ற அஷ்டபூ பதியுமாச்சு
கயமான ரோகங்கள் கடலேபோகும்
காசினியில் யார்செய்வார் சித்தர்பாரே. 361

சித்தான சித்துமுனி தாமேசெய்வார்
சீருலகில் மற்றவர்கள் செய்யமாட்டார்
சுத்தமுள்ள ஞானவான் யோகவான்கள்
சுந்தரனே செய்வார்கள் மற்றோர்செய்யார்
தத்துவத்தில் மிகுந்ததொரு புத்திவான்கள்
சட்டமுடன் செய்வார்கள் மற்றோர்மாட்டார்
மெத்தனவே யுந்தமக்கு யாமுரைத்தோம்
வேதாந்தத் தாயினது திருவடிதானே. 362

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தானான தாயினது கிருபையாலும்
சதாசிவத்தின் சொற்சொரூப வருளினாலும்
தேனான சித்தர்பதி னெண்பர்தம்பால்
தேசொளிவின் சின்மயத்தின் பெருமையாலே
கோனான வசுவனியாந் தேவர்பாதம்
கொற்றவனே யுந்தனக்கு வாய்த்துதல்லோ
மானான மண்டலத்தில் நீயுமப்பா
மாபாவி யானவற்கு மனம்விடாதே. 363

மனம்விட்டால் தாமமது பெய்யும்பாரு
மானிடர்கள் நல்லோர் பொல்லாருண்டு
தினமதுவும் வீண்போகா காலம்பார்த்து
தினகரனே சதாகாலம் பூரணத்தை
நினவுடனே தியானமதி லுச்சரித்து
நீதியுடன் சித்தர்பதம் பணிந்துபோற்றி
சினமதுவும் நேராமல் சீர்பணிந்து
சிற்பரனை நெடுங்காலந் துதிக்கநன்றே. 364

துதியான நிலைதனிலே வமர்ந்துகொண்டு
துப்புரவாய் யெளியோர்கள் ரோகிகண்டு
மதியோடு வ்யாதிமுகம் பார்த்தறிந்து
மகாதேவர் தமைநினைந்து குருநினைந்து
சதிசெய்யும் சத்துருக்க ளெவரானாலும்
தக்கபடி யுளவறிந்து சண்டாளர்க்கும்
கெதிபெறவே ரோகமது போவதற்கு
கீர்த்தியுட னனுபான மறிந்துசெய்யே. 365

செய்யவென்றால் தேனதுவும் வெண்ணெய்தன்னில்
செயமுடனே சீனியது வென்னீர்தன்னில்
உய்யவே வனுபான மறிந்து கொண்டால்
வுத்தமனே ரோகமது தீரும்பாரு
நையவே மண்டலந்தான் கொண்டபேர்க்கு
நாயகனே சகலவித ரோகம்போகும்
துய்யநல்ல பாலாகும் சுந்தராகேள்
துப்புரவாய் பத்தியமு மில்லைதானே. 366

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

இல்லையே போகும்வகை விபரந்தேளு
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
    யெழிலான வாயுவென்ற தெண்பதும்போகும்
தொல்லைசெய்யும் சில்விஷங்க ளற்றுப்போகும்
    தொலையாத குன்மவலி தொலைந்துபோகும்
மெல்லுகின்ற சூலையொடு பிரவீச்சும்போம்
    மேகமென்ற ரோகமது வகன்றுபோகும்
கல்லடைப்பு சதையடைப்பு கழன்றுபோகும்
    காசினியி லின்னம்வெகு பிணிசொல்வேனே. 367

பிணியான பிணியதுவு மேதென்றாக்கால்
    பீலிகையும கோதரமும் பிரண்டேயோடும்
பிணியான கவுசையொடு பிளவைபோகும்
    பேரான குன்மமெட்டு பிடரிநோய்போம்
பிணியான கரணையென்ற குடைச்சல்போகும்
    பீற்றலென்ற கழிச்சலது பிடிபட்டோடும்
பிணியான கிரந்திபதி னெட்டும்போகும்
    பித்தமென்ற மயக்கமது வாறும்போமே. 368

ஆறான கிராணிவகை யாறும்போகும்
    அப்பனே சாரமதி சாரம்போகும்
கூறான குடற்பிரட்டல் குடிலம்போகும்
    குறிப்பான சீதமென்ற பேதிபோகும்
தூறான வார்த்தையென்ற பயித்தியம்போம்
    துலையாத சயரோகம் பதினெட்டும்போம்
மாறான காக்கைவலி முசல்வலியும்போகும்
    மகத்தான குதிரைவலி யாவும்போமே. 369

போகுமே விக்கலென்ற ரோகம்போகும்
    பொல்லாத கபரோக மகன்றுபோகும்
ஏகுமே பாதத்தின் வீக்கம்போகும்
    யெளிதான மேல்மூச்சு வுப்பிசம்போம்
சாகுமே பொருமலென்ற ஏப்பம்போகும்
    சண்ணுமே னாக்காள கீழ்நோக்காகும்
வாகுடனே கண்டமதில் தொண்ணூற்றார்நோய்
    வளமுடனே குடலவிட்டு வேகும்பாரே. 370
CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரேதான் பெருமூச்சு சைத்தியம்போம்
பாலகனே சொரிசிரங்கு பறந்துபோகும்
நேரேதான் தாகமென்ற கழலைபோகும்
நெடிதான புண்புரைகள் ஊறல்போகும்
சீரேதான் செவ்வாணம் புடையும்போகும்
சீறுகின்ற பித்தத்தின் கோபம்போகும்
வீரேதான் குறைநோயும் புண்கள்போகும்
வீரான மூத்திரத்தின் கிரிச்சம்போமே. 371

போகுமே நீரிழிவு யாறும்போகும்
பொங்கமுடன் மதுமேகக் கட்டிநீங்கும்
ஏகுமே கெற்பவலி கெற்பரோகம்
யெளிதான வாசனத்தின் மூலம்போகும்
பாகுடனே பவுத்திரமும் கண்டமாலை
பாங்கான மார்பவுத்திரம் பறந்துபோகும்
சாகுமே வுறுப்புடனே பவனவாயு
சண்ணுமே யுடலம்விட்டு சண்ணும்பாரே. 372

சண்ணுமே குய்யத்தின் ரோகம்போகும்
சண்டாள யிடுப்புவலி தலைநோயப்பா
நண்ணவே மண்டையிடி சூலையப்பா
நாடாது நேத்திரநோய் தொண்ணூற்றாறும்
கண்டிதமாய் கழல்வாதம் அண்டவாதம்
கதறுமே குடல்வாத மகன்றுபோகும்
மண்ணிலே நில்லாது மற்றரோகம்
மானிடரை விட்டுமல்லோ மடியுந்தானே. 373

மடியுமே ரோகங்க ளெதுவானாலும்
மானிலத்தில் போவதற்கு வையமுண்டோ
துடியான ரோகமெல்லாம் துவண்டேபோகும்
சொற்பெரிய குளிகைதனைக் கண்டபோதே
கடிதான குளிகையால் கசடகன்று
காயாகி தேகமது கற்றூணாகும்
கெடிதான குளிகையது காரமெத்த
நேர்மையுடன் நாமுரைத்த கற்பமாமே. 374

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

## குஷ்டம் பதினெட்டுக்கு விஷகுளிகை கூறல்

கற்பமா மின்னமொரு மார்க்கம்பாரு
கருவான புலஸ்தியனே மச்சகேந்திரா
அற்பமென்று நினையாதே அறிவுள்ளானே
அன்புடனே சொல்லுகிறேன் புலஸ்தியாகேள்
சொற்பமென்ற குளிகையது விஷகுளிகையப்பா
சோராமல் கூறுகிறேன் முறைபாடாக
தற்பரமாய் குஷ்டமென்ற குளிகையப்பா
செகதலத்தில் சாற்றவொண்ணா குளிகையாமே. 375

குளிகையாம் யெட்டிவிரை தேற்றான்வித்து
கூர்மையுள்ள கருஞ்சீரம் காட்டுச்சீரம்
அளிஞ்சிலென்ற வித்ததுவு பிராயன்வித்து
அப்பனே சூரியென்ற வித்துதானும்
கிளிஞ்சிலென்ற வித்ததுவும் கூடச்சேரு
கெடியான நத்தையென்ற சூரிவித்து
துளியான விராலிவித்து வூமத்தைவித்து
துடிப்புடனே காரெள்ளு வித்துஞ்சேரே. 376

சேர்க்கவே யின்னம்வெகு வித்துகேளு
செயலான கண்டங் கத்திரியின்வித்து
பூர்க்கவே முள்ளியென்ற வித்துதானும்
புகழான பிரமதண்டு வித்துதானும்
தீர்க்கமுள்ள பேச்சுரையின் வித்துமாகும்
திறலான பேய்மிரட்டி வித்துமாகும்
ஆர்க்கவே பேய்க்கொமட்டி வித்துமாகும்
அரகரா பேய்ப்பாகல் வித்துமாமே. 377

வித்தான பேய்ப்புடலின் வித்துமாகும்
வீரான புங்கனிட வித்துமாகும்
முத்தான கருவேலின் வித்துமாகும்
மூர்க்கமுள்ள யெருக்கனிட வித்துமாகும்
சத்தான நீர்முள்ளி வித்துமாகும்
சதுரான கோவையிட வித்துமாகும்
மத்தான பாளையுட வித்துமாகும்
மகத்தான பெரிகாலன் வித்துகாணே. 378

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணவே யின்னம்வெகு வித்துகேளு
கருவான கருஞ்சுரா வித்துமாகும்
தோணவே முருக்கினிட வித்துமாகும்
தோராத ஆவரையின் வித்துமாகும்
மாணவே யாளியிட வித்துமாகும்
மன்னவனே தகரையுட வித்துமாகும்
நீணவே கடுக்காயின் வித்துமாகும்
நிஷ்களங்க மானதொரு தான்றிதானே. 379

தானான வித்துவகை யின்னங்கேளு
தண்மையுள்ள பூபாலா தகைமையோனே
கோனான வித்ததுவு மேதென்றாக்கால்
கொடிதான பூவரசின் வித்துமாகும்
தேனான வித்ததுவு மேதென்றாக்கால்
தெளிவான கருஞ்செம்பை வித்துமாகும்
மானான கருந்துளசி வித்துமாகு
மகத்தான பத்திரையின் வித்துபாரே. 380

பாரப்பா யின்னம்வெகு வித்துவுண்டு
பாலகனே கண்மணியே பகரக்கேண்மோ
ஆரப்பா பேய்வேம்பு கருவேம்பப்பா
அப்பனே நிலவேம்பு நல்வேம்பாகும்
சேரப்பா வித்ததுவுஞ் சேர்க்கவேண்டும்
செழிப்பான கார்கோலின் வித்துமாகும்
தீரப்பா புனல்முருங்கை வித்துமாகும்
தீர்க்கமுள்ள கருங்காலி வித்துகூட்டே. 381

கூட்டவே பலமொன்று வகைதானப்பா
கொற்றவனே மாப்போல யிடித்துமைந்தா
மாட்டப்பா அதினோடே சேர்க்குமித்திரம்
மகத்தான சரக்குவகை செப்பக்கேளீர்
தேட்டமுடன் சூதமுடன் கெந்திதானும்
தெளிவான மிருதாரு சிங்கியோடும்
தீட்டப்பா கெவுரியென்ற பாஷாணந்தான்
திறமான பூரமொடு தாரந்தானே. 382

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

தானேகேள் தாரமொடு லிங்கந்தானும்
தாக்கான காந்தமொடு காரஞ்சேரு
மானேகேள் வகைவகைக்குப் பலமதாக
மார்க்கமுடன் பொடியாக்கி சரக்கிற்சேர்த்து
தீனமொடு முன்சொன்ன செயநீரப்பா
கெவனமுடன் விட்டாட்டி யுண்டைசெய்து
வானமொடு கலசமென்ற குடுவைதன்னில்
வளமாகத் தான்போட்டு சில்லுசெய்யே. 383

சில்லென்ற சீலைசெய்து அடிப்பாண்டத்தில்
செப்புகிறேன் துவாரமிட்டு கப்பிவிட்டு
சல்லென்று தயிலமது யிறங்கும் பாகம்
சாங்கமுடன் கைபாகஞ் செய்பாகந்தான்
நல்லதொரு குழிவெட்டி தாளிதன்னை
நடுவமைத்து சுற்றிலு மெருமடிக்கி
செல்லவே குழிதனில் பீங்கானிட்டு
செயம்பெறவே தயிலமதை யிறக்கிடாயே. 384

இறக்கியே தயிலமதை பதனம்பண்ணு
யென்மகனே புலஸ்தியனே தயவுள்ளானே
உறக்கமது நேராமல் தயிலந்தன்னை
வுத்தமனே பதம்பணிந்து குருநினைந்து
சிறக்கவே சொர்ண வயிரவன்பூசை
சீர்பெறவே தானமைத்து வஞ்சலித்து
திறக்கவே தயிலமதை யாருங்காணார்
தீர்க்கமுள்ள பூசைமுகம் வைத்துப்போற்றே. 385

போற்றியே தயிலமது பதனம்பண்ணு
பொங்கமுடன் தயிலமதை கண்டால்சித்தர்
தூற்றியே யுந்தனையும் தூஷணித்து
துப்புரவாய் படுமோசம் செய்வதற்கு
ஆற்றலுட னல்லவர்போல் நேசஞ்செய்து
அப்பனே கிட்டிருந்து யுபதேசிப்பார்
சீற்றமது நேராது புண்ணியபாலா
சிறப்புடனே யேமாற்றல் செய்வார்பாரே. 386

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா மதிகெட்டு மோசம்போகா
பாலகனே நல்மொழிகள் விஷேடங்கூறி
நேரப்பா பூரணாதி தானுமீய்ந்து
நெடிதான சோடசோ பாரஞ்செய்து
ஆரப்பா தயிலமெங்கே யென்றுகேட்டால்
அப்பனே வாலையிட பூசைமார்க்கம்
தீரப்பா பூசைமுக மிருக்குதென்று
தீர்க்கமுடன் செப்பிவிடு திண்ணந்தானே. 387

திண்ணமாய் வாய்மொழிகள் கூறும்போது
திகழுடனே மெய்மொழிதா னென்றுநம்பி
எண்ணமுடன் தன்மனதி லுவந்துகொண்டு
யெழிலுடனே தானடப்பார் யோகமார்க்கம்
வண்ணமுடன் சதாகாலம் குருநினைந்து
வாகுடனே தயிலமதை பூமியுள்ளே
குண்ணதுவும் நேராமல் குருநினைந்து
குடியிருப்பாய் தயிலமதை பாதுகாரே. 388

பாதான தயிலமதை யருந்துதற்குப்
பகருகிறேன் கைபாகம் செய்பாகந்தான்
வாதான தயிலமதை சீனிற்கொள்ள
பறக்குமடா குஷ்டம் பதினெட்டும்போகும்
தீதான யிம்மருந்து பிறையோகந்தான்
திறமான தயிலமது சித்தர்மெச்சும்
ஆதான தயிலமதை குஷ்டபாகம்
அப்பனே பொதுப்பிறை யோகந்தானே. 389

யோகமாஞ் சர்வநோய் குட்டத்திற்கும்
யொழுங்குடனே தான்கொடுக்க சர்வநோயும்
போகமது மேலேறும் புகழுள்ளானே
பொங்கமுடன் விந்தூறும் கேணியாகும்
தேகமது கற்றூணாம் யிரும்பு போலாகும்
தேசமதில் நெடுங்கால மிருக்கலாகும்
சாகமது நேராது தரணிமீது
சதுருடனே யிருந்தாலும் களராதென்றே. 390

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

அன்றான தேகமது வனலேவீசும்
அம்புவியி லாரேனு மருந்துவாரோ
குன்றான தயிலமது குவலயத்தில்
கொற்றவர் முடிமன்னர் செய்வாருண்டோ
தென்றிசையாங் கும்பமுனி வர்க்கத்தோர்கள்
தேர்ந்தெடுத்த வனமூலி தயிலமப்பா
நன்றான தயிலமது நாவொண்ணாது
நாட்டினிலே சித்தர்முனி செய்வார்பாரே. 391

பாரான தயிலமது பாரிலப்பா
பறக்குமடா கசரோகம் மகரோகம்
கூரான வனுபான மறிந்துகொண்டால்
கொற்றவனே ரோகமெல்லாங் கழன்றுபோகும்
நேரான விஷசெந்து யெதுவானாலும்
நெடுந்நேரஞ் சென்றாலும் குடிலம்நீங்கும்
தூரான சிலவிஷங்க ளற்றுப்போகும்
துரைராஜ மன்னவர்கள் மெச்சும்சித்தே. 392

சித்தான வனமூலி குளிகையாலே
சீறிவரும் பாம்புவிஷந் தலைக்கேராது
முத்தான வித்தினிட தயிலமப்பா
மூதுலகில் சென்றாலு முனிவர்நாகர்
எந்தனையோ காடுவனாந் திரங்களெல்லாம்
யெழிலுடனே தான்திரிந்து கண்டாராய்ந்து
வித்தான தயிலமதை மனதுவந்து
விருப்பமுடன் போதித்த சஞ்சீவியாமே. 3:3

## துருசுக்குடோரி மகாவேதை

ஆமேதா னின்னமொரு போக்குசொல்வேன்
அப்பனே புலத்தியனே மச்சகேந்திரா
நாமேதான் சொன்னபடி துருசுமார்க்கம்
நயமுடனே கூறுகிறேன் நலமதாக
தேமேதான் துருசதுவும் பலமொன்றாகும்
துப்புரவாய் சுண்ணமென்ற நீரினாலே
காமேதான் மூன்றுநா ளூறப்போடு
தண்மையுடன் நாளெடுத்து செப்பக்கேளே. 394

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

செப்பவென்றால் பூநீறு வீரந்தானும்
செயமான காரமது கூடச்சேரு
ஒப்பமுடன் யாறுவகை செயநீர் தன்னால்
வுகமையுடன் றானரைப்பாய் சரக்குசேர்த்து
தப்பிதங்கள் நேராமல் துய்யபாலா
சாங்கமுடன் றானரைத்து துருசுக்கப்பி
துப்புரவாய் சீலையது வலுவாய்ச்செய்து
துறையோடு மண்மறைவில் புடத்தைப்போடே. 395

போடப்பா யெருவதும் கோழியாக
பொங்கமுடன் தீயாறி யெடுத்துப்பாரு
நீடப்பா பற்பமது யென்னசொல்வேன்
நீனிலத்தில் காரமது நாவொண்ணாது
தேடப்பா பற்பமதைத் தானெடுத்து
தெளிவான மணலிரும்பை ராவிமைந்தா
சூடப்பா பழச்சாறு விட்டு ஆட்டி
துங்கமுடன் சுத்தியது வலுவாய்ச்செய்யே. 396

செய்யவே சுத்தியது யானபின்பு
செயமான சூதமென்ற சத்தைத்தாக்கு
வெய்யதொரு துரிசினிட நீற்றினத்தை
வெகுளாமல் பத்துக்கு வொன்றுசேரு
துய்யநல்ல வாறுவகை செயநீர்தன்னால்
துப்புரவாய்த் தானரைப்பாய் நான்குசாமம்
கைதவறா பாகமது பிசகிடாமல்
கருத்துடனே மெழுகுபதந் தன்னாலாட்டே. 397

ஆட்டியே மெழுகுதனைத் தானெடுத்து
அப்பனே காரமிட்டு செப்பக்கேளீர்
தாட்டிகமாம் பஞ்சசுன்னக் குகைதான்செய்து
தண்மைபெற முன்சொன்ன மெழுகுதன்னை
வாட்டமுடன் குகையிலிட்டு மைந்தாபாரு
வளம்பெறவே சில்லிட்டுச் சீலைசெய்து
நாட்டமுடன் ரவிதனிலே காயவைத்து
நலம்பெறவே வுலையில்வைத்து வூதிடாயே. 398

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

ஊதவே மூசையது யழுகியேதான்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
வுத்தமனே மணிபோலக் கண்விட்டாடும்
நீதமுடன் மூசைதனை யுடைத்துப்பாரு
நிஷகளங்க மானதொரு செம்புமாச்சு
சூதமெனுஞ் சரக்கதுவுங் கூடச்சேர்த்து
சுத்தமுள்ள செம்பதுவாய் வரணம்பொன்னாம்
ஆதவன்போல் திரண்டுருண்ட செம்புமாச்சு
அரகரா யென்னசொல்வேன் அதீதந்தானே. 399

தானான செம்பதுவை யெடுத்துமைந்தா
தண்மைபெற வங்கமது சரிநேரொக்க
பானான வங்கமதை கொடுத்தூத
பாலகனே சவளையது சொல்லொண்ணாது
தேனான சவளையது துலமொன்றாகும்
தெளிவான தங்கமது துலமொன்றாகும்
மானான சூதமது துலமொன்றாகும்
மகத்தான நாகமது துலமொன்றாமே. 400

ஒன்றான சரக்கெல்லாம் வுருக்கிச்சாய்த்து
வுத்தமனே கெந்தியது ரெட்டிப்பாக்கி
வென்றிடவே மனோசிலையும் நாலத்தொன்று
வேகமுடன் வீரமது ரண்டத்தொன்று
குன்றான தாரமது மூன்றத்தொன்று
கூரான சரக்கதுவை நிறுத்துபாலா
நன்றான சரக்கெல்லாங் கல்வமிட்டு
நாயகனே தானரைப்பாய் சாமம்நாலே. 401

நாலான சாமமது யரைப்பாய்மைந்தா
நாணாம லாறுவகை செயநீராலே
காலமுடன் றானரைப்பாய் மைபோலாக
தண்மையுடன் ரவிதனிலே காயவைத்து
சீலமுடன் காசியென்ற குப்பிதன்னை
சீர்பெறவே குப்பிக்குச் சீலையேழு
சாலமுடன் வாயைவிட்டு சீலைசெய்து
சட்டமுடன் ரவிதனிலே காயப்போடே. 402

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

போட்டபின்பு குப்பிதனில் மருந்தைக்கொட்டி
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
பொங்கமுடன் மாக்கல்லு கொண்டுமூடி
நீட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து
நிஷ்களங்க மாகவல்லோ யெரிப்புபாகம்
தாட்டிகமாம் தளவாயாம் பாண்டந்தன்னில்
தகைமைபெற மணலதனைக் கொட்டியேதான்
வாட்டமுடன் அடிப்பாண்டந் தன்னிலப்பா
வாகுபெற விரல்நாலு வுயரம்போடே. 403

போடப்பா குப்பிதனை மேலேவைத்துப்
புகழ்ச்சியுடன் மேலுமந்த மணலைச்செம்மி
நாட்டமுடன் மேற்பாண்டங் கவிழ்த்துமூடி
நயமுடனே சீலையது வலுவாய்ச்செய்து
ஆட்டமுடன் தானெரிக்க மன்னாகேளு
அப்பனே வாலுகையா மேந்திரத்தில்
நீட்டமுடன் தானெரிப்பாய் காடாக்கினியாக
நிசிதமுடன் சாமமது யிருபத்துநான்கே. 404

நான்கான சாமமது யெரித்தபோது
நளினமுடன் செந்தூர மென்னசொல்வேன்
பான்மையுடன் தீயாறி யெடுத்துப்பாரு
பகரொண்ணா முருக்கம்பூ அருணன்போலாம்
கான்மையாம் வயிரவற்குப் பூசைபண்ணு
கன்னவனே குப்பிதனை யுடைத்துப்பாரு
மேன்மையாஞ் செந்தூரஞ் சொல்லொண்ணாதே 405
மேதினியில் சித்தர்களுஞ் சொல்லாரன்றே

சொல்லான செந்தூரங் காந்திமெத்த
சுந்தரனே புலஸ்தியனே சுகுணமாரா
கல்லான குப்பியது சீசாதன்னில்
கண்மணியே பொன்மணியே கவிவல்லோனே
வல்லான குப்பியிலே பதனம்பண்ணு
வளம்பெறவே பூசைமுகம் கனுகியேதான்
எல்லவரும் தான்புகழ் செந்தூரத்தை 406
இதம்பெறவே சமாதிமுகம் போற்றிடாயே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

## அனுபானம்

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போற்றியே வனுபானம் புகல்வேன்பாரு
    பொங்கமுடன் தேனதிலே வனுபானங்கொள்
சீற்றமது நேராமல் கிறியபாலா
    சிதராமல் வெண்ணெய்தனில் கொள்ளவேண்டும்
ஆற்றலது நீக்கியல்லோ சூரணத்தில்
    அப்பனே பணவிடையிற் பாதிகொள்ளு
தேற்றமுட னந்திசந்தி மண்டலந்தான்
    தெளிவுடனே கொண்டுவர சித்தியாமே. 407

சித்தியாம் காயசித்தி யோகசித்தி
    சின்மயத்தின் சித்தியென்றே செப்பலாகும்
முத்திபெறும் வழிதனக்கு முதன்மையாகும்
    மூதுலகைக் கண்டறியும் ஞானசித்தி
சத்தியமா யிருந்தவற்கு காயசித்தி
    சதாகாலம் யோகநிஷ்டை காயமாகும்
நித்தியமாம் பூரணத்தைக் காணலாகும்
    நீதியுட னனுபான மறிந்துகொள்ளே. 408

கொள்ளவே யனுபான மறிதல்வேண்டும்
    குவலயத்தில் அறியாதார்க் கொன்றுமில்லை
தெள்ளமுர்த மானதொரு சுந்தராகேள்
    தேற்றமுட னனுபான மறிந்தவற்கு
கொள்ளைகொண்ட செந்தூரத் தாதியாலே
    கொற்றவனே கொண்டதெல்லாஞ் சித்தியாகும்
பிள்ளையழக் கண்டவன்னை பால்தந்தாற்போல்
    புலஸ்தியனே செந்தூரம் வாய்க்கலாச்சே. 409

## தீரும்வியாதி

வாய்க்கவே புலஸ்தியனே மச்சகேந்திரா
    வண்மையுடன் செந்தூரம் கொண்டபேர்க்கு
மாய்க்கவே வாதசுரம் எண்பத்திரண்டு
    வளமான பித்தசுரம் கொந்தசுரந்தானும்
ஏய்க்கின்ற சிலேத்துமத்தின் சுரங்கள்தீரும்
    யெழிலான சூலைமுதல் பதினெட்டும்
வாய்க்கின்ற தொம்பைவலி தொண்ணூற்றாறும்
    வகைகெட்டு பதிகெட்டு ஓடுந்தானே 410

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஓடுமே சன்னிபதி மூன்றும்போகும்
வுகாந்தவலி யிருபதோர் வலியும்போகும்
சாடுமே சாமளா தேவிபோகும்
சாங்கமுடன் அச்சுரத்தின் மூன்றுபோகும்
பாடுமே பயித்தியமும் சையித்தியமும்போகும்
பாங்கான யிரப்பிருமல் பறந்துபோகும்
கூடுமே கபரோக மீளைகாசம்
பொல்லாத யிருமலொடு கபமும்போமே. 411

போமேதான் வுளைமாந்தை குடற்பெருக்கல்
பொல்லாத கவசையொடு பொருமல்தீரும்
ஆமேதான் நீராம்பல் கட்டிபோகும்
அப்பனே குதிக்காலில் மேகம்போகும்
வேமேதான் வுள்ளங்கால் திமிரும்போகும்
வேகமுள்ள கரவாதம் சுழன்றுபோகும்
நாமேதான் நடுக்கல்முதல் வேர்வைபோகும்
நரம்புகளில் புடைக்கின்ற நீரும்போமே. 412

நீரான விஷநீர்க ளகன்றுபோகும்
நிசிதமுள்ள புண்புரைகள் கடலேபுக்கும்
சேரான பல்விஷங்கள் பல்ரோகங்கள்
சேராது தேகமது வுள்ளமட்டும்
கூரான தவடையென்ற புத்துபோகும்
கொடிதான யரையாப்பு புத்துபோகும்
வீரான புடைகரப்பான் விரண்டேயோடும்
விக்கல்சத்தி யஷ்டகுன்மம் போகுந்தானே. 413

தானான பிரகாச மானபூபா
தண்மையுள்ள புலஸ்தியனே மச்சகேந்திரா
தேனான கடிவாயில் விஷமும்தீரும்
தெளியாத மயக்கமொடு கக்கல்போகும்
மானான மதிமயக்க மகன்றுபோகும்
மலினமுடன் நெஞ்செரிவு நெஞ்சுக்குத்தல்
பானான மதமூர்ச்சை நுரைதான்வாயில்
பறக்குமே யுடலைவிட்டுப் பறக்கும்பாரே. 414

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

பாரேதான் செந்தூரம் பணவிடைதானப்பா
பாலகனே சீனிதனில் கொண்டாயானால்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
வீரேதான் சுருக்கேறி நாவிற்றங்கி
மிக்கான நீரிழிவு மதுமேகம்போம்
கூரேதான் குலாமல்லிச் சாற்றிற்கொண்டால்
கொற்றவனே முளைமூல மகன்றுபோகும்
தேரேதான் கைபாக மனுபானந்தான்
தெளிவுடனே யறிந்தவற்கு வாய்க்குங்காணே. 415

காணவே பழுவெலும்பில் தங்கும்ரோகம்
பழுந்துமே சர்மமதில் கட்டிகாணும்
நாணவே செந்தூரம் பணவிடைதானப்பா
நறுங்கொன்றைத் தயிலத்தில் கொண்டாயானால்
ஆணவங்கள் தானொடுங்கி ரோகம்போகும்
அப்பனே அண்டமென்ற வாதமேகும்
மாணவே பீசத்தின் கட்டிபோகும்
மாளாத சீமூரத்த மகன்றுபோமே. 416

அகன்றிடுமே அண்டமதில் காற்றுபோகா
அப்பனே சலை நீரும் பறக்கும்பாரு
நகன்றிடுமே துர்மாமிஷம் கரைந்துபோகும்
நாட்டுநாள் அண்டமது சிறுத்துக்காணும்
புகன்றிடுமே நோயேது நரம்புதன்னில்
புடைக்கின்ற ரத்தத்தின் கெடுதியேபோகும்
செகந்தனிலே வாதமென்ற அண்டவாதம்
செடத்தைவிட்டுப் போகுமென்றே முனி
சொன்னாரே. 417

சொன்னதொரு பாதமதில் பாண்டுவீக்கம்
சோருகின்ற தசைவாதம் காலிடுக்கில்
நன்னயமாய் வாத்திக்கு கெசமேகந்தான்
நளினமுடன் கறைநீங்கி வெளுப்பேகாணும்
தன்னிறமுங் குன்றாது முகத்தில்வாங்கு
தடுமாறிப் போகுமென்று சித்தர்சொன்னார்
புன்னகையா யாமுரைப்போம் சித்துபாலா
புங்கவனே யுத்தமக்கு கூறினோமே. 418

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

கூறினோம் அசுவனியார் கிருபையாலே
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
குவலயத்தில் யுந்தமக்கு யிந்தபாகம்
தேறியே கைபாகந் தானறிந்து
தேற்றமுடன் யாமுரைத்தோம் தெளிவுள்ளாயோ
மீறியே கைபாகம் பிசகிடாமல்
மேன்மையுடன் செய்தவற்கு யெல்லாஞ்சித்தி
ஆறியங்கள் கூறவில்லை யிந்தபாகம்
அப்பனே யாமுரைத்தோம் சத்தியந்தானே. 417

சத்தியமாய் யுரைத்ததொரு மாற்கமப்பா
தாரணியி லாருந்தான் விள்ளார்கண்டார்
புத்தியுள்ள சீடருக்கு யிந்தபாகம்
பூவுலகில் வாய்க்குமல்லால் மற்றோர்க்கில்லை
பத்தியுடன் சித்தர்பதம் வணங்கினோர்க்கும்
பார்மீதில் கிட்டுவது பான்மையாகும்
நித்தியமும் குருபதத்தை வணங்கிப்போற்று
நீடாழி யுலகமெல்லாம் பதங்கொள்வீரே 420

கொள்ளவென்றால் புலஸ்தியனே மச்சரூபா
கொற்றவனே யின்னம்வெகு பாடுசொல்வேன்
தெள்ளமிர்த மானதொரு புண்ணியபாலா
தேற்றமுடன் கூறுகிறேன் தேர்வேந்தேகேள்
விள்ளவே செந்தூரப் போக்குதன்னை
விட்டகுறை நீங்கியதோர் மானிடர்க்கு
எள்ளளவு பிசகாது நேரும்வண்ணம்
யெழிலுடனே பாய்ச்சுதற்கு வகைசொல்வேனே. 421

சொல்லவென்றால் செந்தூரந் தனையெடுத்து
சுத்தமுள்ள ரவிதனிலே நூற்றுக்கொன்று
வெல்லவே தானுருக்கி குருவொன்றீய
வேதாந்தத் தாயினிட கிருபையாலே
வல்லதொரு செந்தூர மெழுகுதன்னில்
மார்க்கமுடன் தானுருக்கி குகைதான்மாத்து
செல்லவே குகைதனிலே யுருகியேதான்
சிவப்பான தங்கம்போ லாகுந்தானே. 422

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

தானான தங்கமது யென்னசொல்வேன்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தண்மையுள்ள தங்கமது நாவொண்ணாது
தேனான சுயத்தங்கம் பிறவித்தங்கம்
தெளிவான பசுமையென்ற தங்கமாச்சு
மானான தங்கமது சிவயோகித்தங்கம்
மகத்தான தங்கமதை யென்னசொல்வேன்
பானான பராபரியா ளுந்தமக்குப்
பாலித்த தங்கமென்றே செப்பலாமே. 423

செப்பவென்றால் யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
செயலான ரவிதனிலே நூற்றுக்கொன்று
ஒப்பமுடன் றானுருக்கி குருவொன்றீய
வுத்தடனே கண்விட்டு யாடும்பாரு
தப்பிதங்கள் நேராது தயவுள்ளானே
தாரணியில் மானிடர்கள் அறியாரோதான்
எப்படியும் சித்தர்முனி ரிடிகள்நாதர்
யெழிலான வேதைமுகம் காணுவாரே. 424

காணுவார் வெள்ளியிலே நூற்றுக்கொன்று
கன்னவனே மாற்றதுவும் கழறப்போமோ
தோணுவார் நாதாக்கள் ரிடிகள்தாமும்
தோற்றமுடன் றாமறிவார் மாற்றுநன்னை
வேணுவார் மற்றோர்கள் காணமாட்டார்
வேதாந்தத் தாயினது வருளிருந்தால்
கோணுதலும் நேராம ல்குமுதவானே
குவலயத்தில் கண்டறிவார் புனிதவானே. 425

குமுதனாம் கருமிகட்கு வாய்க்கும்பாரு
கூறுவார் கருமிகட்கு வாய்க்காதப்பா
அமுதமெனும் ஞானிகட்கு அமைக்கும்பாரு
அப்பனே லோபிகட்கு வாய்க்காதப்பா
புமுதமுள்ள பாலருக் கேற்றமப்பா
பூவுலகில் சண்டாளர்க் கேற்குமோசொல்
எமுதுள்ளம் நிதானமென்ற படிகடந்தோன்
யெழில்பெறவே சீக்கிரத்தில் நண்ணுவாரே. 426

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

நண்ணயிலே சிவயோக ஞானங்கிட்டும்
நாதாந்த சித்தொளியுங் காணலாகும்
Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha
திண்ணமுடன் மாற்றதுவைக் கண்டபோதே
தீர்க்கமுள்ள பாபமது விலகிப்போகும்
எண்ணரிய நற்பொருளைக் காணலாகும்
யேகாந்த வெட்டவெளி தன்னுக்குள்ளாம்
பெண்ணலயம் வொழிப்பதுவே காயசித்தி
பேரான சன்மார்க்க நிலையில்நில்லே. 427

நில்லான யின்னமொரு போக்குசொல்வேன்
நிகழ்ச்சியாய் கூறுகிறேன் மதிவல்லோய்கேள்
கல்லான குடவனிலே நூற்றுக்கொன்று
கருத்துடனே தான்கொடுக்க மாற்றோபத்து
செல்லான தங்கமது யிதுக்கொவ்வாது
செப்புகிறேன் நாதாக்க ளாடும்வித்தை
வல்லான யேமத்தை கொடுக்கும்வித்தை
வாகுடனே சித்தாதி யாடுங்கூத்தே. 428

கூத்தான செந்தூரந் தனையெடுத்துக்
கொற்றவனே அயச்செம்பில் தன்னில்வேதை
நாத்தமுள்ள செம்பதுவும் ஹூறலேகி
நலமான மாற்றதுவும் நாவொண்ணாது
நேத்தியுள்ள செம்பதுலே நூற்றுக்கொன்று
நேர்மையுடன் றான்கொடுக்க சிவந்தபொன்னாம்
சூத்திரமாஞ் செந்தூரங் காந்திமெத்த
துரைராச சுந்தரனே செப்பக்கேளே. 429

## அகஸ்தியர் புலஸ்தியருக்கு திருமூலவர்க்கத்தோர் வரலாறு கூறல்

செப்பவென்றால் யின்னமொன்று மர்மங்கேளு
செங்கமலக் கண்ணனே புலஸ்தியாகேள்
ஒப்பமுடன் திருமூல வர்க்கத்தோர்கள்
ஓகோகோ நாதாக்கள் சொன்னவாக்கு
தப்பிதங்கள் நேராமல் துய்யபாலா
சாங்கமுடன் தலைமுறைக ளிருபத்தொன்றும்
மெப்புடனே அவரவர்கள் சமாதிக்கேகி
விருப்பமுடன் சென்றவகை கூறுவேனே. 430

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கூறுவேன் முதற்பாட்டன் வர்னசித்து
குமாரனப்பா மைந்தரது நான்கதாகும்
மாறுபடா பௌத்திரர்க ளாறுமாண்பர்
வையகத்தில் சமாதிமுகம் கொண்டோர்மூவர்
தேறுதலா யிரண்டாவது பாட்டனப்பா
தெளிவான மௌனசித்து குமாரன்ஒன்று
நீரணியும் பௌத்திரர்க ளிரண்டுபேர்கள்
நீதியுடன் சமாதிக்கு போனவாறே. 431

போனதொரு சமாதிக்கு யொருவர்சென்றார்
பொலிவான மூன்றாங்கால் பாட்டனப்பா
வானமது கீர்த்திகொண்ட ரோமசித்து
வன்பான புத்திரர்கள் மூன்றுபேர்கள்
தீனமுள்ள தயாபரர்கள் பௌத்திராதி
தீர்க்கமுடன் நேத்திரத்தில் பழுதுகொண்ட
கானமெனும் வனாந்திரத்தில் வாசம்செய்த
கண்மணியே சமாதிக்குச் சென்றார்ஒன்றே. 432

ஒன்றான ஒருவரப்பா சமாதிகொண்டார்
வுத்தமனே புலஸ்தியனே மச்சகேந்திரா
தென்றிசையில் வாழுகின்ற நாலாம்பாட்டன்
செம்புரிடி புத்திரர்கள் நான்குபேர்கள்
குன்றான மலைமீதில் வாசஞ்செய்யும்
கொற்றவர்கள் பௌத்திரர்கள் வைந்துபேர்கள்
சென்றார்கள் சமாதிக்கு யிரண்டுபேர்கள்
தேசத்தி லிருந்தவர்கள் மற்றபேரே. 433

பேரான புலஸ்தியனே புண்ணியவானே
பேருறைப்பேன் வைந்தான பாட்டனப்பா
சேரான கருடரிடி புத்திரன்றான்
சேர்வைகொண்ட புத்திரர்கள் வைந்துபேராம்
கூரான பௌத்திரர்க ளிரண்டுபேராம்
கூர்மையுடை யோன்றனக்கு வாயேயில்லை
தாராள மாகவல்லோ சமாதிகொண்ட
சற்புத்திரனொருவனையச் சொல்லுவேனே. 434

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சொல்லுவேன் ஆறாவது பாட்டனப்பா
சுவர்னமென்ற ரிடியப்பா புத்திரன்கேள்
வெல்லவே புத்திரர்க ளிரண்டுபேராம்
வீரான பௌத்திரர்கள் நான்குபேராம்
நல்லதொரு சமாதிக்குப் போனாரப்பா
நாயகனே யொருவனப்பா சப்பாணியாகும்
கொல்லிமலை தனிலோரம் சமாதிபூண்டார்
கொற்றவனே யொருவனப்பா கேளுகேளே. 435

கேளப்பா புலஸ்தியனே மச்சகேந்திரா
கெவுனமுடன் றானுரைப்பேன் கருவுள்ளானே
தாளப்பா யேழாவது பாட்டானப்பா
தயாளமுள்ள பிரிங்குமகா ரிடியாரப்பா
மீளப்பா புத்திரர்க ளாறுபேராம்
மிக்கான பௌத்திர்க ளொன்பதாகும்
சூளப்பா சமாதிமுகம் சென்றோரப்பா
சுத்தமுள்ள பாலர்கு ளிருபேராமே. 436

இருவராம் யெட்டாவது பாட்டனப்பா
யியலான சரவண பகவானப்பா
ஒருவராம் புத்திரன்றான் ஒன்றேயாகும்
ஓகோகோ பௌத்திரர்க ளாறுபேராம்
குருவான பர்வதம்போல் கீர்த்திபெற்றான்
குவலயத்தில் சமாதிமுகம் கொண்டானப்பா
திருவான கரிமில்லா ரிடிசாபத்தோன்
தீர்க்கமுடன் சமாதிக்குச் சென்றார்காணே. 437

காணவே யொன்பதாம் பாட்டனப்பா
கருவான புஜண்டமகா ரிடிதானப்பா
பூணவே மைந்தர்களு மிருவருண்டு
புகழான பௌத்திரர்க ளாறுபேராம்
மாணவே சமாதிமுகம் கொண்டானப்பா
மாசற்ற புண்ணியர்க ளிரண்டுபேராம்
மாணமருங் கல்வியுள்ள ரண்டுபேரும்
மானிலத்தில் சமாதிமுகம் கொண்டார்பாரே. 438

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா பத்தாவது பாட்டனப்பா
பாருலகில் குருந்தமகா ரிடிதானாகும்
நேரப்பா புத்திரர்க ளிரண்டுபேறாம்
நெடிதான பௌத்திரர்கள் மூன்றுபேறாம்
சீரப்பா சமாதிமுகம் கொண்டாரப்பா
சிறப்பான வரகூவிள் ரெண்டுமாகும்
கூரப்பா சமாதிமுகம் கொண்டபாலா
சித்துமகா ரிடியென்றே செப்பலாமே. 439

செப்பலாம் பதினோராம் பாட்டனப்பா
செகந்தனிலே கீர்த்திகொண்ட ரிடியேயாகும்
துப்புடனே சலநீரும் சருகுங்காயும்
அருந்துகிற பரசோதி ரிடிதானாகும்
தப்பிதமில்லாத மைந்தர் தரணிமீது
தகமையுள்ள புத்திரர்கள் மூவருள்ளார்
ஒப்பின்மை யானதொரு பௌத்திரர்தான்
வுத்தமனே சமாதிமுகம் கொண்டோரண்டே. 440

ரண்டான பனிரண்டாம் பாட்டனப்பா
நெடிதான வுலகுபதி கீர்த்திபெற்ற
செண்டான கோவர்த்தன ரிடிதானப்பா
செங்கண்மாற் பெயர்கொண்ட கண்ணனாகும்
தண்டான புத்திரர்கள் றால்வராகும்
தண்மையுள்ள பௌத்திரர்கள் மூன்றேயாகுங்
மண்டலத்தில் சமாதிமுக மிருவர்கொண்டார்
மானிலத்தில் மற்றவர்க ளிருந்தார்தானே. 441

இருந்தாரே திருமூல வர்க்கத்தோர்கள்
யெழிலான காயாதி கற்பங்கொண்டு
திருந்தவே சமாதிக்கு யேகவென்று
தெளிந்ததொரு ஞானிகளைக் கூறுகின்றேன்
பொருந்தவே பதிமூன்றாம் பாட்டனப்பா
பொன்னுலகஞ் சென்றவர்கள் காதையாகும்
அருந்தவத்தி லிருந்ததொருவர் ரிடிதானாகும்
அப்பனே அவருடைய வண்மை கேளே. 442

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வண்மையா மவர்தமக்கு மைந்தரப்பா
மண்ணுலகில் பிறந்தவர்கள் நால்வருண்டு
கண்மையாய் பௌத்திரர்க ளேழுபேராம்
காசினியில் சமாதிமுகம் கொண்டோர்மூவர்
திண்மைபெற செவிடொன்று குருடுவொன்று
தீர்க்கமுள்ள சித்தரென்று செப்பலாகும்
நண்மையுடன் சமாதிக்குச் சென்றாரப்பா
நானிலத்தில் திருமூல வர்க்கம்பாரே. 443

வர்க்கமாம் திருமூலர் பாட்டனப்பா
வரையாதி யுள்ளளவும் பகருவேன்யான்
நற்கமலம் வீற்றிருக்கும் பதினாலாங்கால்
நலமான பாட்டனப்பா விகுர்தியாகும்
சொற்பமுள்ள பாலரப்பா மூவருண்டு
சுந்தரனே பௌத்திரர்க ளிருவருண்டு
அற்பமென்று நினையாதே அருண்மைந்தாகேள்
அன்புடனே சமாதிமுகம் கொண்டோர்தாமே. 444

தாமான பதினைந்தாங் கால்தானப்பா
தகமையுள்ள பாட்டனப்பா குப்பிரவியாகும்
சாமானிய மானதொரு மைந்தரப்பா
சற்புத்திரர்க ளாறுபேர் புதல்வரப்பா
ஆமான பௌத்திரர்க ளிரண்டுபேரும்
அப்பனே சித்தர்பதம் கொண்டபேர்கள்
நாமான மானதொரு சுத்தவீரர்
நலமான சமாதிமுகம் பெற்றபேரே. 445

பேரேதான் பதினாறாம் பாட்டனப்பா
பேருலகில் கீர்த்திபெற்ற கௌபாலர்தான்
நேரேதான் மைந்தரப்பா ரண்டுபேர்கள்
நெடிதான பௌத்திரர்கள் ஏழுபேர்கள்
பாரேதான் சமாதிமுகம் கொண்டபேர்கள்
பாருலகில் கீர்த்தியுள்ள சித்தர்வண்ணம்
ஆரோதா னிவ்வரைப்போல் சமாதிகொண்டோர்
ஆருமில்லை வையகத்தில் அறிவார்காணே. 446

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

அறியவே யின்னமொரு மார்க்கம்பாரு
அப்பனே பதினேழாம் பாட்டனப்பா
குறியான சோதிமகா ரிடிதானப்பா
கொற்றவனே புத்திரர்கள் நான்குபேராம்
அறிவான பௌத்திரர்க ளாறுபேராம்
அடபனே செவிடொருவர் ஊமையாகும்
நெறியான பாலர்களி லுபதேசங்கள்
நேர்த்தியுடன் பெற்றவரு மொருவர்காணே. 447

காணவே பதினெட்டாம் கால்தானப்பா
கருவான பௌஷமகா ரிடிதனாகும்
பூணவே சின்மயத்தி லிருந்தசித்து
புகழான சமாதிமுகங் கொண்டசித்து
தோணவே வேதமுகங் கடந்தசித்து
தோராத புத்திரர்கள் ஐந்துபேராம்
மாணமருங் கல்வியுள்ளார் பௌத்துராதி
மகத்தான சித்தர்வர்க்கம் தானேயாமே. 448

தானான குருமூல வர்க்கமாகும்
தாக்கான சப்பாணி நொண்டியாகும்
கோனான பௌத்திரர்கள் ஐந்துபேரும்
கொற்றவனே நொண்டியென்றே செப்பலாகும்
தேனான சமாதிமுக மறிந்தசித்து
திகழான வுபதேசம் பெற்றபாலர்
மானான பிரமசித்து மாந்தர்போலாம்
மகத்தான திருமூல வர்க்கத்தோரே. 449

வர்க்கமாம் புலத்தியனே வண்ணமாரா
வகுப்பான பத்தொன்பதாங் கால்தானப்பா
அர்ப்பமா யெண்ணாதே அன்புள்ளானே
அவனிதனில் கீர்த்திகொண்ட சித்துவாகும்
சொர்ப்பெரிய சார்பானு ரிடியென்பார்கள்
சுகுணமுள்ள புத்திரர்க ளிரண்டுபேராம்
உர்ப்பனமாம் பௌத்திரா,தி யாறுபேராம்
ஓகோகோ திருமூல வர்க்கங்கேளே. 450


Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

கேளப்பா நெண்டுபேர் குருடராகும்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
கெடியான நான்குபேர் ஊமையாகும்
தாளப்பா நீர்சித்து சலசித்தாகும்
தாக்கான மலையமுனி ரிடியென்பார்கள்
சூளப்பா தாளமகா ரிடிதானென்பார்
தொல்லுலகில் கட்டறுத்த சித்தேயாகும்
ஆளப்பா திருமூல வர்க்கமென்பார்
அப்பனே சொல்லுகிறேன் அன்புள்ளானே. 451

அன்பான புலத்தியனே மச்சகேந்திரா
அருளான விருபதாங் கால்தான் சொல்வேன்
வண்மையுடன் சம்பூரண ரிடிதானாகும்
வகுப்பான புத்திரர்க ளிரண்டுபேராம்
நன்னயமாம் பௌத்திரர்கள் மூன்றுபேராம்
நாதாக்கள் திருவடியின் கமலம்பெற்ற
புன்மையுள்ள சிறுபாலர் கண்ணேயில்லை
புகழான திருமூல வர்க்கத்தோரே. 452

மூலமாம் இருபத்தோர் காலுஞ்சொல்வேன்
முதன்மையுள்ள குண்டலமாம் ரிடிதானாகும்
சீலமுள்ள புத்திரர்கள் மூவருண்டு
சிறப்பான பௌத்திரர்கள் நால்வருண்டு
காலமதிற் சிறந்ததொரு சேய்களாகும்
கண்ணில்லை நாவில்லைப் பாலருக்கு
ஆலவிஷ முண்டதொரு அன்பராகும்
அப்பனே கலியுகத்து சித்தென்பாரே. 453

சித்தான சித்துவர்க்க முழுதுஞ்சொன்னேன்
சீர்பெரிய தலைமுறைக ளிருபத்தொன்றும்
சத்தமுடன் கலைபகுத்து வேர்பிரித்துத்
தனித்தனியாய்க் கூறிவிட்டேன் யின்னூல்தன்னில்
புத்தியுள்ள பெரியோர்கள் ரிடிதானப்பா
பூவுலகில் கண்டறிவார் மற்றோர்காணார்
எத்திசையுங் கீர்த்திகொண்ட நாதரப்பா
யெழிலுடனே காணுவர்க ளுண்மைபாரே. 454

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

# பொன்மாற்றுயர்வு அகஸ்தியர் புலத்தியற்கோதல்

பாரப்பா புலத்தியனே பண்புள்ளானே
பகருகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
சீரப்பா லோகமதில் கோடிவேதை
செப்பினார் நாதாக்கள் சித்தர்தாமும்
நேரப்பா ரிடிகள்முத லனந்தங்கோடி
நேர்மையுடன் பலநூலும் பாடிவைத்தார்
தேரப்பா விம்முறைதான் சிமிட்டுப்போக்கு
செப்பினார் கோடிமுறை யனந்தங்கேளே. 455

அனந்தமாம் கோடிமுறை சிடிகைவேதை
அப்பனே யிம்முறையோ வழுத்துவேன்பார்
சினமதுவும் கொள்ளாதே சிறியபாலா
செப்புகிறேன் வர்ணமென்ற தங்கமப்பா
கனம்போன்ற ராசனப்பா வீரராசன்
கருதுகிறேன் பலமதுவு மொன்றேயாகும்
தனம்பெரிய கெந்தியது வைந்தேயாகும்
சாற்றுகிறேன் புலஸ்தியனே தண்மையோனே. 456

தண்மையாம் சாரமது நான்கேயாகும்
சாங்கமுடன் வெண்காரம் பலம்ரண்டாகும்
உண்மையாம் பூரமது ரண்டேயாகும்
வுத்தமனே யிதுவெல்லாங் கல்வமிட்டு
திண்மைபெற வாடுதின்ணாப் பாளைச்சாற்றால்
தீர்க்கமுடன் தானரைப்பாய் யெட்டுசாமம்
வண்மையுடன் ரவிதனிலே காயவைத்து
வாகுபெற பின்னுமது செப்பக்கேளே. 457

செப்பவென்றால் புலத்தியனே யின்னங்கேளீர்
தெளிவான வித்ததுவு மேதென்றாக்கால்
ஒப்பமுடன் முருக்கனிட வித்துதானும்
ஓகோகோ முறைப்படியே சேர் நான்காகும்
தப்பிதங்கள் நேராமல் துய்யபாலா
சாங்கமுடன் சலமதனி லூறப்போடு
அப்போதே மேல்த்தோலை நீக்கிமைந்தா
அன்புடனே ரவிதனிலே காயப்போடே 458

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போடப்பா காய்ந்தபின்பு வித்தெடுத்துப்
பொங்கமுடன் புதுக்கலசம் தன்னிலிட்டு
நீடப்பா வாய்தனிலே சில்லுமிட்டு
நிட்களங்க மானதொரு சீலைசெய்து
பாடப்பா பாடாக யுறுதிகொண்டு
பாலகனே யடிக்கலசந் துவாரமிட்டு
ஆடப்பா கம்பியது நாட்டியேதான்
அப்பனே குழிதனிலே வைத்திடாயே. 459

வைத்துமே கலசமென்ற தடியிலப்பா
வண்மைபெற பீங்கானை அடியில்வைத்து
பொய்த்துமே போகாமல் தயிலம்வாங்கு
பொன்னவனே தயிலமது வாங்குவாங்கு
சத்தெலாங் கொடுத்துமல்லோ தயிலமாச்சு
சதுராகத் தயிலமதை பதனம்பண்ணு
வித்தான தயிலமது யென்னசொல்வேன்
வேதாந்தத் தாயினது தயிலமாச்சே. 460

ஆச்சப்பா தயிலமது யென்னசொல்வேன்
அப்பனே பொன்வண்ணத் தயிலமாச்சு
மூச்சப்பா யாருக்கும் வெளிவிடாதே
மூதண்டத் தயிலமென்றே செப்புவார்பார்
காச்சுகின்ற தயிலமது யிதற்கொவ்வாது
காசியினில் நாதாக்கள் ரிடிகள்சித்தர்
ஆச்சரியமாய் செய்கின்ற தயிலமாச்சு
அப்பனே விள்ளாதே தலைதான்போமே. 461

தலையான தயிலமதை யெடுத்துமைந்தா
சார்புடனே முன்சொன்ன சரக்குதன்னில்
கலைபருத்து யித்தயிலமதை கல்வமிட்டு
கன்னவனே தானரைப்பா யெட்டுசாமம்
சிலையான தயிலமதா லரைத்தபின்பு
சிறப்புடனே சிறுவுண்டை யாகச்செய்து
குலையாமல் முன்போலே கலசந்தன்னை
கூற்பெறவே துவமிட்டு யெடுத்துக்கொள்ளே. 462

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளவென்றால் மாற்கமது சொல்லொண்ணாது
குவலையத்தில் நாதாக்கள் விள்ளாரப்பா
எள்ளளவும் பிசகாது கைபாகந்தான்
யெடுத்துமே கலசமதில் சரக்கையிட்டு
தெள்ளமிர்த மானதொரு சரக்குதன்னை
சில்லிட்டுச் சீலையது வலுவாய்ச்செய்து
உள்ளபடி குழித்தயில முன்போலாக
வுத்தமனே தானிறக்கி செப்பக்கேளே. 463

செப்பவென்றால் தயிலமதை யெடுத்துமைந்தா
செகந்தனிலே வெகுகூத்து ஆடலாகும்
ஒப்பரிய யேமமது மாற்றாறாகும்
ஓகோகோ நாதாக்கள் கூறும்வண்ணம்
இப்பெரிய ஜாலமது யென்னசாலம்
யெழில்பெரிய பொன்னாகும் மாற்றேயாகும்
நெப்பமென்ற தகடதுதான் விரல்தானீளம்
நேர்மையுடன் றானெடுப்பாய் மைந்தாபாரே. 464

பாரப்பா பொன்னதனை தகடதாக்கிப்
பரிவுடனே முன்சொன்ன தயிலமப்பா
நேரப்பா தகட்டின்மேல் பூசிமைந்தா
நெளிவுடனே ரவிதனிலே காயவைத்து
சீரப்பா யோட்டின்கீ ழுப்புங்காவி
சிறப்புடனே கீழ்மேலு மிட்டுமன்னா
காரப்பா யெருவடிக்கிப் புடத்தைப்போடு
காணலாம் பத்துவய துள்ளபொன்னே. 466

பொன்னான தங்கமது பத்துபத்து
போகாது திராவகங்கள் புடத்துக்கேகா
மன்னான மன்னர்களுக் குகந்ததங்கம்
மாட்சிமையாய் சித்தர்முனி மதிக்குந்தங்கம்
தென்னவனே புலஸ்தியனே புனிதவாளே
தேசத்தில் ரிடிகள்முதல் கூறாவண்ணம்
கன்னவனே யுந்தமக்காய் பிழைக்கவென்று
காசினியில் மனதுவந்து சொல்லலாச்சே. 466

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

சொல்லவென்றா [illegible]
சொருபமென்ற துய்யானாம் வெள்ளிதன்னில்
நல்லதொரு தகடாக தட்டிமைந்தா
நலம்பெறவே தயிலமதை பூசிமுன்போல்
வல்லமையாம் முன்னுரைத்த புடம்போலாக
மகிமைபெற புடம்போட்டு வாறினபின்
மெல்லவே யெடுத்துப்பார் பொன்தானேமு
மேன்மையுடன் தானிருக்கக் காணலாமே. 467

காணலா மித்தயிலங் குடவனிலேதாக்க
காசினியில் சுயத்தங்கம் பிறவித்தங்கம்
பூணலாம் சமுசாரிக் கானவித்தை
பூவுலகில் கருமிகட்கு வாய்க்குமோசொல்
மாணமருங் கல்வியுள்ள மாண்பர்காண்பார்
மானிலத்தில் மதிமூடர் காண்பாருண்டோ
பாணமென்ற தங்கமது பசுமைத்தங்கம்
பாரினிலே புண்ணியர்க்கு வாய்க்குந்தானே. 468

தானான தயிலமது புலஸ்தியாகேள்
தகைமையுடன் பலநூலுங் கண்டாராய்ந்து
கோனான ராஜருக்கும் குருக்களுக்கும்
கொற்றவனே மநுநீதி தவறாவண்ணம்
பானான பராபரியை மனதிலுண்ணிப்
பட்சமுடன் யானுரைத்தேன் புலஸ்தியாகேள்
தேனான பெருநூலாம் குருநூலாகும்
தேற்றமுள்ள பன்னீரா யிரந்தானாச்சே. 469

## பொன் மாற்றுயர்வு

ஆச்சப்பா யின்னமொரு மாற்கஞ்சொல்வேன்
அப்பனே புலஸ்தியனே மச்சகேந்திரா
காமப்பா காசினியில் யாருங்காணார்
கருவான பூவரசு நூறாண்டப்பா
வேமப்பா முத்தினதோர் மரத்தின்மூலம்
நெருங்குபட மூலமது பலந்தா நூறு
தாமப்பா மண்போகக் காயவைத்து
தண்மைபெற பொடிக்கண்ட மாகதாக்கே. 470

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆக்கியதோர் மூலமதை யெடுத்துபாலா
அப்பனே பெரும்பாண்டந் தன்னிலிட்டு
வாக்கியமுந் தப்பாமல் சீலைசெய்து
வளமைபெற குழித்தயில மாகவாங்கி
நோக்கமுடன் றயிலமதை பதனம்பண்ணு
நுட்பமுடன் பூவரசன் வித்துவாங்கி
பாக்கியங்கள் தான்பெறவே துய்யபாலா
பாலகனே சேரதுவாய் தூக்கிவாங்கே. 471

வாங்கியதோர் வித்ததனை வகுப்பாய்க்கேளு
வண்மைபெற முன்சொன்ன தயிலமப்பா
ஏங்கியே விழியாதே புலஸ்தியாகேள்
என்மகனே கவிராஜ கண்ணேபாரும்
ஓங்கியே முன்னுரைத்த தயிலமூலம்
வுத்தமனே தானெடுத்து வுகமையோடு
தேங்கியே பாராமல் தெளிவுள்ளானே
தேற்றமுடன் வித்ததனை யரைப்பாய்தானே. 472

தானான தயிலமதி லரைக்குங்காலம்
தற்பரனே சிற்பரனே தயவுள்ளானே
கோனான யெனதைய ரசுவனியாந்தேவர்
கொண்டணைத்துப் பட்சமுடன் குறித்தபாகம்
மானான கெந்தியது பலம்பத்தாகும்
மன்னவனே சாரமது பலமஞ்சாகும்
தேனான தயிலமதில் விட்டேயாட்டி
தெளிவுடனே மைபோலே யரைத்திடாயே. 473

அரைக்கையிலே மெழுகுபத மானபோது
அப்பனே புலஸ்தியனே மதியுள்ளானே
திரையதுவு மில்லாமல் குன்றிபோலே
தீர்க்கமுடன் றானுருட்டி ரவியில்வைத்து
முறையான கலசமென்ற பாண்டந்தன்னில்
முறைப்படியே சில்லிட்டுச் சீலைசெய்து
குறையொன்றுந் தவறாமல் தணலில்வைக்க
கூர்மையுள்ள தயிலமது கூறொண்ணாதே. 474

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஒண்ணாது தயிலமதை பதினம்பண்ணு
வுத்தமனே யாமுரைக்க வுவமைகேளீர்
கண்ணான தயிலமதை யெடுத்துமைந்தா
கருத்துடனே பாச்சுதற்கு வகைசொல்வேன்பார்
திண்மைபெற தயிலமதை யெடுத்துபாலா
தீர்க்கமுள்ள வாறுமாற் றாணிப்பொன்மேல்
வண்மைபெற தகடாக்கிப் பூசிமைந்தா
மகிமைபெற ரவிதனிலே காயப்போடே. 475

போட்டுமே காய்ந்தபின் னெடுத்துமைந்தா
பொங்கமுடன் காவியது கீழ்மேலிட்டு
நீட்டமுடன் வோட்டிவிட்டு யெருவடுக்கி
நீதியுடன் புடமாறி யெடுத்துப்பார்க்க
வாட்டமுள்ள ரவியொளிவாம் தங்கம் தங்கம்
வரிசைபெற ராசாக்கள் அணியுந்தங்கம்
தேட்டமுள்ள பிறவியென்ற தங்கமாச்சு
தெளிவான சுயத்தங்க மென்னலாமே. 476

என்னலாம் வெள்ளியது துய்யானப்பா
யெழிலான வெள்ளியது தகடதாக்கி
சொன்னபடி முன்னுரைத்த தயிலந்தன்னை
சூட்சமுடன் தகடதனில் லகுவாய்பூசி
நன்னயமாய் லேகித்து ரவியில்வைத்து
நலம்பெறவே காவிக்குள் பொதிந்துமூடி
பன்னவே யெருவடிக்கிப் புடந்தான்தாக்கு
பகரவொண்ணாத் தங்கமது வாணிக்கெட்டே. 477

எட்டான மாற்றதுவும் பொன்னேயாகும்
யெழிலான பொன்னதுவும் புடத்துக்கேகா
மட்டான பொன்னென்றும் யாருஞ்சொல்லார்
மானிலத்தில் புடத்துக்கு வுறுதிதங்கம்
கட்டான தயிலமது காயகற்பம்
கடினமுடன் கொண்டவற்கு காயசித்தி
சுட்டாலுந் திரிந்தாலும் வாதிகாணார்
அப்பனே அசுவனியா ருரைத்தவாக்கே. 478

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

வாக்கான தயிலமது குன்றியப்பா
Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha
வளம்பெறவே கொண்டவற்கு வாசிபோகா
போக்கான சுவாசமது மேல்நோக்காது
பொங்கமுடன் சடலமது சட்டைதள்ளும்
நேரக்கமுடன் சித்தர்பதம் பணிந்துமல்லோ
நோயகலும் காயசித்தி கொள்ளும்பேர்க்கு
ஆக்கமுடன் றாமுரைத்த தயிலகற்பம்
அப்பனே கர்மிகட்கு காட்டொண்ணாதே. 479

காட்டினால் வெகுகோடி பாவம்நேரும்
காசினியில் கர்மிகளும் பாவியுண்டு
நாட்டமுடன் மனதறிந்து பதமறிந்து
நலம்பெறவே யுபதேசம் செய்யவேண்டும்
தாட்டிகமாய் வெருகோடி மாண்பரப்பா
தாரணியில் நல்லவர்போ லிருப்பாரப்பா
தேட்டமுடன் நெடுங்கால மனதறிந்து
தெளிவுபெற வுபதேசம் செய்யல்நன்றே. 480

நன்றான வுபதேசம் பெற்றிட்டாலும்
நளினமுடன் சன்மார்க்க நிலைகள்வேண்டும்
குன்றான மலைபோலே கோடித்தங்கம்
குவலையத்தில் பெற்றென்ன பலனுமில்லை
தென்றிசையில் பொதிகைதனில் வெகுகோடிசித்தர்
தேசமெல்லாந் திரிந்துவந்து சமாதிபூண்டோர்
என்றுமே கண்டதில்லை யொடுக்கமானார்
ஓகோகோ நாதாக்க ளென்பார்தாமே. 481

## லிங்கப்போக்கு

தாமான மின்னமொரு கருமானங்கேள்
தகைமையுள்ள புலஸ்தியனே தம்பிரானே
சாமானிய மானதொரு கட்டுசொல்வேன்
சட்டமுடன் றாமறிவீர் சதுருள்ளானே
நேமான மானதொரு லிங்கமப்பா
நெடிதான கட்டியொரு கம்பிலிங்கம்
தூமானஞ் செய்யவகை செப்பக்கேளீர்
துப்புரவாய் தாமுரைப்போம் கணிதவானே. 482

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கணிதமாம் லிங்கமொரு பலந்தானாகு
கருவான தாளகமு மரையேயாகும்
துணிவான கெந்தியது வரையேயாகும்
துப்புரவாய் தானரைப்பாய் குமரிப்பாலால்
வணியான மெழுகதுபோ லரைத்துமைந்தா
மார்க்கமுடன் லிங்கத்திற் கங்கிபூட்டி
மணியாக நெருப்பினிலே வாட்டும்போது
மார்க்கமுடன் லிங்கமது யிறுகுந்தானே. 483

இறுகுமே லிங்கமது யின்னஞ்சொல்வேன்
யெழிலான சூடனுடன் சாம்பிராணி
மறுகவே சமயெடையாம் ரெண்டுங்கூட்டி
மைபோலவே தானரைப்பாய் மெழுகேயாகும்
குறுகவே முன்போலே லிங்கமப்பா
குறிப்புடனே லிங்கத்திற் கங்கிபூட்டி
திறுகல்போல் தீயதனில் வாட்டும்போது
தீர்க்கமுள்ள லிங்கமது கட்டிப்போச்சே. 484

போச்சென்று விடுகாதே புண்ணியபாலா
பூமானே சீமானே புகலக்கேளீர்
தீச்சலுடன் சாம்பிராணி பூரந்தானும்
சிதராமல் மறுபடியும் தானெடுப்பீர்
ஆச்சரிய மானதொரு லிங்கமப்பா
அப்பனே சிற்றுளியா முருக்குபோலாம்
மாச்சலது வாராமல் பின்னுங்கேளீர்
மைந்தனே தானரைப்பாய் மெழுகுமாமே. 485

மெழுகான சரக்கதனை யெடுப்பாய்மைந்தா
மேன்மைபெற முன்போல லிங்கமப்பா
வழுகாமல் கவசமது பின்னும்பூண்டு
மதிப்புடனே தீவாட்டிப் பின்னுங்கேளு
நழுகாமல் லிங்கமதை பதனம்பண்ணு
நலம்பெறவே ஜெயம்பெறவே நளினபாலா
தொழுகவே போக்குவகை யாமுரைப்போம்
தோராமல் விதிமுறையாய் கேளுகேளே. 486

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேளப்பா லிங்கமதை யெடுத்துமைந்தா
கெவனமுடன் போக்குவகை சொல்வேனப்பா
தாளப்பா செம்பதுவை யுருக்கியல்லோ
தண்மையுடன் சிற்பரனே சாற்றக்கேளீர்
கோளப்பா நேராமல் குணமுள்ளானே
குறிப்புடனே பத்துக்கு வொன்றுதானும்
பாளப்பா போகாமல் லிங்கந்தன்னை
பக்குவமாய் வுருக்குமுகந் தன்னிலீயே. 487

ஈந்திடவே செம்பதுவு முருகியேதான்
யெழிலான லிங்கமதை வாங்கியுண்ணும்
தோய்ந்திடவே ரவியதுவும் கட்டிப்போகும்
தோராமல் கரியோட்டி லூதிப்போடு
வாய்ந்திடவே ரவியொளியை யென்னசொல்வேன்
வழிதுறையைக் காணார்கள் மட்டிமாண்பர்
பாய்ந்திடவே ரவியதுவு மாற்றாறாகும்
பாலகனே யிவ்வேதை பலிக்குந்தானே. 488

பலிக்குமே யாருக்கு மேதென்றாக்கால்
பாபிகட்கும் கருமிகட்கும் பலிக்காதப்பா
சொலிக்குமே தவத்தோர்க்கும் புண்ணியோர்க்கும்
சொற்பெரிய மாண்பருக்கு மன்னவற்கும்
ஒலிக்குமே யிவ்வேதை ரவிதானப்பா
வுத்தமனே மதியதனில் பத்துக்கொன்று
கலிக்கவே தான்கொடுக்க மாற்றேழாகும்
காசினியில் சித்தரிட மகிமைதானே. 489

தானான யிவ்வேதை சுளுக்குவேதை
தாரணியில் யாருந்தான் காணப்போறார்
கோனான குருக்களுக்கும் சிவயோகிக்கும்
கொற்றவனே புலஸ்தியனே பலிக்கும்பாரு
தேனான சிவவேடம் பூண்டமாண்பர்
செகந்தனிலே கோடியுண்டு சொல்லப்போமோ
பானான பாவிகட்குப் பலியாதப்பா
பாரினிலே யாமுரைத்தோம் பண்பாய்ப்பாரே. 490

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

பாரப்பா யின்னமொரு சூட்சம்சொல்வேன்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
பாலகனே புலஸ்தியனே பண்பாய்க்கேளு
ஆரப்பா யெனைப்போலே சொல்வாரப்பா
அப்பனே யாமுமக்கு வுரைத்தவண்ணம்
நேரப்பா தவவுறுதி காணவேண்டும்
நேர்மைபட யிருந்தவற்கு யெல்லாஞ்சித்தி
காரப்பா வெகுகோடி காலமப்பா
கார்த்திருந்தால் கண்காட்சி காணலாமே. 491

காணலாம் பிரணாய காலமப்பா
காசினியி லிருந்தவற்கு யெல்லாஞ்சித்தி
பூணப்பா காயகற்பங் கொண்டபோது
புண்ணியனே காயசித்தி யேமசித்தி
தோணப்பா மனவுறுதி கொண்டுமேதான்
தொல்லுலகை சற்றேனு மறக்கவேண்டும்
ஆளப்பா ஆணுவங்கள் தள்ளவேண்டும்
அப்பனே நற்பதவிக் கிடமுண்டாமே. 492

## சாரக்கட்டு

உண்டான கட்டுவகை யுரைப்பேனப்பா
வுற்பனமாஞ் சாரமது பலமொன்றாகும்
நன்றான சீனமது சுன்னமப்பா
நாதாக்கள் தாமுரைத்த சிடிகைவேதை
பன்றான சீனமதை சேரெடுத்துப்
பட்சமுடன் சரவுலையி லூதிப்பின்பு
குன்றான சீனமதுக் கிரட்டிதானும்
கூறுகிறேன் மதியுப்புக் கூடச்சேரே. 493

சேர்த்திடவே சரியெடையாம் கரியுப்பாகும்
சிதராமல் பதராம லொன்றாய்க்கூட்டி
பூர்த்திபெற வெண்கருவா லாட்டியாட்டி
புகழ்பெறவே ரவிதனில் காயப்போடு
கீர்த்தியெற கோழியது புடமேயாகும்
கிருபையுடன் றான்போடு மூன்றுமுறையாகும்
தீர்த்தமென்ற சலமதுவும் நேராதப்பா
திறமையுள்ள சாரமதுக் கங்கியாச்சே. 494

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆச்சப்பா சாரமதை யெடுத்துக்கொண்டு
அப்பனே வெண்கருவா லரைத்துமுன்போல்
நீச்சப்பா தானகல நெகிழரைத்து
நீதியுடன் சாரத்துங் கங்கிகொண்டு
மூச்சடங்க புடத்துக்குச் சீலையேழு
முயற்சியுடன் சுண்ணாம்புச் சீலையாகும்
மாச்சலது நேராமல் மன்னாகேளு
மதிப்புடனே கோழியென்ற புடந்தான்போடே. 495

போடவே சாரமது கட்டிப்போகும்
பொங்கபுடன் றாயெடுத்துப் புகலக்கேளீர்
நீடப்பா முன்சொன்ன சாரமப்பா
நெடிதான காரமென்ன சுன்னமாச்சு
ஆடப்பா கருஞ்சாரம் துரிசிக்கப்பா
அப்பனே கவசமது பூண்டுமேதான்
சாடப்பா ரவிதனிலே வைத்துப்பின்பு
சாங்கமுடன் சீலையது செய்திடாயே. 496

செய்யவே புடமதுவுங் கோழியாகும்
செப்பரிய சுன்னமது யென்னசொல்வேன்
உய்யவே கவசமது வுடைத்துப்பார்க்க
வுற்பனமாஞ் சாரமது வுடைத்துப்பார்க்க
பையவே நீக்கியபின் தூருசுதானும்
பளிங்கான சூடன்போ லிருகிநிற்கும்
மெய்யான துரிசியது வண்டக்காற்றால்
மேன்மைபெற நீறியது சுண்ணமாச்சே. 497

ஆச்சப்பா சுண்ணமது யென்னசொல்வேன்
அப்பனே ஆதியென்ற முப்புவாச்சு
மூச்சடங்கி துரிசியது நீறலாச்சு
மூதண்ட விஷமதுதான் துரிசிக்கேறி
மாச்சலது நேராமல் துரிசிதானும்
மகத்தான வாதியென்ற குருவுமாச்சு
நீச்சலது தான்வாராத குருவுமாச்சு
நீதியுள்ள மாண்பர்களுக் காதியுப்பே. 498

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

உப்பான குருபற்ப மிதுவேயாக்கு
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
வுலகுதனில் முழுமக்கள் காண்பாருண்டோ
அப்பான உப்பதுவால் சூதமப்பா
அப்பனே வாகுகண்ட புலிதானப்பா
செப்பரிய சூதனென்ற ராசனப்பா
செத்துமே மடிந்தல்லோ சுண்ணாம்பானான்
ஒப்பரிய சூதமென்ற சுண்ணந்தன்னை
ஓகோகோ நாதாக்கள் மறைத்தார்பாரே. 499

மறைத்தாரே பதினெண்பேர் நாற்பத்தெண்பேர்
மானிடர்கள் காணாமல் மூடிவைத்தார்
நிறைத்தபொருள் சூதவித்தை வுலகிலப்பா
நேர்மையுடன் காணாமல் நுணுக்கங்கூறார்
குறைத்தபொரு ளாகவேதான் கூறிவைத்தார்
குவலயத்தில் சித்தர்பல நூல்களெல்லாம்
திறைத்துமே கபடறுத்து சிக்கறுத்து
சிறப்புடனே யாமுரைத்தோம் பண்பாய்த்தானே. 500

பண்பான புலஸ்தியனே மச்சகேந்திரா
பாலகனே சூதமென்ற சுண்ணந்தன்னை
தண்மையுடன் ரவிதனிலே நூற்றுக்கொன்று
தயவுடனே தாக்கிப்பார் மாற்றோபத்து
வண்மையுட னாதியென்ற சேடன்றானும்
வாயாலும் பகரவே முடியாதப்பா
உண்மையுடன் மானிடர்கள் பிழைக்கவென்று
வுண்மையுடன் தாமுரைத்தோம் வுண்மைதானே. 501

தானான சுன்னமதை யெடுத்துமைந்தா
தாக்கிடவே மதிதனிலே நூற்றுக்கொன்று
கோனான குருபற்ப மென்னசொல்வேன்
கொற்றவனே மாற்றதுவுங் கூறொண்ணாது
தேனான மனோன்மணியாள் வீற்றிருக்கும்
தெளிவான தங்கமது பசுமைமெத்த
மானான தங்கமது பிறவித்தங்கம்
மகத்தான நாதாக்கள் தங்கமாச்சே. 502

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

தங்கமாம் சுன்னமது யென்னசொல்வேன்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தாரணியி லாருந்தான் காணமாட்டார்
புங்கசித்தி யெட்டுரிய தங்கமாச்சு
பூதலத்தி லாருந்தான் செய்யமாட்டார்
வங்கமென்ற புடத்துக்கு வசையாத்தங்கம்
மானிடர்கள் பிழைப்பதற்கு வுறுதித்தங்கம்
சிங்கமென்ற துருசியது கொண்டதாலே
சிற்பரனே ரசமது ராஜாளியாச்சே. 503

ஆச்சப்பா ரசமென்ற சுன்னந்தன்னை
அப்பனே மண்டலந்தான் கொண்டாயானால்
மாச்சலது வாராது ரசசுன்னம்
மண்டலத்தில் கொண்டவற்கு காயசித்தி
காச்சலுடன் பத்தியமோ பாலோடன்னம்
பாரினிலே கொண்டவற்குப் பலனுண்டாகும்
ஆச்சரிய மானதொரு காயகற்பம்
அன்புடனே கொண்டவர்க ளதீதந்தானே. 504

தானவனே புலஸ்தியனே தம்பிரானே
தண்மையுள்ள புத்திரனே தகமையோனே
கோனவனே காயாதி கொண்டபேர்கள்
குவலயத்தில் கோடிவரை யிருப்பார்கண்டீர்
மானவனே ராஜாதி சுன்னமப்பா
மகிமையது கூறுதற்கு யாராலாகும்
பானமது கொண்டாலும் சூதமப்பா
பகருதற்குந் பத்தியமு மில்லைதானே. 505

## குருநாதபற்பம்

இல்லையா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
யெழிலான பற்பமது நாதபறபம்
தொல்லையது நேராது யிந்தபற்பம்
தோராத பற்பமது துலைவுமெத்த
வெல்லவே கல்லதுதான் முக்கல்லாகும்
வேதாந்தக் கல்லதுதான் மூன்றேயாகும்
புல்லவே கல்நாராம் கல்மதந்தான்
புகழான சலாசத்து யெனனலாமே. 506

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

என்னவே யறுவகைச் செயநீர்தன்னால்
    யெழிலாகத் தானரைப்பாய் யாறுசாமம்
முன்னவே தானரைப்பாய் மைபோலாக
    மிக்கான மெழுகதுபோ லாட்டுமைந்தா
பன்னவே பில்லையது தட்டிமைந்தா
    பாலகனே ரவிதனிலே காயவைத்து
சொன்னபடி யோட்டிலிட்டு வோடுமூடி
    சுருதிபெற கோழியென்ற புடந்தான்போடே. 507

புடமதுதான் வாறினபின் னெடுத்துப்பார்க்கப்
    பொங்கமுடன் சுன்னமது யென்னசொல்வேன்
திடமதுவு மிகவுண்டு யிந்தசுன்னம்
    தீராத ரோகமெல்லாம் தீர்ந்துபோகும்
சடமதுவு மிறுகியல்லோ திடமுண்டாகும்
    சாற்றுதற்கு மேகமதற் கிடமுமில்லை
அடலான சுன்னமது பிரமகற்பம்
    ஆராலு முடியாது செய்யாரன்றே. 508

செய்யவே முடியாது யிந்தபாகம்
    செய்தாலு முறைபாடு செய்யொண்ணாது
உய்யவே பற்பமது வெண்ணெய்தன்னில்
    வுத்தமனே மண்டலந்தான் கொண்டாயானால்
கையவே தேகமது கற்றூணாகும்
    நாட்டினிலே பண்டிதர்கள் காணமாட்டார்
செய்தாலும் வழிபாடு முறைபாடெல்லாம்
    செப்பிடவே செய்தவற்கு சித்தியாமே. 509

சித்தியாம் குருநாத பற்பமப்பா
    சிற்பரனே ஜெகதலத்தில் யார்தான்செய்வார்
பத்தியுடன் குருமொழியைக் கேட்டபேரும்
    பண்பாக பலநூலை யறிந்தபேரும்
சத்தியமாய் குருதனையே பணிந்தபேரும்
    சமாதிமுகம் காத்திருந்து கண்டபேரும்
முத்தியது வேண்டுமென்று நினைத்தபேரும்
    மூதுலகில் காண்பதுதா னுண்மைபாரே. 510

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா குருறாத பற்பத்தாலே
பாரினிலே வெகுகோடி மாண்பரப்பா
சீரப்பா கைபாகம் செய்பாகந்தான்
தெரியாமல் கெட்டலைந்தோர் கோடாகோடி
ஆரப்பா வருமையா யறிந்தோர்மாண்பர்
அப்பனே கண்டவர்கள் விள்ளமாட்டார்
நேரப்பா துறைகோடி தொந்தங்கோடி
நேர்மையுடன் செய்வதற்கு சித்தியாமே. 511

## சிவலிங்கபற்பம்

ஆமப்பா யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
அப்பனே புலஸ்தியனே மச்சகேந்திரா
நாமப்பா சொன்னபடி சிவலிங்கமப்பா
நலமான செங்குருந்தக் கல்தானாகும்
போமப்பா முன்சொன்ன குருநாதந்தான்
பொலிவாக வாறுவகை ஜெயநீர்தன்னால்
சாமப்பா கல்வமதி லிட்டுமைந்தா
சார்பாக வரைத்திடவே மெழுகுமாமே. 512

மெழுகான மெழுகதுவை யெடுத்துபாலா
மேன்மையுடன் குருந்தக்கல் வங்கிபூட்டி
ஒழுகாமல் சீலையது வலுக்கச்செய்து
வுத்தமனே கெசபுடத்தில் போட்டாயானால்
பழுவுடனே வெந்துமது நீறியல்லோ
பாலகனே சுண்ணமது வாகநிற்கும்
கொழுமையாம் பற்பமது கூறொண்ணாது
கொற்றவனே நாதாக்கள் வேலைதாமே. 513

வேலையாம் குருந்தக்கல் சுண்ணமப்பா
வேதாந்தத் தாயினது அருளினாலே
ஆலைபோல் கண்டறிந்தே னாதிக்கல்லாம்
அப்பனே காயாதி கற்பக்கல்லாம்
சாலைபெரும் வழிதடங்கள் மலைகள்மீது
தப்பாது தானிருக்கும் குருந்தக்கல்லாம்
வேலையெனும் கடல்தனிலும் விளையுங்கல்லாம்
வேதாந்தத் தாயெனக்கு கொடுத்தகல்லே. 514

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கல்லான சுன்னமது கழற்றொண்ணாது
காசினியில் நாதாக்கள் கூறமாட்டார்
வல்லான சுன்னமதைக் குன்றிதானும்
எகுப்புடனே தேனதிலே கொண்டாயானால்
பல்லான பல்லதுவு மிறுகிக்காட்டும்
பாலகனே திரேகமது கற்றூணாகும்
சொல்லான வாசியது மேல்நோக்காது
சுருதிபெற லோகமதில் வாழலாமே. 515

வாழலாம் வெகுகோடி காலமப்பா
வண்மைபெற ஜெகந்தனிலே யிருக்கலாகும்
ஆழலாம் சாகரமும் நீந்தலாகும்
அப்பனே காயாதி யிதுவேயாகும்
யேகலாம் சமாதிமுகம் கொள்ளலாகும்
மிக்கான யோகத்துக் குறுதியாகும்
தாழலா மிச்சுன்னம் அதீதமாற்கம்
தப்பாது குருபற்பம் தண்மைபாரே. 516

## செயகண்டி மாத்திரை

பாரப்பா செயகண்டி மார்க்கஞ்சொல்வேன்
பண்மைபெற புலஸ்தியனே பண்பாய்க்கேளு
ஆரப்பா ஜெயகண்டி மாத்திரைதானப்பா
அப்பனே யாமுரைப்போ மறிந்தமட்டும்
சேரப்பா லிங்கமது பலமேயாகும்
செப்பரிய பூரமது பலமேயாதும்
தேரப்பா வீரமது பலமேயாகும்
தேர்ந்தெடுத்த கெந்தியது பலமொன்றாமே. 517

ஒன்றான பாஷாணம் பலமொன்றாகும்
வுத்தமனே கெவுரியது பலமொன்றாகும்
குன்றான சூதமது பலமொன்றாகும்
குருபரனே தாளகமும் பலமொன்றாகும்
வென்றிடவே சரக்கெல்லாம் கல்வமிட்டு
வெற்றிபெற வாறுவகை ஜெயநீர்தன்னால்
தென்றிசையில் அசுவனியா ருரைத்தவண்ணம்
தேர்ந்தெடுத்த கைபாக முறையிதாமே. 518

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

முறையான ஜெயநீரை விட்டு ஆட்டு
முக்கியமாய் யெண்சாம மரைத்தபோது
குறையொன்று நேராமல் மிளகு நீரால்
குறிப்புடனே தானரைப்பாய் மெழுகுபோலே
திறைநீக்கி ரவிதனிலே காயவைந்து
தீர்க்கமுடன் தானுருட்டி திறமாயப்பா
புறைபோகா வண்ணமுடன் குன்றிபோலாம்
புட்கரனே தானுருட்டி ரவியில்வையே. 519

வைத்துமே சீசாவிற் பதனம்பண்ணு
வளமைபெற மாத்திரையை வுண்பதற்கு
பொய்த்துமே போகாமல் வாசியோகம்
பொங்கமுடன் செய்துகொண்டு வனுபானங்கொள்
முத்தான தேனதிலே மண்டலந்தான்
முயற்சிபெற கொண்டவற்கு காயசித்தி
சத்தான திரேகமது யிறுகியல்லோ
சாகரமுங் காண்பதற்கு யேதுவாச்சே. 520

ஏதுவாம் வாசியது மேல்நோக்காது
யெழிலான சாதகத்துக் கிடமுண்டாகும்
போதுமே மண்டலந்தான் கொண்டபோது
பொங்கமுடன் சமாதிக்கு வுறுதியாவாம்
தூதுவனுக் கிடமில்லை துய்யபாலா
துப்புறவாய் மாய்கையது தள்ளவேண்டும்
சாதுரியமாய்த் திரிய வாயுவாகா
சட்டமுட னிருள்தனிலே யிருந்திடாயே. 521

இருள்தனி லிருந்துமே யிறைவாநீகேள்
யெழிலுடனே கற்பமது கொள்ளுங்காலம்
பொருளான பொருளதுதா னேதென்றாக்கால்
பொற்பொருளாம் சதாகமாம் சமாதியோகம்
தெருளகற்றி ரேசக பூரகத்தைத்தானும்
தேற்றமுடன் கனலதுதான் மிகவேறாமல்
அருளான வருளதனை மிகவேகொள்ள
அப்பனே சின்மயத்தை தேடிக்கொள்ளே. 522

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளவே சின்மயத்தை வுன்னிப்பாரு
குறிப்புடனே சதாசிவத்தின் கலையேதோன்றும்
விள்ளவே சிதாபாசக் களையகற்றி
வித்தகனே வாசிதனை நடத்தலொக்கும்
உள்ளபடி தவராது யிந்தமார்க்கம்
வுத்தமனே நாதாக்கள் நண்ணுமார்க்கம்
எள்ளளவும் பிசகாது புலஸ்தியாகேள்
யெழிலான வசுவனியாந் தேவர்வாக்கே. 523

வாக்கான வாக்கதுவும் பிசகாவண்ணம்
வளமைபெற நடந்தவற்கு யெல்லாஞ்சித்தி
நோக்கான நோக்கதுவு மறியவேண்டும்
நொடிக்குள்ளே தற்பரத்தை யடையவேண்டும்
தேக்காமல் சதாகாலம் நிஷ்டைவேண்டும்
தெளிந்தாலே சதாசிவத்தைக் காணலாகும்
மூக்காலே வாசியைத்தான் நிறுத்தல்வேண்டும்
மூதண்ட ரகசியத்தை பார்க்கநன்றே. 524

## சிவகுளிகை

நன்றான யின்னமொரு மருமஞ்சொல்வேன்
நாதாக்கள் தேசமதி லாடுங்கூத்து
குன்றான மலைபோலே குளிகையப்பா
கூறுகிறேன் புலஸ்தியனே புண்ணியபாலா
தென்றிசையி லசுவனியா ரெந்தனுக்கு
செப்பினதோர் குளிகையது மகிமைசொல்வேன்
வென்றிடவே ரிடிகள்முதல் சொரூபர்தாமும் 525
விண்டதிலை யிவ்வேதை கருவுள்ளானே.

கருவான குளிகையது சூதராசன்
காசினியில் விண்டவர்க ளாருமில்லை
தருவான சூதமது பலந்தானாகும்
தாக்கான துருசியது பலம்ரண்டாகும்
குருவான குயப்பாண்டந் தன்னிலப்பா
கொற்றவனே பொடிபண்ணி சூதம்விட்டு
பருவமுடன் தர்க்கால மாறவிட்டு 526
பக்குவமாய் சலமதனை யிறுத்திடாயே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

இறுத்துமே வடிகொண்டு சூதந்தன்னை
யெழில்பெறவே சீலைதனில் வடிதான்கொண்டு
பொறுத்துமே பின்னுமொருக் காலுமப்பா
பொங்கமுடன் துரிசிதனை தூவித்தூவி
நிறுத்துமே சூதமதை நிறுத்துப்போடு
நீதியுடன் றான்பிழிந்து வெண்ணெய்தன்னை
வெறுத்துமே வெண்ணெய்தான் யெடுத்துபாலா
வேகமுடன் மத்தங்காய்க் குள்ளேவையே. 527

வைத்துமே புடமதுதான் பத்தேயாகும்
மகத்தான ரசமதுவு மிறுகிக்கூடும்
பொய்த்துமே போகாது ரசமாவெண்ணெய்
பொலிவான கட்டியது வுருண்டைபோலாம்
நைத்துமே மண்மறைவில் புடந்தான்தீரு
நாதாந்த ரசமதுவு மணிபோலாகும்
கைத்துமே மூலிவகை யாமுரைப்போம்
கருத்துடனே புலஸ்தியனே கேட்டிடாயே. 528

கேட்கவென்றால் மூலியது யேதென்றாக்கால்
கெடியான நற்சங்கை மூலியப்பா
நாட்டமுடன் விளாங்காயின் பிரமாணந்தான்
நலமுடனே தானரைப்பாய் நண்புள்ளானே
தேட்டமுடன் மூலியதுக் குள்ளேயப்பா
தெளிவான சன்னத்தின் லவங்கப்பட்டை
தாட்டிகமாய் பலமதுவும் நிறுத்துமல்லோ
தயாபரனே கவசமது செய்திடாயே. 529

செய்யவே ரசவுண்டை தன்னுக்கப்பா
செம்மலுடன் கவசமதுக் கங்கிபூட்டி
கைதவறா வண்ணமது சீலைசெய்து
காவலனே ரவிதனிலே காயவைத்து
நையவே புடமதுவும் கோழியாக
நாவலனே போட்டுப்பார் யிறுகிநிற்கும்
மெய்ம்மையுடன் ரசமதுவு மணிபோலாகும்
மேன்மையுள்ள குளிகையென்று சொல்லலாமே. 530

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
செப்பலாம் ரசமதற் கின்னஞ்சொல்வோம்
செழிப்பான மூலிகையாங் கரும்பசளையாகும்
ஒப்பமுடன் மூலியினா லங்கிபூட்டி
வுத்தமனே தசபுடமும் போட்டாயானால்
தப்பிதங்கள் நேராது ரசமுமப்பா
தப்பாது கல்மணியாம் கடிசேயாகும்
எப்படியும் ரசமதுவு மணியேயாகும்
யெழிலாக காயாதி குளிகையாச்சே. 531

ஆச்சப்பா குளிகைதனை யெடுத்துமைந்தா
அப்பனே பனையின்றன் மூலத்தாலே
நீச்சப்பா மூலியது விஷமேயாகும்
நிஷ்களங்க மானதொரு சாற்றையப்பா
போச்சப்பா சாறென்று விடுகவேண்டாம்
பொலிவான சாறதனை சுறுக்குத்தாக்கு
வீச்சலுடன் ரசமது வீறடங்க
விண்ணுலகில் காயாதி கற்பமாமே. 532

கற்பமாம் குளிகையது மணியேயாகும்
காசினியில் யாருந்தான் காணப் போறார்
அற்பமென்று நினையாதே அன்புள்ளானே
அகிலமதில் நாதாக்க ளாடுங்கூத்து
சொற்பெரிய குளிகையது யென்னசொல்வேன்
சோராத சிவகுளிகை யென்னலாகும்
பற்பமது சிவகுளிகைக் கிதற்கொவ்வாது
காசினியில் விதியுள்ளான் காண்பான்தானே. 533

காண்பானே சிலமாண்பன் காண்பானப்பா
கண்டவர்கள் யாரேனுங் காண்பதில்லை
வீண்பான மானிடர்கள் காண்பதுண்டோ
விட்டகுறை யிருந்தவற்கு யெல்லாஞ்சித்தி
ஆண்மையாம் குளிகையது யார்தான் செய்வார்
அப்பனே கடந்தசித்து செய்வார் பாரு
பூண்பான குளிகையது போக்குசொல்வேன்
பொலிவான சிவயோகக் குறுதிபாரே. 534

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா சிவயோகஞ் செய்யும்போது
பாங்குடனே குளிகைதனை வாயிலிட்டு
கூரப்பா சின்மயத்தை நினைத்துகொண்டு
குறிப்புடனே வாயிலிட்டு ஜெபிக்கும்போது
நேரப்பா வாசியது மேல்நோக்காது
நெடிதான கும்பகத்தை யறியலாகும்
ஆரப்பா வாறுதலங் காணலாகும்
அப்பனே மனோண்மணியைக் காண்பார்தாமே. 535

காணவென்றால் புராதனமாம் பொருளுங்காண்பார்
காயாதி குளிகையினால் யெல்லாஞ்சித்தி
பூணலாம் குளிகையது வலுவினாலே
புங்கசித்தி யெட்டுமது கொள்ளலாகும்
வேணபடி யோகத்தை நிறுத்தியேற
வேண்டியதோர் கருமான மிதனாலாகும்
ஆணவங்கள் மிஞ்சாமல் யோகங்கொள்வீர்
அப்பனே சதாநிஷ்டை கொள்வீர்தாமே. 536

## பூநாகச் செம்பு ரசவித்தை

கொள்ளவே புலஸ்தியனே மச்சகேந்திரா
கோவேந்தே யுந்தமக்குக் கூறும்வண்ணம்
எள்ளளவும் பிசகாது யிந்தபாகம்
யென்மகனே புண்ணியனே எந்தன்மாரா
உள்ளபடி பலநூலுங் கண்டாராய்ந்து
ஓகோகோ நாதாக்கள் கூறாவண்ணம்
தெள்ளமிர்த மானதொரு கருமானத்தை
தெளிவுடனே யாமுறைப்போம் தெளிவுபாரே. 537

தெளிவான பூநாகம் பலம்பத்தாகும்
தேற்றமுடன் றானெடுப்பாய் குணமுள்ளானே
ஒளிவான நற்பசுவின் பாலிலப்பா
வுறுதியுடன் தான்கலந்து வூறப்போடு
களியான மண்ணதனைக் கக்கிப்போடும்
காவலனே காவலனே கருதக்கேளீர்
வெளியான ரவிதனிலே காயவைத்து
வேட்கமுடன் றானெடுப்பாய் மன்னாகேளே. 538

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

மன்னான மன்னவனே மதியுள்ளானே
மகதேவ ரிடிகளெல்லா மதிக்குங்கோவே
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தென்பொதிகை யசுவனியாந் தேவர்தாமும்
தேர்ந்தெடுத்த பூபாலா தேர்வேந்தேகேள்
கன்னவனுக் கொப்பான ரிடிகள்பாதம்
கண்மணியே புலஸ்தியனே கவிராஜேந்திரா
பொன்னைமிகத் தான்மறந்த புண்ணியபூபா
போக்குடனே பூநாகங் கூறுவேனே. 539

கூறுவேன் கேளப்பா பூநாகசத்துக்
குறிப்புடன் பொடியாகப் பாகமாக்கி
மாறுபடா மண்ணீக்கி பொடியையப்பா
மார்க்கமுடன் வெள்ளீயத் தன்னிலப்பா
வீறுடனே றாமுருக்கிக் கிராசமீவாய்
வித்தகனே வெள்ளீயம் னீரையுண்ணும்
ஆறுதலாம் னீரையது வாங்கியுண்டு
அப்பனே வெட்டைமுக மாகுந்தானே. 540

வெட்டையாம் னீரையது யுண்டுவாங்கி
வேகான காரமது மிகவேயூறி
திட்டமுள்ள வங்கமது செம்பேயாகி
திறமையுள்ள லோகம்போல் சொலிக்கும்வண்ணம்
சட்டமுள்ள தாம்பரமும் பொடியேயாகி
சாங்கமுடன் வெண்ணிறமா யிருக்கும்பாரு
அட்டதிசை சித்தர்முனி ரிடிகள்நாதர்
அவனிதனில் கொண்டாடும் செம்புமாச்சே. 541

செம்பான செம்பதுவும் வெள்ளைச்செம்பாம்
செகந்தனிலே மருமமது காணமாட்டார்
செம்பான ரவிச்செம்பே தவளகச்செம்பாம்
செகந்தனிலே நாதாக்கள் கண்டசெம்பு
செம்பான செம்பதுவும் குருத்தானாகும்
தேசத்தில் கர்மிகட்கு வாயாதப்பா
செம்பான செம்பதுவும் ரசச்செம்பாகும்
செப்புதற்கு நாவில்லை பாவில்லைதானே. 542

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாவான செம்பதனைப் பதனம்பண்ணு
பாலகனே அண்டத்தி னளவதாக
மேவவே பரணியது போலேமைந்தா
மேன்மைபெற சிமிழொன்று துவாரமிட்டு
தாவான ரசமென்ற ராசன்றன்னை
தண்மைபெற பரணியி லடக்கமிட்டு
காவலென்ற மேற்பரணி கொண்டுமூடி
கருத்துறவே சாதமதி லவித்திடாயே. 543

சாதமென்ற வுலைதனையே திறந்துபார்க்க
சட்டமுடன் ரசமதுவு மிறுகிப்போகும்
நீதமுடன் வெண்ணெயது போலேயாகும்
நிஷ்களங்க மானதொரு ரசத்தினுண்டை
வேதமென்ற சாத்திரத்தின் படியாராய்ந்து
வித்தகனே ரசமதைத்தா னெடுத்துப்பாலா
நீதமெனத் தானுருக்க மூசைசொல்வேன்
திருத்தமுள்ள காந்தமென்ற மூசைதூக்கே. 544

தூக்கியே வெண்ணெய்தனை யுருக்கிப்பார்க்கத்
துய்யானாம் வெள்ளியது யென்னசொல்வேன்
ஆக்கமுடன் வெள்ளியது முலாமேயாகும்
அப்பனே நாதாக்கள் செய்யும்வெள்ளி
நோக்கமுட னிவ்வெள்ளி சிவமேயாகும்
நொடிக்குள்ளே சத்திசிவம் காணலாகும்
பாக்கியங்கள் மிகவுண்டா மிந்தப்போக்குப்
பாலித்தேன் சிவவேடம் பூண்டோர்க்காச்சே. 545

## வெடியுப்புக்கட்டு

ஆச்சப்பா யின்னமொரு கருமானங்கேள்
அப்பனே யசுவனியார் சொன்னநீதி
காச்சலென்ற வெடியுப்பு வைந்தாங்காய்ச்சல்
கனமுடனே தானெடுப்பாய் கம்பியப்பா
மூச்சடங்க வாறுவகை ஜெயனீர்தன்னால்
முக்கியமாய் வாட்டிடவே கம்பிகட்டும்
மாச்சலது வாராது கம்பிதன்னை
மன்னவனே வாட்டிடவே கட்டிப்போச்சே. 546

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

கட்டினதோர் வெடியுப்பு தானொன்றுக்கு
காவலனே தங்கமதை மேலேசுற்றி
திட்டமுடன் பத்துக்கு வொன்றுதங்கம்
தீர்க்கமுடன் றான்சுற்றி பரியின்மேலே
சட்டமுடன் திராவகத்தில் வாட்டித்தீரு
சார்பான பரியதுவை யுண்ணுமுப்பு
நட்டமது வாராது மதியுப்பப்பா
நாயகனே வுட்கொண்டு யிறுகுந்தானே. 547

தானான மதியுப்பு இறுகியல்லோ
தகைமையுடன் கண்சிவந்து பொருமினீறாம்
கோனான புலஸ்தியனே பூபாகேண்மோ
கொற்றவனே செங்கதிரோன் செந்தூரந்தான்
மானான செந்தூர மென்னசொல்வேன்
மகத்தான வெடியுப்பு செந்தூரத்தை
பானான பரணியிலே பதனம்பண்ணு
பாலகனே பாச்சுதற்கு வகைசொல்வேனே. 548

சொல்லவே மதிதனிலே பத்துக்கொன்று
சுருதிபெற தானுருக்கி யீவாயப்பா
வெல்லவே வுருக்குமுகந் தன்னிலீய
வேகமுடன் மாற்றதுவு மென்னசொல்வேன்
புல்லவே மாற்றதுவு மெட்டேயாகும்
பூபாலா யிவ்வேதை காரமெத்த
அல்லவே புடமிட்டா லாணிக்கப்பா
அப்பனே மாற்றதுவும் பத்தேயாச்சே. 549

பத்தான மாற்றதுவு மென்னசொல்வேன்
பண்புள்ள புலஸ்தியனே பாலசீஷா
முத்தான தங்கமது பிறவித்தங்கம்
முயற்சியுள்ள தங்கமது பசுமைத்தங்கம்
சத்தான தங்கமது சாற்றொண்ணாது
சதுரான வேதைமுகந் துறைகளோடும்
வெற்றியுள்ள தங்கமது புகலொண்ணாது
வேதாந்தத் தாயுரைத்த வேதையாமே. 550

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆமேதா னிவ்வேதை யின்னஞ்சொல்வோம்
அப்பனே ரவிதனிலே பத்துக்கொன்று
நாமேதா னுரைத்தபடி வுருக்குமுகந்தன்னில்
தாயகனே றான்கொடுக்க மாற்றோபத்து
போமோதான் காவிக்கு முப்புக்கேகா
பொங்கமுடன் செம்பொன்னாய் செப்பலாகும்
தாமேதா னுரைத்தபடி பலபோக்கெல்லாக்
தகைமையுடன் பொய்யாகு மிதுமெய்யாமே.

552ம் பாட்டு இல்லை

## சயகுலாந்தகன்

கூறவே புலஸ்தியனே புண்ணியவானே
குவலயத்தில் சித்துமுனி ரிடிகள்தேவர்
தேறவே பலநூல்கள் கண்டாராய்ந்து
தேற்றமுடன் சொன்னதொரு பாடுமில்லை
மீறவே யசுவனியாந் தேவர்பாதம்
மிக்கவே யான்பணிந்து புகலலுற்லேன்
ஆறவே சயரோக குலாந்தகன்றான்
அன்புடனே யாமுறைப்போ மன்புள்ளானே. 553

அன்பான தாளகமும் பலந்தானொன்று
அப்பனே தானெடுத்து செப்பக்கேளீர்
வன்பான சுண்ணாம்புக் குட்பொதிந்து
வளமுடனே காடியது மிகவேபெய்து
சுன்னமதை மேலுமது கீழுமிட்டு
சுந்தரனே காடிதன்னில் வேகவைத்து
வின்னமது நேராமல் மூன்றுமுறையப்பா
வித்தகனே தீர்மையது செய்திடாயே. 554

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

செய்யவே தீ[illegible]வானபின்பு
செயலான தாளகத்தை யெடுத்துபாலா
உய்யவே கண்டங்கத்திரி தானப்பா
வுத்தமனே சாற்நாழி சுறுக்குதாக்கு
மெய்மையாய் சுறுக்கதுவுந் தீர்ந்தபின்பு
மேன்மையுடன் மேற்கவசம் செப்புவேன்பார்
துய்யநல்ல சுக்கானாம் சுண்ணமப்பா
துப்புரவாய் கருவிட்டு யாட்டிடாயே. 555

ஆட்டியே மெழுகுபத மானபின்பு
அப்பனே தாளகத்துக் கங்கிபூட்டி
தாட்டிகமாய் ரவிதனிலே காயவைத்து
தற்பரனே கோழியென்ற புடந்தான்போடு
நாட்டமுடன் புடமாறி யெடுத்துப்பாரு
நாயகனே வெந்துமது சுன்னமாகும்
நீட்டமுடன் பற்பமது பதனம்பண்ணு
நீமகனே வனுபான மறிந்துகொள்ளே. 556

கொள்ளவே வெண்ணெயது தேனுமாகும்
கொப்பெனவே சூரணமா மேதென்றாக்கால்
தெள்ளமிர்த மானதொரு தாளிசபத்திரி
தெளிவான சூரணத்தை செய்துகொண்டு
மெள்ளவே சீனியது சரியாய்க்கூட்டி
மேன்மையுடன் றான்ஷொடுக்க வனுபானத்தால்
அன்னியதோர் சலகாச மீளைகாசம்
அப்பனே யுடலைவிட் டோடுந்தானே. 557

தானான ரோகமது மந்தாரகாசம்
தாக்கான சுவாசமொடு வெள்ளோக்காளம்
மானான மகோதரம் பாண்டுரோகம்
மகத்தான விப்புருதி காசபேதி
தேனான கழிச்சலது சலநீர்ப்பாச்சல்
செரியாத மந்தமொடு விஷநீர்கோர்வை
பானான பலரோக சில்விஷங்கள்
பறக்குமடா சடலம்விட்டு சண்ணுந்தானே. 558

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சண்ணுமே [illegible] யில்லை
சாங்கமுடன் கடுகுடனே யெண்ணெய்யாகா
குண்ணுமே நோயனைத்தும் குடியேபோகும்
குவலயத்தில் சித்தர்செய்யும் சுன்னமப்பா
புண்ணியங்கள் செய்வதற்கு யிந்தபாகம்
புங்கவனே சித்தியடா மற்றோர்க்குண்டோ
எண்ணரிய நற்பொருளோ யார்க்குக்கிட்டும்
யேகாந்த மானதொரு சுன்னமாச்சே. 559

## மகாலிங்கதார குரு

ஆச்சப்பா யின்னமொரு கருமானங்கேள்
அப்பனே புலஸ்தியனே மச்சகேந்திரா
பாச்சவே லிங்கமொரு பலந்தான்வாங்கு
பாலகனே முலைப்பாலால் சுத்திசெய்து
காய்ச்சலென்ற வைந்தாங்கால் மதிதானப்பா
காவலனே பலமதுவாய் செப்பக்கேளு
மாச்சலது வாராது சீனம்சேர்த்து
மன்னவனே யாறுவகை நீராலாட்டே. 560

ஆட்டியே லிங்கமதற் கங்கிகொண்டு
அளவுடனே மெழுகுபதம் அரைத்துப்பின்பு
தாட்டிகமாம் சீலையது வலுவதாக்கி
தயாபரனே மண்மறைவிற் புடந்தான்போடு
நீட்டமுடன் புடமாறி யெடுத்துப்யாரு
நினைவுடனே மறுபடியு மங்கிகொண்டு
வாட்டமுடன் பின்னுமந்த முறைதப்பாமல்
மயங்காமல் புடமதுவும் போட்டிடாயே. 561

புடமான லிங்கமதைத் தானெடுத்து
புஷ்கரனே புலஸ்தியனே பின்னுங்கேளாய்
திடமான லிங்கமதுக் கிரட்டிக்கப்பா
தீர்க்கமுடன் வயப்பொடியாம் பலமதாக
மடமுடனே ரவியதுவுஞ் சமனதாக
மார்க்கமுடன் கருவின்பால் விட்டேயாட்டி
படமுடனே லிங்கமதற் கங்கிகொண்டு
பதராமல் ரவிதனிலே காயப்போடே. 562

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காய்ந்தபதம் தனையெடுத்துக் கருவுள்ளானே
கருத்துடனே பூப்புடத்தில் போடக்கேளீர்
ஆய்ந்துமே மணலதனை படிதானிட்டு
அளவுகொண்டு தீமூட்டி புடந்தான்கோழி
வாய்ந்தபுட மாறியபின் பெடுத்துப்பார்க்க
மன்னவனே லிங்கமது யிறுகிக்கட்டும்
சாய்ந்தபொரு ளதிலடக்கம் தம்பிரானே
சாங்கமுடன் றானெடுத்துப் பதனம்பண்ணே. 563

பண்ணியே லிங்கமதைப் பாச்சக்கேளீர்
பாலகனே கண்மணியே பகருவேன்யான்
வண்ணமுடன் செம்புதனை தானெடுப்பாய்
வளம்பெறவே வாறுவகை ஜெயநீர்தன்னால்
எண்ணமுடன் றானுருக்கி சாய்ப்பாயப்பா
யெழிலான ரவியொளியை யென்னசொல்வேன்
நண்ணமுடன் செம்புதா னெடுப்பாய்மைந்தா
நலம்பெறவே பாச்சுதற்கு வகைசொல்வேனே. 564

சொல்லவே மதிதானும் பத்துக்கொன்று
துப்புரவாய் தானுருக்கி பத்துக்கொன்று
வெல்லவே கொடுத்துப்பார் மாற்றாறாகும்
வேதாந்தத் தாய்கொடுத்த வேதையாகும்
கொல்லவே நாலுக்கோர் பரிதான்சேர்க்க
கொற்றவனே மாற்றதுவும் யெட்டேயாகும்
துல்லமா மிவ்வேதை யென்றொண்ணாதே.
துரைராச சுந்தரனே மகிமைபாரே. 565

பார்க்கவே நாதாக்கள் ரிடிகள்சித்தர்
பண்மைபெற பாடிவைத்த பெருநூலப்பா
ஏர்க்கவே டின்னீரர யிரந்தானப்பா
யெழிலான கரைகண்ட வேதமாகும்
தீர்க்கமுள்ள யிந்நூல்போல் யெந்நூலுந்தான்
திடமுடனே நாதாக்கள் கூறவில்லை
மார்க்கமுடன் ரகசியங்கள் தான்மறைத்து
மன்னவனே பாடிவைத்தா ரனேகமாமே. 566

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாடியதோர் நூல்களெல்லா மறைப்பேயில்லை
பாலகனே யிந்நூலில் மறைப்பேயில்லை
தேடியே பொருள்கண்டு பதமறிந்து
தேற்றமுடன் மாணாக்கள் பிழைக்கவென்று
நாடியே பெருங்கடலாம் சத்தவாரி
அமுர்தமென்ற திருப்பாலின் கடல்தானப்பா
மூடியதோர் மறப்பெல்லாங் கண்திறந்து
முயற்சியுடன் தாமுரைத்த நூலிதாமே. 567

## சதுரகிரி பஞ்சபாஷணக்காடு

நூலான சதுரகிரி வளப்பஞ்சொல்வேன்
நுட்பமுடன் புலஸ்தியனே புனிதவானே
பாலான தேசமெலாந் திரிந்து வந்தேன்
பாலகனே சதுரகிரி வளப்பமெத்த
சேலான காட்டகத்தே திரிந்துகண்டேன்
செயலான மார்க்கமது சொல்லொண்ணாது
ஆலான மத்திபமா மாலங்காடு
அப்பனே தடாகமுண்டு தோப்புமுண்டே. 568

தோப்பான் தோத்புக்குள் மண்டபந்தான்
தோராத வாயக்கால் குத்துக்கல்லாய்
தாப்பாளும் கதவுண்டு சங்கிலிதானப்பா
தண்மையுடன் சுரங்கமது கண்டேனப்பா
காப்பான கணபதியு மங்கேகண்டேன்
கருவான விசேஷங்க ளேதென்றாக்கால்
மூப்பான சித்தொருவ ரங்கிருந்தார்
முயற்சியுடன் தரிசனையுங் காணலாங்சே. 569

காணவே தரிசனையும் கண்டுமல்லோ
கடுகெனவே தாள்பணிந்தே னடியேனப்பா
பூணவே யெந்தனுக்கு நடுக்கமாகிப்
புகழுடனே சிரங்குனிந்து நிமிந்தேனப்பா
ஆணவங்கள் தானொடுங்கி நிற்கும்போது
அப்பனே யாரென்று வினவிக்கேட்க
தோணாம லடியேனும் கீழ்ப்பணிந்து
தோற்றமுட னசுவனியார் சீஷனென்றேன். 570

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

என்றேனே யசுவனியார் சட்டென்றேன்
யெழிலான தேவதா ரிடியாரப்போ
குன்றான மலைபோல வாய்திறந்து
கொற்றவனே வகஸ்தியரும் நீதானாமோ
தென்றிசையில் பொதிகைமுனி நீதானோதான்
தெளிவுடனே யெந்தனையுங் கேட்டாரப்பா
வென்றிடவே விதிவணக்க மடியேனப்பா
வேணவுப சாரமுடன் வணங்கிட்டேனே. 571

வணங்கியே நிற்கையிலே ரிடியாரங்கே
வாய்திறந்து கூறுகிற வண்ணங்கேளீர்
இணங்கமுடன் திரேதாயி னுகத்திலப்பா
யெழிலான பிரளயங்கள் நேர்ந்தபோது
தணங்கமுடன் மூன்றுயுகம் சமாதியப்பா
தற்பரனே குடிவாழ்க்கை யெந்தமக்கு
கணங்களுட னிப்பதியி லமர்ந்தேனென்று
கருத்துடனே வாக்கதுவும் பிறக்கலாச்சே. 572

ஆச்சப்பா யவ்வார்த்தை கேட்டேனங்கே
அட்சணமே யவ்விடம்விட் டேகினேன்யான்
மூச்சடங்கி யிருந்தரிடி யாரைவிட்டு
மூதண்ட குகைநீங்கி வந்தேனப்பா
பாச்சலுடன் சதுரகிரி மேற்கேநோக்கிப்
பாலகனே துலைதூரஞ் சென்றேன்யானும்
மேச்சலுடன் கோனானு மங்கிருந்தான்
மேன்மையுட னென்றனையுங் கண்டிட்டானே. 573

கண்டானே கோனானு மென்னைப்பார்த்து
கானகத்தில் வந்ததொரு குருவேயென்று
தெண்டனிட்டான் கோனானு மங்கையப்பா
தெளிவுடனே யானுமங்கே காணும்போது
புண்டரிக மானதொரு புண்ணியன்றான்
பூபால சுவாமிகளே யாரென்றான்பார்
அண்டர்தொழும் ரிடிதேவர் நீயோயென்றார்
அப்பனே ஆமென்றேன் புலஸ்தியரனே. 574

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

புலஸ்தியனே புங்கவனே பூபாலாகேள்
புகலரிய காட்டகத்தில் சென்றேல்யானும்
நிலம்பெரிய கானகத்தி னதிசயத்தை
நீதியுடன் யான்கேழ்க்க கோனான்றானும்
அலம்பெரிய வதிசயங்கள் சொல்லலுற்றார்
அப்பனே மேற்புறத்தில் கெவுரிகாடாம்
சலம்பெரிய வனந்தனிலே கெவுரிகாடாம்
சாங்கமுடன் கண்டுமே பயந்திட்டேனே. 575

பயந்திட்டேன் கெவுரிசெந் தூரங்கண்டேன்
பாலகனே லோகமெலாம் பழுத்துக்காட்டும்
நயந்திட்ட ரவியதுவும் தங்கமாகும்
நாதாந்தத் தாயினது வருளினாலே
சுயம்பான யேமமது பிறவித்தங்கம்
சுந்தரனே யிவ்வேதை பரிசுவேதை
அயமதுவும் பழுத்துவிடு மன்புள்ளானே
அப்பனே விதியாளி காண்பான்பாரே. 576

பார்க்கவே காயாதி கொள்ளலாகும்
பாரினிலே வெகுகோடி சித்துமாண்பர்
ஏர்க்கவே செந்தூரம் கொள்வார்பாரு
யெழிலான மார்க்கமது யாருங்காணார்
பூர்க்கவே சதுரகிரி வடபாகத்தில்
புகழுடனே சென்றேன்யான் புலஸ்தியாகேள்
ஆர்க்கமுடன் வடதிசையாஞ் செல்லும்போது
அங்ஙனவே சித்தொளிவைக் கண்டிட்டேனே. 577

கண்டேனே நாதாந்த சித்தைதாமும்
கனமுடனே பார்க்கையிலே சித்துதாமும்
அண்டையிலே வந்தங்கே யடிவணங்கி
அன்புடனே கைசோத்துச் சிரங்குனித்து
தொண்டனைப்போல் கரங்குவித்து யுபசரித்து
தோராமல் விடையதுவும் கேழ்க்கும்போது
சண்ட மாருதம்போல் வடியென்றானும்
சாற்றினே னசுவனியை நினைந்திட்டேனே. 578

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நினைந்துமே யசுவனியார் சீஷனென்றேன்
நீதியுடன் யானுமங்கே விடைகள்கூறி
புனைந்து கானகத்தி னதிசயத்தைப்
புகழ்ச்சியுடன் கேழ்க்கையிலே ரிடியார்தாமும்
சுனையுண்டு மலையுண்டு நதியுமுண்டு
சுந்தரனே மகாரிடிகள் காணாநாடு
தினைவிளையும் மகாநாடு புண்ணியபூபா
திருவினையாள் தானிருக்கும் நாடுமாச்சே. 579

நாடான கானகத்தில் பாஷாணந்தான்
நலம்பெரிய பூமியெல்லாம் சுண்ணக்காடு
காடான வனாந்திரமும் பழுக்கும்நாடு
கன்னவனே காயாதி யிருக்குமூலி
தாடாண்மை கொண்டுமல்லோ வெகுகோடிமாண்பா
தாரணியில் வந்திறங்கும் தழைந்தகாடு
பாடான சித்தர்கற்பம் கொள்ளுங்காடு
காவலனே யென்றெனக்கு கழறிட்டாரே. 580

இட்டபின்பு வடியேனு மாசரித்து
யெழிலுடனே விடையதுவும் பெற்றுக்கொண்டு
திட்டமுடன் கானகத்தி லடியேன்றானும்
தீர்க்கமுடன் சென்றேன் யவ்வனத்தே
சட்டமுடன் பாஷாணக் காடுகண்டேன்
சாங்கமுடன் சதுரகிரி கிழக்கேயப்பா
பட்டயம்போல் மலையொன்று தோப்புவுண்டு
பாலகனே கண்டேனே பண்புள்ளானே. 581

பண்பான கானகத்தில் நின்றேன்யானும்
பரிவான புலஸ்தியனே பண்புள்ளானே
நண்பான பாஷாணம் தாளகமுமப்பா
நலமான கிடாரமதாய் கோடியுண்டு
திண்பான கோடியுண்டு சாடிபாண்டம்
திறமுடனே குகைதனிலே பார்க்கும்போது
தண்பான கிடாரமது யருகேயப்பா
சார்பான காவலர்கள் கோடியுண்டே. 582

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கோடியாங் காயகற்பஞ் செந்தூரந்தான்
கொற்றவனே கொட்டிருக்கும் மலைபோலப்பா
தேடியே சித்துமுனி ரிடிகளப்பா
தேற்றமுட னங்கிருப்பார் காவலாக
நீடியே வதிசயங்கள் கண்டேன்யானும்
நிஷ்களங்க மானதொரு காயகற்பம்
ஓடியே திரிந்தாலும் கிடையாதப்பா
வுத்தமனே கானகத்தின் பெருமைதானே. 583

பெருமையாம் சதுரகிரி மேற்கேயப்பா
பேரான குகையொன்று குளமுமுண்டு
அருமையாம் வுதகமென்ற சுனையுமுண்டு
அப்பனே பாதாள கிணருண்டுண்டு
ஒருமையாம் கிணரருகில் கிடாரமுண்டு
ஓகோகோ நாதாக்கள் வைத்தவைப்பு
வருமையது வாராது கண்டபேர்க்கு
வளம்பெரிய லட்சுமியும் வாசமுண்டே. 584

உண்டான சுனையருகே வதிசயங்கள்
வுத்தமனே கண்டேனே கோடியுண்டு
அண்டான தனமுண்டு ரசக்காடப்பா
வுத்தமனே கிடாரவகை கோடியுண்டு
பண்டான பண்டாரம் சொல்லொண்ணாது
பாலகனே காயாதி கற்பமுண்டு
திண்ணமுட னடியேனும் பார்த்துமல்லோ
திக்கெனவே பயந்துமல்லோ நடுங்கிட்டேனே. 585

நடுங்கினேன் நாலுபுரம் கண்டேனப்பா
நாதாக்க ளிருக்குமிட குகையும்கண்டேன்
ஒடுங்கினேன் பாலரிடி வனத்தைக்கண்டேன்
வுத்தமனே விருட்சமது யடிவாரத்தில்
கடுங்கிணறு வுதகத்தில் தபசியாரும்
கடுகெனவே ஸ்தானமது செய்யும்போது
படுங்கிணறு மேல்நின்று பார்த்தேனப்பா
பாலகனே யெந்தன்கண் மூடலாச்சே. 586

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

மூடியே பயங்கொண்டு மூர்ச்சையாகி
மோகனமாம் பிரமையது மிகவுண்டாகி
வாடியே யானுமல்லோ மதிகொண்டேகி
வளமுடனே திகைக்கொண்ட நின்றவண்ணம்
நீடியே பலரிடியார் யென்னைக்கண்டு
நிஷ்களங்க மாகவல்லோ நிதானங்கொண்டு
தேடியே மேலேறி வடியேன்றன்னை
திகைநீக்கி யருள்தந்து தெளிந்திட்டாரே. 587

தெளியவே வரமதுவு மிகவாய்த்தந்து
தேற்றமுட னுபதேச மருளுந்தந்தார்
வளியான தடமெங்கே யென்றுகேட்க
வடியேனும் பொதிகைமலை யென்றுரைத்தேன்
எளியேனுக் குத்தாரம் விடையுந்தந்து
யெழிலுடனே சாபமது தோரர்வண்ணம்
பளியதுவும் நேராமல் துய்யபாலா
பாலகனே விடைதந்து வருள்தந்தாரே. 588

தந்தாரே கெடியான மலையும்விட்டேன்
தாரணியில் வெகுகோடி மாண்பரெல்வாம்
வந்தாரே மாந்தர்பல கர்மிமாண்பர்
மகாவனத்தில் சதுரகிரி மலையோரத்தில்
சொந்தமுட னிருந்தவர்கள் கோடாகோடி
சுந்தரனே சொல்வதற்கு நாவோயில்லை
சிந்தனையா யாமுரைத்தோம் துய்யபாலா
சிற்பரனே புண்ணியற்குக் கிட்டுந்தானே. 589

## தென்பொதிகை அகஸ்தியர் தீர்த்தம் கூறுவது

கிட்டான மறைபொருள்க தின்னமுண்டு
கீர்த்தியுள்ள புலஸ்தியனே தம்பிரானே
மட்டான பொருளுனக்கு வுபதேசிப்பேன்
மார்க்கமுடன் சிற்பரனே மகிழ்வாய்க்கேளு
அட்டபுரி யெல்லாந்திரிந்தே னன்புள்ளானே
அசுவனியா ரெந்தனுக்கு வுபதேசித்த
சட்டமுடன் புதைப்பொருளை யாமுமக்கு
சாங்கமுட னுபதேசம் செய்வேன்பாரே. 590

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா புலஸ்தியனே பண்புள்ளானே
பட்சமுடன் யாமுரைப்போ மகிமைபாரீர்
நேரப்பா பொதிகைமலை வடமேற்கப்பா
நெடிதான குத்துக்கல் லொன்றுதோன்றும்
சீரப்பா கல்லருகே வந்துநின்றால்
சிற்பரனே வசரீரி வாக்குண்டாகும்
ஆரப்பா வென்றிசொல்லி கேட்பாரப்பா
அங்ஙனவே வுத்தாரம் சொல்லல்நன்றே. 591

சொல்லவே குத்துக்கல் தான்சிறக்கும்
சொற்பெரிய காவலது யிருப்பாரங்கே
மெல்லவே யாரென்று வினவிக்கேட்பார்
வித்தகனே வகஸ்தியனார் சீஷனென்று
புல்லவே வுத்தாரம் தந்தாயானால்
புட்கரனே யுந்தமக்கு வழிதான்சொல்வார்
அல்லவே வுட்போய் நிற்பாயானால்
அப்பனே ரிடியொருவர் காண்பார்தானே. 592

கண்டதொரு ரிடியாரை னீயுமப்பா
காவலனே யடிபணிந்து முடிகள்சாய்த்து
தெண்டமுட னஞ்சலிகள் மிகவுஞ்செய்து
தீர்க்கமுடன் வாய்திறந்து மௌனங்கொண்டு
அண்டர்தொழும் ரிடியாரைக் குகைதான்காண
வடியேனும் வந்திட்டே னென்றுகூறு
கண்டவுட னுந்தமக்கு தடங்கள்கூறி
களிப்புடனே சமாதிமுக மனுப்புவாரே. 593

அனுப்புவார் சமாதிமுகம் சென்றேயப்பா
அங்ஙனவே நமஸ்காரம் செய்வாயப்பா
மனுதவறா வண்ணமது வணங்கிநிற்க
மகாதேவர் சமாதிமுகம் திறக்கும்பாரு
தனுருடனே வாத்தியங்கள் மிகவேகேட்கும்
தற்பரனே செகசோதி ரூபங்காண்பீர்
பனுவுடைய ரிடிபோல சித்துதாமும்
பரவொளியாய்க் கண்ணுக்கு தோற்றுவாரே. 594

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

தோற்றவே சித்துமுனி ரிடியாருந்தான்
தொல்லுலகில் வந்ததொரு மாண்பரார்தான்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
தேற்றமுடன் விடைகேழ்க்குங் காலமப்பா
தெளிவுடனே யசுவனியார் பேரனென்று
ஆற்றலது நேராம லுத்தாரஞ்சொல
அப்பனே யுந்தமக்கு யாவுஞ்சொல்வார்
கூற்றனுக் கிடமதுவும் நேராதப்பா
குருபரனே காயகற்பங் கொள்வீர்தாமே. 595

கொள்ளுவதுந் தான்தவிர புண்ணியபாலா
கொற்றவர்கள் முன்னிருந்த ரிடிகள்சித்தர்
தெள்ளமிர்த மானதொரு முனிவர்தாமும்
தேடியதோர் நூலனத்துங் கண்ணிற்காண்பீர்
உள்ளபடி தூரத்தின் தொகுப்பையெல்லாம்
வுத்தமனே யுந்தமக்கு வுபதேசிப்பார்
கள்ளமது நேராது கண்ணியவானே
காசினியில் னீர்தாமும் கதிகொள்வீரே. 596

கொள்வீரே சாத்திரங்க ளிருக்குந்தானம்
குருபரனே காண்பதினா லெல்லாஞ்சித்தி
அள்ளவே போகாது னீதானப்பா
அப்பனே யுந்தமக்கு சொந்தங்கொள்வீர்
தெள்ளமிர்த மயமான நூல்கள் சொல்வேன்
சுந்தரனே யிந்திரனே சுகுணமாரா
கள்ளமில்லா பெருனூலா முப்பதாயிரம்
காசினியி லசுவனியா ருரைத்தவாக்கே. 597

வாக்கான தர்மந்திரி லட்சமப்பா
வாகுடனே திரேதாயி னுலகத்திலப்பா
ஆக்கமுடன் பாடிவைத்த ஞானகண்டம்
அப்பனே பன்னீரா யிரந்தானங்கே
நோக்கமுடன் சமாதியது வெட்டாங்காலில்
நுணுக்கமுடன் னூக்குமாம் பேழைதன்னில்
பாக்கவே யாருக்குங் காணாமற்றான் 598
பதுங்குடனே கற்றூணா மடியிற்காணே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

காணலாம் பிரணவமாம் சாகரந்தானப்பா Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
பட்சமுடன் பாடிவைத்த சாகரந்தான்
தோணவே சௌமிய மெண்ணாயிரந்தான்
தோராமல் கற்பாறைக் குள்ளிருக்கும்
மாணவே பெருனூலாம் பட்சிகாண்டம்
மகதேவர் தன்வரத்தால் பாடிவைத்த
ஆணகமாம் பெருனூலா மறுபதாயிரம்
அப்பனே சமாதியது கீழுண்டாச்சே. 599

ஆச்சப்பா மூன்றாங்கால் படியிலப்பா
அப்பனே யெமகண்ட மெண்பதாயிரம்
மூச்சசிங்கி யிருந்தசித்து வசுவனியாரு
முயற்சியுடன் பாடிவைத்த பெருனூலாகும்
பாச்சலது நேராது குருனூலப்பா
பாலகனே பெருனூலாம் பதினாயிரந்தான்
மாச்சலது சதமகா காண்டமாகும்
மானிலத்தில் குகைதனிலே காணலாமே. 600

காணவே யின்னம்வெகு நூலுரைப்பேன்
காசினியில் நாதாக்கள் காணாநூல்கள்
பூணவே சதுர்காண்டம் நாற்பதாயிரம்
புங்கமுடன் பாடிவைத்தார் லக்கோயில்லை
தோணவே அஷ்டமாம் கருமவித்தை
தோராமல் பாடிவைத்தா ரன்பதாகும்
நாணவே வன்பது வாயிரந்தான்
நலமாக சமாதியிலே வமைத்தார்தாமே. 601

தாமான கருமான மான நூலாம்
தண்மையுடன் மாந்திரிக சல்லியந்தான்
ஆமான மாகவேதா னைந்துலட்சம்
அப்பனே பாடியல்லோ சமா பூண்டார்
வேமான கருவெல்லா மதிலடக்க
வேதாந்தத் தாயுரைத்த விபரமெல்லாம்
நாமேதான் கண்டப்படி கோடிநூலாம்
நாயகனே சமாதியி லிருக்குந்தானே. 602

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

இருக்குமே யசுவனியார் பெருநூலப்பா
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
யெழிலாக சித்துமுனி காணாமற்றான்
பொருக்குமே யுலகத்தா ரிடிகள்தேவர்
போக்கான நூல்களப்பா சொல்லொண்ணாது
அருக்கவே பெரியோர்கள் காணவென்று
அப்பனே சமாதிமுகம் வைத்தாரல்லோ
திருக்கமலம் வீற்றிழிக்கு லட்சுமியப்பா
திருவடியே சாட்சியென செப்பினாரே. 603

## சோதிடநூல் விபரம்

செப்பவே யின்னமொரு கருமானங்கேள்
செயலான பாக்கியங்கள் பெற்றபூபா
ஒப்பமுடன் ஜோசியமாம் நூல்களப்பா
ஒன்றுமே குறையாமல் சமாதிபூண்டார்
எப்படியு மசுவனியார் காலந்தன்னி
லெழிலுடனே வைத்தநூலாம் சோசியந்தான்
தப்பிதங்கள் நேராது தருமபூபா
தயவுடனே சாற்றுகிறேன் தருமவானே. 604

தருமமாம் காக்கைய ரெண்பதினாயிரந்தான்
சட்டமுடன் பாடியல்லோ மூன்றாங்காலில்
பருமனாம் பேழையது கருங்கல்லப்பா
பாலகனே யடிவாரம் யாருங்காணார்
திருமகளால் வீற்றிருக்கும் சரஸ்வதிமாளி
தீர்க்கமுடன் சமாதிமுக மிருக்குதப்பா
அருமையாம் சுகரதுதான் லட்சம்சொச்சம்
அப்பனே யிரண்டாங்கால் சமாதியாச்சே. 605

ஆச்சப்பா வரரிடி ஜோசியந்தான்
அய்யாயிரங் காப்பல்லோ வாறாங்காலில்
மூச்சடங்கிப் போனதொரு வரரிடியாரப்பா
முயன்றுரைத்த ஜோசியமாம் சமாதிகாண்பீர்
மாச்சலெனும் புலிப்பாணி யுரைத்த நூலாம்
பாடினதோர் பெருநூலாம் பதினேழாயிரந்தான்
மாச்சலது நேராது கௌசிகமானசித்து
மதிப்புடனே பாடினதோர் லட்சம்பாரே. 606

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா சிநேந்திரமாம் லட்சங்காப்பு
பாரினிலே பாடியதோர் லக்கோயில்லை
நீரப்பா திரேதாயி னுகத்திலப்பா
நீதியுடன் றாமுரைத்த கோர்வையாகும்
ஆரப்பா ஜாதகமாம் சிந்தாமணியப்பா
அப்பனே யறுபதினா யிரந்தானாகும்
கூரப்பா யேழாங்கால் தன்னிலப்பா
குறிப்புடனே சமாதிமுக மிருக்குந்தானே. 607

தானவனே புலஸ்தியனே பூமானேகேள்
தண்மையுள்ள சாஸ்திரங்கள் வேதமப்பா
வானவர்கள் கொண்டாடும் மருத்துவனூல்கள்
மார்க்கமுடன் யிதிகாசம் பிரணவந்தான்
சோனைமழை போலாக புராணகீதம்
தோராத பலனூலு மாகமந்தான்
பானமது போலாக லிங்கமப்பா
பதினெட்டாங் கால்தனிலே காணலாமே. 608

காலான பெருனூல்கள் படிகமப்பா
காசினியில் திரேதாயி னுகத்திலங்கே
பாலான மொழிபோலே பாடிவைத்த
பாங்கான னூல்களெல்லாம் பதிவிலப்பா
ஆலாலங் கொண்டல்லோ வாழ்ந்தபாதம்
அப்பனே சமாதிமுகம் காணலாகும்
சாலான சமுத்திரம்போல் சத்தவாரி
சாகரமாம் பெருனூல்கள் அதீதந்தானே. 609

நூல்வழியே பெரியோரைக் காணலாகும்
நுணுக்கமது தேராமற் போனாலுந்தான்
கால்வழியே போனாலும் கவனியாவாய்
காசினியி லாருக்குந்தான் கிட்டாதப்பா
வேல்முருகர் பதமது மிகப்பணிந்து
வேதாந்தத் தாயினுட வருளும்பெற்று
மால்பொருந்தும் சித்துமுனி ரிடியார்பாதம்
மன்னவனே வரம்பெற்று வாழ்குவீரே. 610

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வாழவே யின்னமொரு வகைமானங்கேள்
வண்மையுள்ள புலஸ்தியனே மந்திரவானே
ஆழமுள்ள சித்துமுனி ரிடிகளப்பா
அனேகம்பேர் லோகமதில் யிருப்பாருண்டே
சாழவே சமாதிமுகம் நூல்கள்பாடி
சட்டமுடன் வைத்தவர்க ளாறுமில்லை
மீழவே யசுவனியார் தேவர்தாமும்
மிக்கான சாத்திரங்கள் சமைந்திட்டாரே. 611

சமைந்ததொரு சாத்திரங்கள் செய்ததல்லால்
சாங்கமுடன் சமாதிமுகம் பதிவுசெய்தார்
அமைந்துமே பலபேர்கள் சொன்னனூலை
அவனிதனில் சாகாமல் சமாதிசெய்தார்
உமையவளும் னூல்செய்தார் கோடிக்கப்பா
வுலகினிலே யாரேனுங் கண்டதுண்டோ
சுமைபோல சாத்திரங்கள் கோடாகோடி
சுந்தரனே வுந்தமக்கு வாய்க்குந்தானே. 612

வாய்க்குமே யின்னமொரு மருமஞ்சொல்வேன்
வளம்பெரிய புலஸ்தியனே மகிமைவானே
பேய்க்கரும்பின் சுவைதனையை யறிந்தாற்போல
பிரபலனே ருசிபாக மறிதல்வேண்டும்
தீப்பிடிக்குங் காற்றெதிர்முன் பஞ்சுபோல
தீவிரமாய் மனவுறுதி கொள்ளவேண்டும்
தாய்க்கொடுக்கும் பாலமிர்த மிதுதானப்பா
தப்பாது யுந்தமக்குச் சாற்றுவேனே. 613

## திரேதாயுகத்தில் ரேணுகை சாத்திரம் பொதிகையில் கண்டது

சாற்றுவேன் ரேணுகையால் சாத்திரங்கள்
சதுர்கோடி யுகங்கோடி சாற்றினார்கள்
போற்றலுடன் பொதிகைமலை சமாதியப்பா
பொங்கமுடன் சொல்லுதற்கு நாவோயில்லை
ஆற்றலுடன் மலையோரஞ் சுனைதானுண்டு
அப்பனே மண்டபந்தான் குத்துக்கல்லாம்
கூற்றனவன் கண்டதில்லை சமாதிதானும்
குவலயத்தில் மருமமது கூறொண்ணாதே. 614

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

கூறவே ரேணுகையரால் னூல்களப்பா
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
குறிப்பான பெருனூலாஞ் சாகரந்தான்
மாறலது யில்லாத ரேகைனூலா
மன்னவனே பாடியே பொதிகைதன்னில்
ஆறலுடன் சமாதிமுகம் வைத்தாரங்கே
அப்பனே காவலர்கள் பூதமப்பா
தீதமுடன் கண்டவர்க ளாருமில்லை
தீர்க்கமுட னசுவனியார் சமாதியப்பா
தேறலது கொண்டுமல்லோ சித்துதாமும்
தேற்றமுடன் சமாதிதனில் கண்டிட்டாரே. 615

கண்டதொரு னூல்களிலே கோடியாகம்
காசினியில் மறைத்தவகை யாருங்காணார்
அண்டர்முனி ராட்சதருங் கண்டதில்லை
அப்பனே சித்திராவின் புத்திரன்றான்
தொண்டுசெய்து பெற்றதொரு னூல்களப்பா
துறைகோடி முறைகோடி தொந்தங்கோடி
தண்டுபை மாலையணி கிருஷ்ணபூபன்
சாற்றினதோர் னூல்களெலாம் சமாதிகாணே 616

## சற்பபூபதி திராவகம்

கண்டதொரு புலஸ்தியனே பூபாகேண்மோ
காசினியில் மருமமது யாருங்காணார்
விண்டதொரு பொருளனைத்தும் விள்ளாவிட்டால்
மேதினியில் யெந்தமக்குப் பாவம்பாவம்
தொண்டுசெய்து பெற்றதொரு சற்பபூபன்
தோராம லுந்தமக்குக் கூறுவேன்யான்
சண்டமா ருதம்போல கலசமப்பா
சாற்றுகிறேன் மன்னவனே சார்பாய்க் கேளே. 617

சார்பான வாலையது மூன்றேயாகும்
சாங்கமுடன் பாண்டமது வாறேயாகும்
நேர்பான மேற்பாண்டம் வாலையப்பா
நெடிதான கீழ்ப்பாண்டம் சாடிதன்னை
மார்பான சாடியின்மேல் பாண்டமப்பா
மன்னவனே வடிப்பாண்டம் சக்கரவாலை
ஆர்பான முப்பாண்டம் வாலுகையிலப்பா
அப்பனே சொல்லுகிறேன் வண்மைகாணே. 618

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வன்மையாம் சரக்குவகை வருக்கங்கேளீர்
வளம்பெரிய பாஷாணம் பலமொன்றாகும்
கண்மையாம் கெவுரியது பலமொன்றாகும்
கருவான சிங்கியது பலமதாகும்
வெண்மையாம் வெண்கண்டர் பலமதாகும்
வீரானது துருசியது பலமதாகும்
அண்மையாம் சூடனது பலமதாகும்
அப்பனே தாளகமும் பலமதாமே. 619

பலமான தாரமும் பலமதாகும்
பாங்கான லிங்கமும் கார்முகில்தானப்பா
மலமான பேதியது பலமேயாகும்
மகத்தான கெந்தியது பலமதாகும்
தலமான சூதமது பலமேயாகும்
தாக்கான பூரமது பலமேயாகும்
குலமான பூரமது பலமேயாகும்
கொற்றவனே புலஸ்தியனே யின்னங்கேளே. 620

கேளப்பா குதிரைப்பல் பாஷாணந்தான்
கெட்டியாம் வெள்ளை பாஷாணமப்பா
தாளப்பா பலமதுவுஞ் சரியேயாகும்
தண்மைபெற சருமாவும் பலமேயாகும்
கோளப்பா நேராத மதியுப்பப்பா
கொற்றவனே யிந்துப்பு கல்லுப்பாகும்
மீளப்பா வளயலுப்பு வுவருப்பாகும்
மிக்கான சவுட்டுப்பு கரியுப்பாமே. 621

வப்பான வுப்பதுவும் பலமேயாகும்
ஓகோகோ நாதாக்கள் கூறாவண்ணம்
தப்பாமல் கடல்துறையும் கல்மதந்தான்
தாக்கான கல்மதமும் கல்நாரப்பா
ஒப்பமுடன் சிலாசத்துப் பலமேயாகும்
வொக்கவே சமனெடையாய் நிறுத்துத்தூக்கு
எப்படியும் கோளாறு நேராமற்றான்
யென்மகனே பாகமது பிசகிடாதே. 622

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பிசகாமல் ஞான்முகமும் பிசகவேண்டாம்
    பேரான புலஸ்தியனே புண்ணயவானே
நிசமுடனே கச்சாய வர்க்கமப்பா
    நீதியுடன் சரக்குவகை சாற்றக்கேளீர்
தசமுடனே கற்கவகை யாருஞ்சொல்லார்
    சாதகமாய் பலனூலுங் கண்டாராய்ந்தேன்
குசலமுட னிந்தனூல் சற்பநூபன்
    குடிலமுடன் சாற்றினே னுண்மைபாரே. 623

பாரப்பா சற்பத்தில் திராவகந்தான்
    சாற்றுகிறே னுந்தமக்காய் மாணாக்கற்கு
சீரப்பா சுக்குடனே மிளகுதானும்
    சிறப்பான பலமதுவு மெடுத்துக்கொள்ளு
ஆரப்பா கடுக்காயு மாசிக்காயு
    மப்பனே தான்றியது பலமேகொள்ளு
வேரப்பா நெல்லியது பலமேயாகும்
    வேகமுள்ள கொடிவேலி பலமேயாமே. 624

ஆமப்பா கருஞ்சீரம் பலமேயாகும்
    அப்பனே காட்டு சீரகந்தானப்பா
காமப்பா நற்சீரம் பலமேயாகும்
    காவலனே மதனப்பூ கிராம்புதானும்
போமப்பா லவுங்கமெனும் பட்டைதானும்
    பொன்னவனே பலமது நிறுத்துக்கொண்டு
வேமப்பா சாதிக்காய் பலமதாகும்
    வேகமுள்ள குராசானி பலமுமாமே. 625

சானியாம் ரேவலது பலமேயாகும்
    சார்பான குங்குமமும் சரியேயாகும்
ஆனியாஞ் சவ்வாது பலமேயாகும்
    அப்பனே புனுகுடனே பச்சைப்பூரம்
தானியாம் கஸ்தூரி பலமேயாகும்
    தப்பாது கோரோசனம் பலமேயாகும்
மேனியா மயிலியது பலமேயாகும்
    மிக்கான கருங்குன்றி பலந்தான்கூட்டே. 626

CC0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கூட்டியே யெட்டியது பலமேயாகும்
குறிப்பான தேற்றானின் வித்தேயாகும்
வாட்டமுடன் நீர்முள்ளி யெரிகாலந்தான்
வளம்பெரிய சூரைவிரை பலமேயாகும்
நீட்டமுள்ள சவுரிவிரை நீலிவித்து
நெடிதான காசாவின் வித்தேயாகும்
தாட்டிகமாம் நத்தையென்ற வித்தேயாகும்
தாக்கான பேய்ச்சுரையின் வித்துமாமே. 627

வித்தான காரைவிரை சூரையாகும்
வீரான கசப்புடனே கோவைவித்து
சத்தான வழிஞ்சுவிரை முத்தக்காசு
சார்பான பாளையுட வித்தேயாகும்
கொத்தான கொம்மட்டி வித்தேயாகும்
கொடிதான பசளையின்றன் வித்தேயாகும்
சத்தான வித்ததுவும் வில்வமாகும்
சாங்கமுடன் தானெடுப்பாய் பலந்தானாமே. 628

பலமுடனே கோதுமை வித்தேயாகும்
பாங்கான கருவேலின் வித்தேயாகும்
சலமுடனே தாமரையின் வித்தேயாகும்
சார்பான வல்லியின்றன் வித்தேயாகும்
கலமான மா காணி வித்தேயாகும்
கரியதொரு கரும்பாளை வித்தேயாகும்
தலமான சரக்குடனே சேரும்பாகம்
சாற்றுகிறேன் புலஸ்தியனே தம்பிரானே. 629

தம்பியென்றால் சற்பத்தின் திராவகந்தான்
தாரணியி லாருந்தான் சாற்றவில்லை
நம்பியே செய்வதத்கு யின்னங்கூர்வேன்
நயம்படவே புஷ்பவகை சாற்றக்கேளீர்
கும்பியே போகாதே மனம்விடாதே
கொற்றவனே கைபாகம் பிசகிடாதே
வெம்பியே போகாத புட்பமப்பா
வேட்டமுடன் றானெடுக்க விபரங்கேளே. 630

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேளப்பா முன்சொன்ன சரக்கெல்லாந்தான்
கெட்டியாய் கல்லுரலி லிட்டுமேதான்
கோளப்பா நேராமல் சரக்கையப்பா
கொற்றவனே கல்லுரலில் போட்டுக்குத்து
தாளப்பா மைபோல சரக்கெல்லாந்தான்
சட்டமுடன் தானிடித்துப் பின்னுங்கேளு
ஆளப்பா முன்னுரைத்த புட்பமப்பா
அப்பனே சாற்றுகிறே னன்புள்ளானே. 631

அன்பான புலஸ்தியனே வதிகாராகேள்
அழகான மச்சத்தி னேற்மைகொண்ட
கன்பான கன்னவனே கவிராஜேந்திரா
கருவான கருவிலமே கவிவல்லோனே
தின்பான ரோசாவின் புட்பமப்பா
தீர்க்கமுள்ள கஞ்சாவின் புட்பமப்பா
வென்பான கூவிளத்தின் புட்பமப்பா
வேகமுள்ள மந்தாரை புட்பந்தானே. 632

தானேகேள் புட்பமப்பா தராவின்புட்பம்
தண்மையுள்ள புட்பமது சரக்கொன்றையப்பா
மானேகேள் முருங்கையின் புட்பமப்பா
மகத்தான கொம்மட்டிப் புட்பமப்பா
தேனேகேள் பேய்ச்சுரையின் புட்பமப்பா
தெளிவான சூரியனார் புட்பமாகும்
தீனேகேள் புட்பமது கருஞ்சூரைபுட்பம்
தீர்க்கமுடன் பலமைந்தாய் நிறுத்துக்கொள்ளே. 633

கொள்ளவென்றால் கருஊமப் புட்பமாகும்
கொடிதான சதாவேரி புட்பமாகும்
அள்ளப்பா காக்கணத்தின் புட்பமாகும்
அப்பனே வெள்ளைக் காக்கணமுமாகும்
துள்ளவே கருஞ்சூரை புட்பமாகும்
துறையான வேலியுட புட்பமாகும்
தெள்ளமிர்த மானதொரு வேளையப்பா
தெளிவுடனே றான்சேர்த்துப் பொதிந்திடாயே. 634

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பொதியவே முன்சொன்ன சரக்கிலப்பா
பொங்கமுடன் கல்லுரலில் போட்டுமேதான்
விதியுடனே தானிடித்து வுண்டைசெய்து
வித்தகனே முன்னுரைத்தப் பாண்டமப்பா
கெதிபெறவே சக்கரமாம் வாலையப்பா
கெடியான பாண்டமது யடிப்பாண்டந்தான்
மதியுடனே சரக்கெல்லா மிட்டுமைந்தா
மார்க்கமுடன் சீலையது வலுவாய்ச்செய்யே. 635

செய்யவே பாண்டமது சீலையப்பா
செப்புகிறேன் வாலுகையா மடுப்பில்தானும்
வெய்யவே கமலமென்ற தீதானப்பா
வேகமுடன் றானெரிப்பாய் யிறங்குமட்டும்
துய்யநல்ல திராவகமு மிறங்கும்பாரு
துப்புரவாய் மேற்பாண்ட மூக்கிலப்பா
உய்யவே திராவகமு மிறங்குமப்பா
வுத்தமனே சீஷாவி லடைத்துவாங்கே. 636

வாங்கியே மறுபடியும் பாண்டமேற்றி
மன்னவனே மறவாமல் திராவகத்தே
தூங்கியே திரியாதே துய்யபாலா
துப்புரவாய் பின்னுமது திராவகத்தை
ஏங்கியே நிற்காமல் யெழில்வல்லோனே
யெத்துடனே திராவகத்தே வாங்குவாங்கு
பாங்குபெற திராவகத்தைப் பதனம்பண்ணு
பாலகனே யாருக்குங் காட்டொண்ணாதே. 637

காட்டவே வேண்டாங்காண் கருவுள்ளானே
காசியினில் வெகுகோடி கருமிமாண்பர்
தாண்டிகமா யுனைக்கண்டு வார்த்தைகூறி
தண்மையுட னுறவாடி சண்டைகொண்டு
நீட்டமுடன் திராவகத்தை யீயச்சொல்வார்
நீதியுடன் அவர்களுக்கு யிதவுகூறி
வாட்டமுடன் தயிலமது வெடித்துப்போச்சு
வளம்பெரிய மன்னர்களே யென்றிடாயே. 638

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

என்னவே யவர்களுமே யேமாந்தப்பா
யெழில்பெறவே யுந்தனிட மணுகமாட்டார்
சொன்னபடி வார்த்தையது வுண்மையென்று
துரைராச சுந்தரனே மெய்தானென்று
நன்னயமாய் யுன்னைவிட் டேகியல்லோ
நயம்படவே விலகிடுவார் தப்பாவண்ணம்
உன்னிதமாம் திராவகத்தை புலஸ்தியாகேள்
வுத்தமனே குகைதனிலே பானம்பண்ணே. 639

பண்ணியே சமாதிதனில் தைத்துமேதான்
பலகாலு மசுவனியார் தேவர்தம்மை
நண்ணியே பூசைமுகம் தான்ஜெபித்து
நலமுடனே யெண்ணாளும் போற்றிசெய்து
கண்ணிமையும் தவறாது காலைமாலை
காவலனே நமஸ்கார பூசைகொள்வீர்
எண்ணமுடன் தானிருந்து சமாதிகொள்வீர்
யெழிலான திராவகத்தின் மகிமைகேளே. 640

கோளேதான் புலஸ்தியனே மச்சகேந்திரா
கெடியான யென்வார்த்தை கேட்பீர்வண்ணம்
கேளேதான் நேராமல் திராவகத்தை
கொப்பெனவே மண்டலந்தான் குன்றிகொண்டால்
பாளேதான் போகாது வுந்தன்தேகம்
பாரினிலே நீயுமொரு கவனியாவாய்
ஆளேதான் மண்டலந்தான் கொண்டபோது
அப்பனே திரேகமது கற்றூணாமே. 641

கல்லான தூணதுதான் கற்பகாலம்
காசினியி லிருப்பதற்கு லக்கோயில்லை
புல்லான காயமது யிறுகியேதான்
புங்கவனே வஷ்டசித்தி கொள்ளலாகும்
வெல்லவே யுந்தனையும் சித்துமாண்பர்
வேட்கமுட னாராலு முடியாதப்பா
துல்லபமாம் காயாதி கற்பமாச்சு
துப்புறவாய் சமாதிக்கு யிடங்கொள்வீரே. 642

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளுதற்கு யித்தயிலம் காயாதியாகும்
கொற்றவனே சமாதிமுக யிதுவேயாகும்
எள்ளளவும் பிசகாது யிந்தபாகம்
யெழிலுடனே யுந்தமக்கு வாய்க்கலாச்சு
தெள்ளமிர்த மானதொரு தயிலமப்பா
தேற்றமுடன் மானிடர்கள் கொள்ளக் கேளீர்
உள்ளபடி மருமமது கொண்டிடாம
லுத்தமனே பெருமையது கூறுவேனே. 643

கூறியதோர் திராவகத்தைக் குன்றியப்பா
கொற்றவனே மூன்றுநாள் கொண்டபோது
மீறியதோர் குஷ்டமுதல் கசரோகங்கள்
மிக்கான சிலவிஷங்க ளற்றுப்போகும்
மாறியே போகுதற்கு வையமில்லை
மானிடர்கள் கொண்டாலும் சகிப்பதற்கு
வீறியமு மதிகங்காண் வித்தகாகேள்
விற்பனனே புலஸ்தியனே புண்ணியவானே. 644

புண்ணியமாம் சாவதுநாள் மாறுபாடு
புங்கவனே நேரிடுமாம் காலந்தன்னில்
திண்ணமுடன் குன்றியது தேனிற்கொண்டால்
தீர்க்கமுடன் மறுவார்த்தைப் பேசிப்போவான்
நண்ணமுடன் வார்த்தையது மிகவேகூறி
நலமுடனே மறுபடியு மரித்துப் போவான்
வண்ணமுள்ள திராவகமோ வகுக்கலாகா
வளம்பெரிய காயாதி கற்பமாச்சே. 645

ஆச்சப்பா கற்பமென்ற திராவகத்தை
அப்பனே மண்டலந்தான் கால்தான்கொண்டால்
மூச்சதுவும் சுவாசமது மேல்நோக்காது
மூர்க்கமுள்ள வாசியது கீழ்நோக்காகும்
பாய்ச்சலுடன் ரோமமது கறுத்துக்காட்டும்
பாலகனே வெள்ளையது கறுப்பேயாகும்
மாய்ச்சலது வாராது தேகந்தான் 646
மகதேவர் நாமுரைத்த நீதிவாக்கே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வாக்கான வாக்கதுவும் பொய்யாதப்பா
வளம்பெரிய சித்துமுனி மெய்ச்சும்வாக்கு
நோக்கான நோக்குடனே நடந்தபேற்கு
நொடிதான குகைவழிகள் யெல்லாங்காணும்
தாக்கான திராவகத்தை யார்கொண்டாலும்
தற்பரனே பாம்புமுதல் விஷநீரெல்லாம்
ஆக்கமுடன் சடலமது வணுகாதப்பா
அப்பனே திராவகத்தின் பெருமைதாமே. 6 7

பெருமையாம் திராவகத்தை செம்பிலப்பா
பேர்படவே ஹுாற்றுக்கு குன்றியப்பா
அருமையாய் தானுருக்கிக் குன்றியீய
அப்பனே மாற்றதுவும் தங்கமப்பா
ஒருமையாய்த் தங்கமது யென்னசொல்வேன்
வுத்தமனே நாதாக்கள் தங்கமப்பா
சிருமையது வாராது பெருமைத்தங்கம்
சிறப்புள்ள பிறவியென்ற தங்கமாச்சே. 643

தங்கமாம் வெள்ளிதனில் ஹுாற்றுக்கொன்று
தற்பரனே தாமுருக்கி திராவகத்தை
அங்கமுடன் குன்றியது வுருக்குதன்னில்
அப்பனே தான்கொடுக்க மாற்றோபத்தாம்
புங்கசித்தி கொள்ளுகின்ற தங்கமாகும்
புகழுடைய நாதாக்கள் கொள்ளுந்தங்கம்
சிங்கமுகங் கொண்டதொரு வசுவரியாந்தேவர்
சிறப்புடனே யெமக்களித்த குருவுமாச்சே. 6

குருவான தங்கமது பிறவித்தங்கம்
குவலயத்தில் சித்துமுனி மெய்ச்சுந்தங்கம்
அருமையுள்ள தங்கமது யார்க்குக்கிட்டும்
அப்பனே சிவயோகி காண்பான்கண்பீர்
பெருமையுள்ள தங்கமது யாருங்காணார்
பேரான விதியாளி காண்பானல்லோ
ஒருமைபட வுந்தமக்கு வுரைத்தவண்ணம்
வுத்தமனே கர்மிகட்கு காட்டொண்ணாதே. 650

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## சரமண்டலம்

காட்டவே யின்னமொரு கருமானங்கேள்
காவலனே புலஸ்தியனே மச்சகேந்திரா
தாட்டிகமாம் சரமண்டலம் யானுரைப்பேன்
தப்பாது மாணாக்கள் பிழைக்கவென்று
வாட்டமுடன் திருநீறு பாஷாணந்தான்
வளமுடனே தானெடுப்பாய் புண்ணியாகேள்
தாட்டிகமாய் வீரமது சரிநேரொக்க
தற்பரனே வாறுவகை ஜெயநீர்கூட்டே. 651

கூட்டியே தானரைப்பாய் மெழுகுபோலே
குறிப்புடனே துரிசிக்கி வங்கிகொண்டு
வாட்டமுடன் ரவிதனிலே காயப்போடு
வளமுடனே சீலையது வலுக்கச்செய்து
தீட்டமுடன் புடமதுவும் கோழியாகத்
தீர்க்கமுடன் போட்டிடவே சுண்ணாம்பாகும்
வாட்டமது நேராது வழலைபாகம்
வளம்பெரிய சுன்னமதை சொல்லொண்ணாதே. 652

சொல்லவென்றால் நாவில்லை பாவுமில்லை
சுந்தரனே புலஸ்தியனே மச்சகேந்திரா
புல்லவே சுன்னமதை தானெடுத்துப்
புங்கவனே வெடியுப்புக் கங்கிகொண்டு
நல்லதொரு ரவிதனிலே காயவைத்து
நலமுடனே சீலையது வலுக்கச் செய்து
தெள்ளியதோர் புடமதுவும் கோழியாக
தேற்றமுடன் போடவகை செப்பக்கேளே. 653

செப்பவென்றால் சுன்னமது சொல்லொண்ணாது
ஜெகந்தனிலே யாராலும் கூறலாகா
ஒப்பமுடன் சுன்னமதை தானெடுத்து
வுத்தமனே கெந்தியதுக் கங்கிகொண்டு
தப்பிதங்கள் நேராமல் தார்வண்ணாகேள்
தயாபரனே ரவிதனிலே காயவைத்து
எப்படியும் சீலையது வலுக்கச்செய்து 654
யெழிலான கோழியென்ற புடந்தான் போடே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போடவே புடமாரி யெடுத்துப்பாரு
பொன்னவனே கெந்தியது பற்பமாச்சு
நீடவே பற்பமதை யென்னசொல்வேன்
நிஷ்களங்க மானதொரு சுன்னமப்பா
ஆடவே சுன்னமது சரமண்டலந்தான்
அப்பனே கொள்ளுதற்கு வகைதான்கூர்வேன்
சாடவே பற்பமது தேனிலுண்ண
சாங்கமுடன் ரோகமது செப்பக்கேளே. 655

செப்பவென்றால் குன்றியது காலைமாலை
செய்பாகங் குறையாம லுண்டபேர்க்கு
ஒப்பமுடன் பாண்டு காரோகம்போகும்
வுத்தமனே சில்விஷங்கள் மகோதரங்கள்
தப்பிதங்கள் நேராது துய்யபாலா
தாரணியில் வெகுரோகம் சயரோகந்தான்
எப்படியு மீளைமுதல் சுவாசகாசம்
யெழிலுடனே தேகம்விட்டு ஓடுந்தானே. 656

தானான கேசரமாம் கெவுனியாவாய்
தற்பரனே நீயுமொரு சித்தனாவாய்
கோனான குருபரனே யிந்தபற்பம்
குவலயத்தி லாரேனும் செய்வாருண்டோ
மானான கருமிகளு மாண்பரப்பா
மதிக்கவொண்ணா மானிடர்க ளதீதமப்பா
தேனான மதியமுர்தங் கொண்டபேர்கள்
தெளிவுடனே செய்வார்க ளுண்மைதானே. 657

## கோவர்த்தன கிரிவளப்பம்

உண்மையா மின்னமொரு மார்க்கஞ்சொல்வே
னுத்தமனே புலஸ்தியனே புண்ணியவானே
தண்மையா முலகபதி யானுஞ்சென்று
தகைமைபெற மலையோரம் வந்தேனங்கே
வண்மையாங் கோவர்த்தன கிரிமேலப்பா
வளமுடனே நின்றங்கே மயக்கங்கொண்டேன்
உண்மையாஞ் சுனையருகே வடியேன்றானு
முத்தமனே மதிகலங்கி நின்றிட்டேனே. 658

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நின்றேனே புலஸ்தியனே மச்சகேந்திரா
நித்திலங்கும் பொன்னவனே யென்றனைத்தான்
தென்றிசையாம் கோவர்த்தன கிரியிலப்பா
தேற்றமுட னாயிரம்பே ரிடிகள்தானும்
வென்றிடவே யருகில்வந்து வளப்பங்கண்டு
வேதாந்தம் தாமுரைத்தார் கோடிநூல்கள்
அன்றெரிந்த சுந்தரனார் கிருபையாலே
அய்யனே சுனைக்குள்ளே சென்றேன்பாரே. 659

பார்த்திடவே கோவர்த்தன கிரிமலையிலப்பா
பளிங்குமா மண்டபந்தான் மூடலாகி
தீர்த்தமுடன் தடாகமும் பெரியகுண்ணும்
திறமான கற்பாறை யங்கேகண்டேன்
மூர்த்தமாம் தாப்பாளும் சங்கிலிதானாகும்
முற்பிறமும் பிற்புறமு மூடிகாட்டும்
சேர்த்துமே தாள்திறக்கத் துறவுகொண்டு
செம்மலுடன் வாள்பேரும் வந்திட்டாரே. 660

வந்தாரே கரியமலை சித்துதாமும்
வளம்பெரிய காவலர்க ளனேகம்பேர்கள்
சொந்தமுட னடியேனைக் கண்டுமேதான்
சுந்தரனே யாரென்று வினவிக்கேட்க
அந்தமுள்ள வசுவனியார் சீடனென்றேன்
அன்புடனே சிரங்குனிந்து யாசீர்மித்தேன்
இந்தவனந் தனிலேகி சீஷபாதா
யெழிலுடனே வந்தவகை கூறென்றாரே. 661

கூறுமென்று சொல்லுகையி லடியேன்றானும்
குறிப்புடனே கிரிவளப்பம் காணவந்தேன்
மாறுபடா சமாதியது மண்டபந்தான்
மகத்தான பளிங்குமா மண்டபத்தை
ஆறுதலம் பார்ப்பதற்கு வடியேன்றானும்
அன்புடனே காண்பதற்கு மேலேசென்றேன்
வீறுடைய ரிடியாரைக் காணவென்று
விருப்பமுடன் வந்தேனென் றிறங்கினேனே. 662

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

இறங்கியே நமஸ்கார மஞ்சலித்து
யெழிலுடனே கண்ணோக்கி ரிடியைக்கண்டேன்
உறக்கமுள்ள யடியேனுக் குபதேசித்து
வுற்றமனு வுத்தாரம் விடையுந்தந்து
திறமுடனே சமாதிமுக மிருந்தநூல்கள்
தீர்க்கமுட னெந்தனுக்கு காண்பித்தார்கள்
அறமுடனே தரிசனையும் கண்டுயேகி
அப்பனே வூர்புறமாய் வந்திட்டேனே. 663

வந்தவழி புலஸ்தியனே புண்ணியபாலா
வளமுடனே சென்றல்லோ போவாயானால்
தந்திரமாய் யானுரைத்த மொழிகள்போலே
சாதகமாய் மேலேறி தண்மையோடும்
நிபந்தனைக ளில்லாமல் துய்யபாலா
நீதியுடன் போயங்கே வருளும்பெற்று
அந்தமுடன் வருவதுவே புத்தியோகம்
அப்பனே யுபதேசம் காண்பீர்தானே. 664

## சதுரகிரியில் இடைக்காட்டாருக்கும் பாம்பாட்டிக்கும் உபதேசம்

தானான புலஸ்தியனே தம்பிரானே
தண்மையுள்ள பூபாலா புகல்வேனப்பா
கோனான மகமேரே குமுதவானே
குணமுள்ள புஷ்பமக மேருவேகேள்
பானான விடைக்காடார் சித்துதானும்
பாலனாம் பாம்பாட்டி சித்துதாமும்
மானான மகதேவர் தேவர்பாதம்
மகத்தான கௌசிகமா முனிகண்டாரே. 665

கண்டதொரு பாம்பாட்டி சித்துதானும்
கருவான யிடைக்காடர் தானுமங்கே
அண்டர்தொழும் கௌசிகமா முனியைக்கண்டு
அடிபணிந்து நமஸ்காரம் செய்தாரங்கே
தெண்டமது செய்ததொரு சித்தர்தம்மை
தேடியே வந்ததொரு காதையென்ன
விண்டிடவே வுபதேசம் சாபம்நீக்கி
வித்தகனே வரந்தாரு மென்றிட்டாரே. 666

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized by Siddhanta eGangotri Gyaan Kosha

இட்டதொரு [illegible] தானும்பார்த்து
 யெழிலுடனே சாபமது நிவர்த்திசெய்து
பட்டமரம் துளுத்ததொரு கதையைப்போல
 பாங்குடனே யுபதேச மருளுந்தந்து
சட்டமுடன் மலையருகில் போவதற்கு
 சாங்கமுடன் வுத்தாரம் பெற்றுக்கொண்டு
திட்டமுட னாலமரம் பொந்திலப்பா
 தீர்க்கமுடன் யோகமது செய்தார்பாரே. 667

பாரப்பா இடைக்காட்டு நாயன்றானும்
 பாருலகில் வெகுகால மிருந்தசித்து
ஆரப்பா அவரைப்போல் விருட்சந்தன்னி
 லாரேனும் சமாதிமுக மிருந்ததில்லை
சாரப்பா வெகுகோடி காலமப்பா
 சாங்கமுடன் தவநிலையி லிருந்துகொண்டு
காரப்பா கோனார்க ளிரண்டுசீஷர்
 காசினியி லிருந்துமே பூசித்தாரே. 668

பூசித்து நெடுங்காலம் தொண்டுசெய்து
 புங்கமுடன் வனேகநூல் பாடிவைத்தார்
ஆசித்து குருக்கிடையும் கருக்கிடையுமாக
 அப்பனே வெகுநூல்க ளறைந்தாரப்பா
வாசித்து நூலதனைக் கண்டுமேதான்
 வளமுடனே யோகநிலை செய்துகொண்டு
நேசித்து சித்துமுகம் நிலையைப்பற்றி
 நீதியுடன் கலியுகத்தி லிருந்தார்தாமே. 669

இருந்துமே பாம்பாட்டி சித்துதாமும்
 யெழிலுடனே வனேகநூல் செய்துகொண்டு
பொருந்தவே மரப்பொத்தில் சமாதியாகி
 பொங்கமுட னுபதேச வருளினாலே
திருந்தவே சீடர்களுக் காட்சியோடு
 தீர்க்கமுடன் ஞானப்பா லருளுந்தந்து
வருந்தியே வுபதேச வுண்மைகூறி
 வாகுடனே மரப்பொந்தி லிருந்திட்டாரே. 670

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

இட்டபின்பு மண்மேடு [illegible]
யெழிலான புத்ததுவும் சமாதியாக
திட்டமுடன் சாத்திரமும் பாத்திரமுமாக
திறமையுடன் கண்மூடி சமாதிதன்னை
சட்டமுடன் நெடுநாள்கள் சென்றபோது
சதுரான கலியுகமாம் பிரளயத்தில்
அட்டதிசை தான்பிரண்டு வெள்ளமோடி
அப்பனே புத்ததுவு மிதக்கலாச்சே. 671

மிதந்துமே சமாதியுடன் சாத்திரந்தான்
மிக்கான சதுரகிரி யடிவாரத்தில்
பதமுடனே சமரதிமுகங் கொண்டேயேகி
பாங்குபெற கோடியுக மிருக்கவென்று
சதமுடனே சுந்தரனார் யோகங்கொண்டு
சுத்தமுடன் மலைதனிலே யிருக்கும்போது
சிதம்பரமுங் கண்டுமல்லோ விடைக்காடார்தான்
சிறப்புடனே பாம்பாட்டி பதங்கண்டாரே. 672

கண்டாரே விடைக்காடார் பாம்பாட்டிதம்மை
பட்சமுட னவர்பாதம் கரங்குவித்து
தெண்டமது நமஸ்கார மிகவுங்கொண்டு
தேற்றமுடன் சித்துதமைக் கண்டாரப்பா
அண்டர்பிரா னருளினால் சித்துதானும்
அன்புடனே யிடைக்காடார் கொண்டணைத்து
புண்டரீக மானதொரு விடைக்கடார்க்கும்
பொங்கமுடன் சமாதிக்கு விடைதந்தாரே. 673

தந்தாரே விடைக்காடார் சமாதிகொண்டு
தாரணியில் நெடுங்கால மிருந்தசித்து
சிந்தனையாய் லோகபதி யாசைநீங்கி
சிற்பரனை யெந்நாளு மனதிலுன்னி
பந்தமுள்ள சீஷவர்க்கந் தனைமறந்து
பாருலகில் நிஷ்டையது சமாதிகொண்டு
விந்தையுடன் நெடுங்கால மறிந்தசித்து
விதியறிந்த பதமுடைய சித்துமாச்சே. 674

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சித்தான சித்துமுனி பெரியோரப்பா
பேருலகில் நெடுநாளா யிருந்தபூபன்
நித்தியமும் கடவுளது பதாம்புயத்தை
நீணிலத்தில் மணந்தனிலே வுறுதிகொண்டு
பத்தியுடன் பதங்கண்டு நேமம்பூண்டு
பாருலகை மனந்தனிலே கடந்தசித்து
முத்தியுடன் சமாதிக்கு யேகவென்று
மூர்க்கமுடன் மலையோரஞ் சென்றார்காணே. 675

சென்றாரே யின்னமொரு மாற்கஞ்சொல்வேன்
செங்கமலக் கண்ணானே கன்னியவானே
தென்றிசையில் கடலோரம் சென்றாயானால்
தென்முகவை பதியங்கே மண்டபந்தான்
குன்றியது குன்னருகே குகையுமுண்டு
கொற்றவனே குத்துக்கல் லடையாளந்தான்
வென்றிடவே சங்கிலியா முனிதானப்பா
வீரான காத்தவனும் காவல்தானே. 676

காவலாம் கறுப்பண்ணன் காவலப்பா
காளியுட காவல்களு மங்கேயுண்டு
ஆவலுட னப்புரத்தே சென்றாயானால்
அங்ஙனவே கோயில்குளம் தடாகமுண்டு
சேவல்செய்து வப்புரத்தேக் கண்டுயேகி
செம்மலுடன் பின்பக்கம் போவாயானால்
பாவமது கர்மமது நீங்கும்ஸ்தானம்
பாலகனே குத்துக்கல் காண்பீர்தாமே. 677

காணவே யுமைக்கண்ட கறுப்பனப்பா
காவலனே யாரென்று வினவிக்கேட்பான்
தோணவே யசுவனியார் பேரனப்பா
தொல்லுலகி லகஸ்தியனார் சீஷனென்பாய்
வேணபடி யுந்தமக்கு வுபசாரங்கள்
வெற்றியுடன் றாடைக்கும் புண்ணியபூபா
மாணமருங் கல்வியுள்ள புலஸ்தியனென்று
மதிப்புடனே யுட்செல்ல சொல்லுவாரே. 678

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சொல்லவே புலஸ்தியனே சுந்தராகேள்
சொற்பழுது நேராமல் துய்யபாலா
வெல்லவே குத்துக்கல் திறக்கும்பாரு
வெட்டவெளி யாகவல்லோ தோற்றும்பாரு
புல்லவே படமதுவுங் கொண்டாயானால்
புட்கரனே தைரியமாய் செல்வாயப்பா
கல்லான வாவுடையார் கோயிலுண்டு
கற்பகமும் விருட்சமது பார்க்கலாமே. 679

பார்க்கவே வாயக்கால் மண்டபந்தான்
பாங்குடனே பூமிக்குள் சுரங்கமுண்டு
ஏர்க்கவே சுரங்கமது வுள்ளேசென்றால்
யெழிலான வாசனந்தான் நெடுங்கம்பியப்பா
தீர்க்கமுடன் ஸ்தம்பமது யடிவாரத்தில்
திரேதாயி னுகத்திலப்பா சித்துதாமும்
பூர்க்கவே பிரணவத்தை கையிலேந்தி
புகழுடனே சமாதிதனி லிருப்பார்காணே. 680

இருக்குமது சமாதியது கண்டபோதே
யெழிலான சிற்சொருப சித்துதானும்
பொருத்தமுடன் கண்திறந்து வார்த்தைகூறி
பொங்கமுடன் யுமைக்கண்டு வாசீர்மிப்பார்
திருத்தமுடன் கைலாகு தான்கொடுத்து
தீர்க்கமுட னாரென்று வினவிக்கேட்க
வருத்தமது நேராமல் துய்யபாலா
வணக்கமுட னசுவனியா ரென்றுசெப்பே. 681

செப்பவே யசுவனியா பேரனென்றும்
செயலான வகஸ்தியனார் சீடனென்றும்
ஒப்பமுடன் சமாதிமுகம் காணவென்றும்
ஓகோகோ நாதாக்க ளுரைப்புங்கேட்டு
தப்பிதங்கள் நேரா மலடியேன்றானும்
தாள்பதமும் கண்டுமிக பதமடைய
மெப்புடனே யிவ்விடத்தில் வந்தேனென்று
மேன்மையுடன் கைதொழுது போற்றுவீரே. 682

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போற்றியே நிற்கையிலே யுத்தமக்குப்
பொங்கமுடன் தனமிருக்கும் ஸ்தானஞ்சொல்லி
ஆற்றலுடன் தனமீய்ந்து நூல்கள்தந்து
அப்பனே காயாதி குளிகைதந்து
தோற்றலுடன் செந்தூரக் காடுஞ்சொல்லி
துப்புரவாய் ஞானோபதேசம்தன்னை
மாற்றமது நேராம லுந்தமக்கு
மதிப்புடனே வழிதடமும் காண்பிப்பாரே. 683

கண்டுமே யவரிடத்தில் காயம்பூண்டு
களிப்புடனே வந்தபின்னு முந்தமக்கு
விண்டதொரு பொருள்போக மற்றையாவும்
விபரமுடன் போதிக்கு மிடமுஞ்சொல்வேன்
பண்டிதமு மின்னமது பலிக்கலாகும்
பாலகனே நீயுமொரு வாலையாவாய்
தெண்டமது செய்வார்க ளுன்னையப்பா
தேசத்தில் நீயுமொரு சித்தாவாயே. 684

சித்தான சித்துமொரு யின்னஞ்சொல்வேன்
சிதாபாசக் களையகல சீஷாகேண்மோ
முத்தான வழிபெறவே முடிமன்னாகேள்
முயற்சிபெற யுந்தமக்கு ஞானபோதம்
பத்தியுடன் பெறுவதற்கு பாக்கியவானே
பட்சமுடன் யாமுரைப்போம் புலஸ்தியாகேள்
நித்தமுமே மனோன்மணியைப் பணிந்துபோற்று
நிஷ்களங்க மாகவேதான் பதமீவாரே. 685

## சதுரகிரி மேற்கே சமாதி

ஈயவே யின்னமொரு மார்க்கங்கூர்வேன்
யெழிலான சதுரகிரி மேற்கேயப்பா
வெய்யபுகழ் வால்நாடு விந்தைநாடு
வேட்கமுடன் ரிடிகள்சித்தர் மிகுந்தநாடு
வையமது தான்புகழு மீளைநாடு
வாருடனே சமாதிமுகங் கொள்ளுநாடு
துய்யநல்ல பூநீறு விளையும்நாடு
துப்புரவாய் வனாந்திரமு மங்குண்டாமே. 686

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

உண்டான பதிதனிலே செல்வாயப்பா
வுத்தமனே கடலோரம் தென்றல்வீசும்
அண்டமுனி ராட்சதர்க ளிறங்கும்நாடு
அப்பனே வதிலுள்ள மகிமைகூர்வேன்
தொண்டர்களு மங்கிருப்பார் சித்துகோடி
தோராம லவ்வனத்தை செல்வாயப்பா
விண்டபொருள் மற்றதெல்லாம் விள்ளலாகும்
வேதாந்தத் தாயாருந் துணைசெய்வாரே. 687

செய்யவே புலஸ்தியனே புண்ணியாகேள்
செப்புகிறேன் கடலோரம் நதிதானுண்டு
வையபுகழ் மண்டபந்தா னாயக்காலாம்
வளம்பெரிய மண்டபத்தி னடுவதாக
துய்யபுகழ் சித்தொருவ ரங்கிருப்பார்
துரைராச சுந்தரனே புகல்வேனப்பா
மெய்யுடனே யுந்தனைத்தான் கண்டபோதே
மேன்மையுடன் கொண்டணைப்பார்
புண்ணியவானே 688

புண்ணியனே துரைராச சுந்தராகேள்
புகலரிய நாதரவ ருந்தமக்கு
நண்ணமுடன் பாபமது நிவர்த்திசெய்து
நாதாந்தப் பொருளனைத்து முபதேசிப்பார்
தண்மையுடன் வுபதேசம் பெற்றுமங்கே
தயவுடனே நீருந்தான் வுள்ளேசென்றால்
உண்மையாம் (சித்தொருவ ரங்கேயுண்டு
வுத்தமனே திரேதாயின் சித்துதாமே.) 689

சித்தான பெரியோர்தான் தேவரிடியப்பா
சிறப்பான பிரமமுனி ரிடிதானங்கே
பத்தியுடன் திரேதாயி னுகத்திலப்பா
பாங்குடனே பிரளயங்கள் நேர்ந்தபோது
முத்திபெற மனங்கொண்டு கிலேசம்விட்டு
முயற்சியுடன் சமாதிமுக மிருந்தசித்து
புத்தியுட னவர்பாதம் தொழுதுபோற்றிப்
புண்ணியனே வரமதுவும் பெறுவீர்தாமே. 690

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தாமான புலஸ்தியனே தம்பிரானே
தயவுட னுந்தமக்கு யெல்லாம்வாய்க்கும்
கோமானே விதிகரசம் பொருளெல்லாந்தான்
கொற்றவனே யுபதேசம் பெறுவாயப்பா
சீமானே திரேதாயி னுகத்திலுள்ள
சிறப்பான நாதாக்கள் சூட்சமெல்லாம்
நாமமுடன் றானுரைத்து துய்யபாலா
நாட்டமுடன் காயாதி தருகுவாரே. 691

தருவாரே சித்துமுனி ரிடியாரப்பா
தண்மைபெற வுலகுபதி சேதியெல்லாம்
குருவாகத் தானிருந்து வுபதேசித்து
குவலயத்தில் நெடுங்கால மிருப்பதற்கு
அருளான பொருளீவார் அன்புள்ளானே
யவர்பாதந் திருவருளு மருளுங்கொண்டு
திருவான மனோன்மணியாள் கிருபையாலே
தீர்க்கமுட னுபதேசங் கொள்ளுவாரே. 692

## சதுரகிரிதடாகப் பெருமை

கொள்ளவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
கொற்றவனே புலஸ்தியனே குணமுள்ளானே
எள்ளளவும் பிசகாது யெந்தன்வாக்கு
யெழிலான வசுவனியார் சொன்னநீதி
உள்ளபடி யாமறிந்த மட்டுமப்பா
உத்தமனே கண்டவரை கூறுகின்றேன்
தெள்ளமுர்த மானதொரு தடாகமப்பா
தேற்றமுடன் தேவதா குளமுமாமே. 693

குளமான பொய்கையது யென்னசொல்வேன்
குறிப்பான வெண்டாமரை படர்ந்திருக்கும்
தளமுடனே யொருபக்கம் செந்தாமரையாம்
தாக்குடனே படர்ந்திருக்கும் தடாகமப்பா
வளமான வல்லியுங் கொட்டியோடு
வாகமுட னொருபக்கம் படர்ந்திருக்கும்
நலமுடனே மத்திபத்தி வாயக்காலாம்
நாட்டமுடன் மண்டபந்தான் காணுவீரே. 694

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணலாம் துரைராச சுந்தராகேள்
கைலாச மண்டபம்போல் காண்பீரப்பா
வாணர்முதல் மாயாதி ரிடிகளெல்லாம்
வந்திறங்கும் பொய்கையது வளமோமெத்த
நாணமுடன் தேவாதி ரிடிகளப்பா
நான்குபுறம் காவலுண்டு நாதர்கூத்து
பாணம்போல் சென்னிறமாம் கொக்கேயாகும்
பாலகனே யெந்நேரம் கீதமாச்சே. 695

கீதமாம் புகமுடனே வன்னந்தானும்
பேசுகின்ற கிள்ளையது கறுப்பேயாகும்
சாதமுடன் தேவதா கன்னிமார்கள்
சதாகாலம் பட்சிக்கு யிறைதானீவார்
போதமது சாதனங்க ளேதென்றாக்கால்
பொங்கமுடன் ஞானோப தேசவார்த்தை
நீதமுடன் யெப்போதும் ரிடிகளப்பா
நிஷ்களங்க மாகவேதான் போதிப்பாரே. 696

போதிக்க பேதிமுதல் ஞானங்கொண்டு
பொங்கமுடன் சதாநித்தம் ரிடியாருக்கு
நீதியுட னுபசரணை வாத்தியகீதம்
நிஷ்களங்க மாகவல்லோ சதாநித்தந்தான்
ஆதி கைலயங்கிரியில் நடந்தமார்க்க
மதுபோலே சித்தர்கட்கு வாய்க்கும்ஸ்தானம்
சாதியாம் குயிலினமு மயிலினமுமப்பா
சாங்கமுடன் துதியோடும் பாடுந்தானே. 697

பாடுமே ஞானோப தேசங்கூறும்
பான்மையுட னுபதேசம் வாக்குரைக்கும்
தேடுமே சித்தர்பதங் காணவென்று
தேற்றமுட னஞ்சலிகள் மிகவுஞ்செய்து
கூடுமே பிரணவத்தை யுச்சரிக்கும்
குவலயத்தி லெண்ணாலும் பாருமப்பா
ஆடுமே பட்சியது கண்டதல்லால்
அப்பனே கீதமது கேளார்தானே. 698

CC-0 Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேளாமற் போனதுவு வெகுகோடிமாண்பர்
கெடியான மர்மங்கள் காணமாட்டார்
மீளாத கர்மிகட்கு வாய்க்காதப்பா
மிக்கவும் புண்ணியத்தை யடைந்தமாண்பர்
ஆளாத மன்னவர்க ளாருங்காணார்
அவனியெலா மாண்டவரும் காணவில்லை
பாளான தேகமது நிலைகாணார்கள்
பாருலகிற் புண்ணியற்கு கிட்டுந்தானே. 699

கிட்டுமே யிந்தநூல் பெருநூலப்பா
கெடியான நூலிதுதான் சொல்லொண்ணாது
அட்டதிசை திரிந்தாலும் மிந்தனூல்போ
லாருந்தான் கூறவில்லை யிந்தமார்க்கம்
சட்டமுடன் பன்னீரா யிரந்தானப்பா
சதுர்யுகமு மீதிலடக்கம் சாற்றொணாது
திட்டமுட னசுவனியார் சொன்னநீதி
பூவுலகில் பொய்க்காது மெய்தான்பாரே. 700

## நீலகண்ட மாமுனி கண்ணனுக்கு உபதேசித்த கரிபரிலேகியம் சித்து காண்க

சொல்லவே யின்னமொரு மார்க்கங்கேளு
சுந்தரனே புலஸ்தியனே சுகுணமாரா
வெல்லவே கண்ணனுக் குபதேசித்த
மேன்மையுள்ள குளிகையது லேகியந்தான்
நல்லதொரு பாகமது யென்னசொல்வேன்
நலமான ராஜாதி ராஜமன்னர்
புல்லவே செய்கின்ற பாகமன்னர்
புவிதனிலே மற்றோர்கள் செய்யாரன்றே. 701

அன்றான லேபனமாம் குளிகையப்பா
அப்பனே கைபாகத் தவரிடாது
வென்றிடவே கரிபுரியும் புணருங்காலம்
வெட்டவெளி கானகத்தில் காத்திருந்து
குன்றான மலையேறிக் கண்டபோது
குறிப்புடனே வாளாலே லிங்கந்தன்னை
அன்றுமே துண்டமதாய் கோசமப்பா
அப்பனே கருணையது கொண்டிடாயே. 702

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொண்டுமே பரிகோசம் கரிகோசந்தான்
கொற்றவனே சிறுதுண்டாய்ப் பருமனாக
கண்டிதமாய் ரவிதனிலே காயவைத்து
கருத்துடனே சூரணமாய் செய்வாயப்பா
பண்டிதங்கள் சொல்லியதோர் முறைபாடாக
பாங்குடனே ரவியில்வைத்து சூரணித்து
வண்டினங்க ளணுகாமல் பாதுகாத்து
மார்க்கமுடன் சூரணத்தைப் பதனம்பண்ணே. 703

பதமுடனே சரக்குவகை கற்கமப்பா
பளிங்குடனே சேர்ப்பதற்கு பாகம்சொல்வேன்
சதமான கற்கவகை நூறுகூட்டு
தண்மைபெறும் சரக்குகளைச் சாற்றுறேன்பார்
கதமான சாதிக்காய் சாதிபத்திரி
கருவான பட்டையுடன் கிராம்புதானும்
மிதமான கார்போகம் சிங்கியப்பா
மிக்கான தான்றியுடன் கடுக்காய்கூட்டே. 704

கடுக்காயும் நெல்லியுடன் சுக்குதானும்
கருவான மிளகுடனே திப்பிலியப்பா
ஒடுக்கமாம் தேற்றாவின் வித்துதானும்
ஓகோகோ நற்சீரம் காட்டுச்சீரம்
அடுக்கான தாளிசமாம் பத்திரிதானும்
அப்பனே குரோசானி யோமமப்பா
இடுக்கான வரத்தையுடன் யேலந்தானும்
யெழிலான வதிமதுரம் படையுஞ்சேரே. 703

சேரப்பா ரேவலென்ற சின்னிதானும்
செம்மலுடன் திப்பிலியாங் கட்டையப்பா
கூரப்பா வக்கிரா காரந்தானும்
குறிப்பான பூப்பனைக் கிழங்குமாகும்
தீரப்பா வாலுழுவை தானுங்கூட்டி
திறமான கஞ்சாவின் வித்துசேரு
நேரப்பா யேலமுடன் குராசானியப்பா
நெடிதான சேரயுடனே விளங்கம்கூட்டே. 706

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கூட்டவே கொடிவேலி யமுக்கராவும்
குணமான சிவதையுடன் முத்தக்காசு
நீட்டமுள்ள சதாவேரி பாதிரிதானும்
நிஷ்களங்க மானதொரு வாகையாகும்
வாட்டமுள்ள பெருங்கிழங்கு தக்கோலந்தான்
வளமான முந்திரிகை பேரிச்சந்தான்
தாட்டிகமாந் திராட்சமுடன் சீந்திலாகும்
தண்மையுடன் கார்போக மாசிக்காயே. 707

காயான தேசாவர மெட்டியாகும்
கனிவசம்பு பரங்கியுட பட்டைதானும்
தாயான கச்சோலம் வெள்ளரிதானாகும்
தண்மையுள்ள மதன்பூவும் மராட்டியமொக்கு
பேயான சுரைவிரையும் கொம்மட்டிதானும்
பெரிதான மாதுளையின் வித்துமாகும்
மாயாத துளசியின்றன் வித்துமாகும்
மயக்கமுள்ள மத்தங்காய் வித்துசேரே. 708

வித்தான வித்துவுடன் வரசன்வித்து
விழுதியுட னாலத்தின் வித்தேயாகும்
சத்தான வத்தியின்றன் வித்தேயாகும்
சாங்கமுடன் பாளையுட வித்தேயாகும்
முத்தான வெள்ளி லோத்திரமுமாகும்
முயற்சியாம் சூரியனார் வித்தேயாகும்
மத்தமா மவுரியது வித்தேயாகும்
மகத்தான செம்பாளை வித்துமாமே. 709

பாளையுடன் செவ்வல்லி விரையேயாகும்
பாங்கான முள்ளங்கி விரையேயாகும்
தாளையுட மூலமது கிழங்கேயாகும்
தாக்கான நிலப்பனையின் கிழங்கேயாகும்
காளைபா மருளுமன் வித்தேயாகும்
கருவான கருவாலின் வித்தேயாகும்
வேளையாம் நாய்வேளை விதையேயாகும்
வேகமுள்ள புரசைவிரை தானுங்கூட்டே. 710

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கூட்டியதோர் வித்துடனே கொத்தமல்லி
கூரான வாதண்டை வித்துமாகும்
நாட்டிலே தான்வளரும் நங்கைவித்து
நலமான முருங்கையின்றன் விதையுமாகும்
வாட்டமுள்ள வாவரை விதையுமாகும்
வளமான குடசத்தின் பாளையப்பா
நீட்டமுள்ள யைவிரலின் விதையேயாகும்
நெடிதான கண்டங் கத்திரியுமாமே. 711

ஆமப்பா யைவிரலி விரையேயாகும்
அப்பனே கருங்கோவை விரையேயாகும்
நாமப்பா சொன்னபடி தகரைகூட்டு
நலமான குறிஞ்சாவின் விரையுஞ்சேரு
தாமப்பா விரையுடனே நெருஞ்சிவித்து
தாக்கான பெரியகாஞ் சோரியப்பா
போமப்பா பூவரசன் விரையேயாகும்
பொலிவான மதனப்பூ விரையுஞ்சேரே. 712

விரையான பேதானா செம்புளிச்சி
வீரான கொக்கு மந்தாரைவித்து
குரையாமல் சோமனென்ற விரையேயாகும்
கூரான பாலைவிரை குரும்பைவித்து
சுரைபோல படர்ந்திருக்கும் சூரிவித்து
சுத்தமுள்ள செங்கையான் விரையேயாகும்
நிரையான கடுங்காலி நிமிளைவித்து
நெரியான செம்பூரான் விரையுமாமே. 713

செம்பான விரையுடனே சிறுபூலாவித்து
சிவப்பான திருமாலின் விரையேயாகும்
அம்புவிழி லாருந்தான் காணாவித்து
அழிஞ்சியது யேரலது விரையுமாகும்
சம்புடைய நாவலென்ற விரையுமாகும்
சதாவேரி வித்துடனே கசகசாவும்
கும்பலாய் தான்மிதக்கும் சக்கரவித்து
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.
கூரான கிட்டியுடன் கொட்டியாமே. 714

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொட்டியுடன் திருக்கொன்றை விரையுமாகும்
குறிப்பான சடாமாஞ்சில் விரைதானாகும்
திட்டமுள்ள கவுதும்பை வித்தேயாகும்
தீர்க்கமுள்ள ரோசாவின் வித்தேயாகும்
பட்டமரம் துளுத்ததொரு யாவைவித்து
பழுபாகல் வித்துடனே காட்டுப்பாகல்
குட்டமது தானீங்கும் புங்கன்வித்து
கூரான சண்பகத்தின் விரையுமாமே. 715

விரையான வேலனிட பிசினுமாகும்
வித்தகனே விளாவினிட பிசினியாகும்
கரையான கருவேலம் பிசினியாகும்
கருவான செங்குவளை பிசினுமாகும்
புரையாத கூவிளத்தின் பிசினுமாகும்
புங்கமுடன் பிசின்தானும் விராலியப்பா
கரையான முருங்கையுட பிசினுமாகும்
கருவான மாமரத்தின் பிசினுதானே. 716

தானான பலாவினிட பிசினுமாகும்
தாக்கான வேங்கையிட பிசினுமாகும்
கோனான முந்திரியின் பிசினுமாகும்
கொற்றவனே செம்பருத்திப் பிசினுமாகும்
பானான கரும்பினிட பிசினுமாகும்
பளிங்கான வரசினிட பிசினுமாகும்
மானான கோவைய்யிட பிசினுமாகு
மகத்தான சண்பகத்தின் பிசினுமாமே. 717

பிசினுடனே வெட்பாலை பிசினியாகும்
பிலமான தேக்கினிட பிசனுமாகும்
மசியான யாவாரைப் பிசினுமாகும்
மன்னவனே பனையினுட பிசினுமாகும்
வசியமாம் சோதியென்ற மரந்தானப்பா
மார்க்கமுடன் பிசினதுவும் கூடச்சேரு
கசியாத செம்மரத்தின் பிசினுமாகும் 718
காவலனே [illegible] பிசின்தான் கொள்ளே.

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளவே மந்தாரைப் பிசினுமாகும்
கோபால சுந்தரனே யின்னங்கூர்வேன்
எள்ளளவும் பிசகாது வசுவனியார்வாக்கு
யெழிலுடனே புட்பவகை சாற்றக்கேளீர்
தெள்ளமிர்த மானதொரு வலரியப்பா
தேற்றகரு வூமப் புட்பஞ்சேரு
தள்ளவே போகாது குமரிப்பூவாம்
தண்மையுடன் களாப்பூவு மந்தாரையாமே. 719

மந்தமெனும் புட்பமப்பா கருநீலந்தான்
மகத்தான பூவரசன் புட்பமப்பா
அந்தமுள்ள மல்லிகையுங் குடமல்லியப்பா
அப்பனே செந்தாழை வெண்டாழைதானும்
விந்தையாம் தாமரையின் புட்பமப்பா
வீரான மரமல்லி புட்பந்தானும்
சொந்தமுடன் பூப்பனையின் புட்பமப்பா
தோராத மனோரஞ்சி புட்பமாமே. 720

புட்பமாம் பலபேத புட்பத்தாலே
புங்கவனே சகலசத்து நேருமப்பா
நுட்பமுடன் கண்டறிந்து சேர்த்தலல்லோ
நுணுக்கமாம் லேபனக் குளிகையாகும்
திட்டமுடன் புட்பவகை கூறினோம்யாம்
திறமையுடன் கனிவகைகள் பகரக்கேளீர்
சட்டமுடன் கொடிமுந்திரி திராட்சியப்பா
சாங்கமுடன் செவ்வாழைக் கனியுஞ்சேரே. 721

கனியான மாம்பழத்தின் ரசமுமப்பா
கருத்துடனே கதலியிட தேனுங்கூட்டு
பனியான மலைதனிலே விளையுமப்பா
பாலகனே தக்காளி ரசமுந்தானும்
தொனியான பேரீச்சு ரசமுமப்பா
தோற்றமுடன் கரும்பினிட ரசமுமப்பா
தனியான கிச்சிலியின் ரசமுமப்பா
தண்மையுடன் சேர்த்திடவே குளிகையாமே. 722

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

குளிகையா மூலவகை சேர்க்கநன்று
குருபரனே நன்னாரி மூலமப்பா
களியான நிலப்பனையின் மூலமப்பா
காயாத பூமிசர்க் கரையின்மூலம்
வளியான சித்திரமா மூலமப்பா
வகையுடனே கற்பகத்தின் மூலந்தானும்
பளியான கூவிளத்தின் வேர்தானப்பா
பாலகனே மிளகினிட வேருதானே. 723

தானான வேருடனே யாவர்ரையப்பா
தாக்கான சண்பகத்தின் வேர்தானப்பா
கோனான வலரியிட வேர்தானப்பா
கொற்றவனே பாளையிட வேர்தானப்பா
பானான் செம்பருத்தி வேர்தானப்பா
பாலகனே கஸ்தூரி வேருமாகும்
மானான வேர்வகைக ளாகிரிதானாகு
மகத்தான கோரோசனை தானுங்கூட்டே. 724

கூட்டவே புனுகுடனே பச்சைப்பூரம்
குறிப்பாக கஸ்தூரி தானுஞ்சேரு
நாட்டியதோர் குங்குமாம் சவ்வாதப்பா
நலமுடனே பன்னீரும் கூடச்சேரு
ஆட்டவே சரக்கெல்லா மொக்கசேர்க்க
அப்பனே தாதுவகை செப்பக்கேளீர்
பாட்டுநய மறிந்தசித்து சாத்திரங்கள்
பாலகனே தப்பாது முறைசெய்வீரே. 725

முறையான வழிபாடு குணபாடோடு
முயற்சியுட னாமுரைப்போ முதல்வாய்கேளீர்
துறையான கற்கவகை சரக்கெல்லாந்தான்
துப்புரவாய் சூரணித்து வடிதான்கொண்டு
நிறையோடும் சேரதுவாய் முறைதான்கொண்டு
முயற்சியுடன் றானெடுப்பாய் மைந்தாபாரு
குறையாமல் புட்பவகை சேர்தானப்பா
கொற்றவனே தானெடுப்பாய் தருமவானே. 726

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தருமாம் புட்பமதை ரவியுலர்த்தி
தப்பாமல் முறைபாடு வழிபாடோடும்
கருமான மூலமதை சூரணித்துக்
கருவாக ரவியுலர்த்திப் பதனம்பண்ணு
மருமமாம் பிசின்வகையை யிடித்துத்தூளாம்
மார்க்கமுடன் சரக்கதனை ரவியுலர்த்தி
பெரும்படையாம் கனிவகையைச் சாற்பிழிந்து
பின்னாலே சேர்க்குகின்ற வயணங்கேளே. 727

கேளப்பா சீனியது சரிநேரப்பா
கெட்டியுடன் மெழுகுபதம் பாகமாக்கி
ஆளப்பா பாகுதனில் சூரணத்தை
யப்பனே கொட்டியபின் பின்னுங்கேளு
தாளப்பா நேராமல் கரிபரியைதானும்
காவலனே முன்னுரைத்த பாகுதன்னில்
தூளப்பா போட்டபின் புட்பந்தன்னை
துப்புரவாய் மேற்கொண்டு பொதிந்திடாயே. 728

பொதியவே பின்னுரைத்த ரசமார்க்கத்தைப்
பொலிவுடனே விட்டல்லோ பொதியக்கிண்டி
அதிவிநய நெய்தேனும் சரியிற்பாதி
அப்பனே முக்கண்ணின் பால்தான்சேரு
விதிமுறையாய்ப் பாகுபத மாகும்போது
வித்தகனே முன்னுரைத்த வாசந்தன்னை
பதிவுடனே றான்கலந்து கிளரும்போது
பாங்கான மெழுகுபதம் குளிகையாமே. 729

குளிகையா யிடைபாகம் கைபாகந்தான்
குறியுடனே செய்பவனே சித்தனாவான்
பளியதுவும் நேராது குளிகைபாகம்
பாங்குபெற செய்தவனே சித்தனப்பா
வளியான பாகமுடன் குளிகையாக்கு
வரிசைபெற சீசாவிற் பதனம்பண்ணு
தெளிவுடனே பூசைமுகம் நைவேத்தியங்கள்
நேர்த்தியுடன் செய்தவரே சித்தென்பாரே. 730

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

என்பாரே லோகபதி மன்னரெல்லாம்
யெழிலுடனே ராஜபதி செய்வாரப்பா
வன்மையுடன் லேகியத்தை வாலைக்கப்பா
வண்மையுடன் சொர்வையி ரவர்க்குப்பூசை
நன்மைபெற வஞ்சலிகள் பூசைமார்க்கம்
நலம்பெறவே செய்துமே புலஸ்தியாகேள்
துன்மையது நீக்கியேதான் துய்யபாலா
துப்புரவா யருந்துதற்கு யுரைக்கின்றேனே. 731

உரைக்கவே புலஸ்தியனே மன்னாகேண்மோ
வுத்தமனே ராஜாதி கொள்ளும்நேர்மை
சிரையதுவாய் த்ாமிருந்து மண்டலந்தான்
சிறப்புடனே குளிகையது யுண்ணும்போக்கு
நிரை நீங்கி தேகமது கற்றூணாகும்
நீர்க்கமுடன் வாசியது மேல்நோக்காது
வரைதோறும் காணாமல் படிநிதானம்
வளமுடனே யுண்பவனே சித்தனாமே. 732

சித்தனா மண்டலந்தான் கொண்டபேர்க்கு
சிற்பரனே யேழானை பெலனுண்டாகும்
பத்தியுடன் சிவபதத்தைக் காணலாகும்
பாரினிலே ராசாக்கள் செய்யும்பாகம்
வெற்றிபெற மண்டலந்தான் கொள்ளலாகும்
வேதாந்தத் தாய்பதத்தை நெருக்கல்வேண்டும்
புத்தியுடன் பத்தியந்தா னிதற்கோயில்லை
பூபாலா சொல்லுகிறேன் கடுகுண்ணாதே. 733

உண்ணாதே கடுகுபதம் தள்ளல்வேண்டு
முத்தமனே பத்தியந்தான் நண்ணக்கேளீர்
திண்ணலா முசல்வெள்ளாட் டிறைச்சியாகும்
தீர்க்கமுடன் ஊர்க்குருவி யருந்தலாகும்
கன்மையாங் காடை கவுதாரியாகும்
கருவான மானிறைச்சி சேர்க்கலாகும்
எண்ணமுடன் பாலேடு கொள்ளலாகு
மெழிலான பத்தியமீன் கொள்ளலநன்றே. 734

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொள்ளலாம் காயவகையில் முருங்கையாகும்
கொற்றவனே கருணையது விரும்பலாகும்
எள்ளளவும் பிசகாது யிந்தபாகம்
யென்மகனே புலஸ்தியனே யெழில்வல்லோனே
உள்ளபடி பலகோடி சாத்திரத்தி
லொருவருந்தான் கூறவில்லை யிந்தபாகம்
தெள்ளமிர்த மானதொரு பன்னீராயிரந்தான்
தேற்றமுடன் பாடினதோர் பெருநூலாமே. 735

நூலான நூலிதுவின் பாகம்போல
நுணுக்கமுடன் மண்டலந்தான் கொண்டபேர்க்கு
தூலமுட னேழானை பலனுண்டாகும்
துப்புரவாய் சையோக நிலையிலப்பா
பாலான கிருஷ்ணவண்ணன் பாங்கிமாரை
பாவையர்கள் பன்னீரா யிரந்தானப்பா
கோலமுட னனுபவித்தான் கோடிபெண்கள்
கொற்றவனே மகிமைதனைக் கேட்டோம்தானே. 736

கேட்டோமே பூவுலகில் ராசமன்னர்
கெடியான பாகமதை செய்வாரப்பா
வாட்டமுட னிப்பாகம் நிதியுள்ளார்கள்
வண்மைபெற செய்வார்கள் மற்றோர்செய்யார்
தேட்டமுடன் அசுவனியார் சொன்னநீதி
தெளிவாக யுந்தமக்கு வுபதேசித்தேன்
நாட்டமுடன் குளிகைதனைக் கொண்டாலப்பா
நானிலத்தில் வரைகோடி யிருப்பர்தானே. 737

இருக்கவே குளிகையா லனேகஞ்சித்து
யெழில்பெறவே செப்புகிறே னனந்தமாற்கம்
திருக்கமலக் கையாலே கரியிரண்டு
தீர்க்கமுட னிருகரத்தி லேந்தலாகும்
பெருக்கவே நான்றூக்கப் பெலனுண்டாகும்
பேரான வுலகுதனில் மெய்ச்சுவார்கள்
இருக்கமுடன் கற்பகமாம் தருவையப்பா
குணமுடனே யுக்குள்தனி லேந்தலாமே. 738

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

ஏந்தலாம் ஜெகஜால குளிகையென்பார்
Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
யெல்லவரு முனைக்கண்டு யேங்குவார்கள்
காந்தளென்ற பாணமது கரத்திலேந்த
கரமதுவும் வேகாது புலஸ்தியாகேள்
சாந்தமுடன் மானிடர்கள் நூறுபேரை
சாதகமாய் யொருவர்மே லொருவரைத்தான்
காந்தம்போல் தான்றூக்கி நிற்கலாகும்
கன்னவனே யணியணியாய் நிறுத்தலாமே. 739

அணியான மானிடர்க ளொருவர்தன்மேல்
அப்பனே யாள்மேலே யாள்தானப்பா
மணியான நிலைதனிலே நிற்கலாகும்
மகானேர்மை யுந்தனைத்தா னுலகிலுள்ளோர்
கணியான கோகரண சாலமென்பார்
கருவான குளிகையென்று காணமாட்டார்
துணிவான குளிகைதன்னால் கோடிசாலம்
துப்புரவாய் செய்வதற்கு சித்தாவாயே. 740

சித்தான சித்துமகா புருஷனென்று
செகந்தனிலே கீர்த்தியுடன் பேருண்டாகும்
பத்தியுட னுந்தனது பதாம்புயத்தைப்
பாரினிலே மானிடர்கள் துதியேகொள்வார்
சத்தியமாய் நாமுரைத்த குளிகைபாகம்
சற்றேனும் பூவுலகில் பிசகாவண்ணம்
நித்தியமு மனோன்மணியை ஸ்தோத்தரித்து
நீதியுடன் சமாதிமுகம் நண்ணுவீரே. 741

## ஜல ஸ்தம்பனம்

நண்ணவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
நலமான ஸ்தம்பனமாம் ஜலஸ்தம்பந்தான்
தண்மையாய் நாமுரைப்போம் தம்பிரானே
தாரணியில் பிரணவத்தை மனதிலுன்னி
குண்ணியே தேகமதை தானடுக்கி
குளமதனில் தானிறங்கி புலஸ்தியாகேள்
திண்ணமுடன் யெட்டுநா ளொருவாரந்தான்
தீர்க்கமுடன் றாமிருந்து வருகலாமே. 742

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வருகலாம் கேணிதனி லிறங்கியேதான்
மன்னவனே மற்றுமொரு கேணிதன்னில்
பெருகவே மறைப்புமை கொண்டுமேதான்
பேரான கேணிதனில் வருகலாகும்
அருகவே யிருந்தவற்கு கண்ணிற்றோற்றா
வப்பனே மைமறப்பு யென்னசொல்வேன்
உருகவே மையதுவுங் கலைந்துபோனா
லுத்தமனே வுன்னையுந்தான் காண்பார்பாரே. 743

காணவே ஜெகசால மைதான்கொண்டு
காசினியில் வெகுகோடி மாண்பரப்பா
ஆண்மையாய் கோடிமுறை சாலந்தன்னை
அப்பனே யாடுகிறார் லக்கோயில்லை
வேணபடி யதிதங்கள் மிகவும்கூறி
வேடிக்கை யாகவே கர்மம்பூண்டார்
மாணமருங் கல்வியுடன் புலஸ்தியாகேள்
மண்டலத்தில் நீதியுடன் நடப்பீர்தாமே. 744

நடக்கவே லோகபதி மாண்பரெல்லாம்
நாடாளும் நடராசர் தானோவென்பார்
படர்க்கையுட னுந்தனையும் பாரிலப்பா
பாங்கான சீடனென்று பகருவார்கள்
வடக்குவெகு தூரமப்பா மகமேருண்டு
மதிப்புடனே யுந்தமக்கு சித்தரெல்லாம்
தடக்கமது கூராமல் நாதர் தானும்
தண்மையுட னுபதேச மருளீவாரே. 745

அருளான வருளதுவும் பெறுவாயப்பா
அப்பனே காயாதி கொள்வாயங்கே
பொருளான பொருளதுவும் காயகற்பம்
பொங்கமுட னுந்தமக்கு வுபதேசங்கள்
தெருளான மூலிவகை யனந்தஞ்சொல்வார்
தேற்றமுட னூல்ருக்கும் ஸ்தானஞ்சொல்வார்
குருவான சமாதியென்ற பீடமப்பா
குருபரனே யுந்தமக்கு வாய்க்குந்தானே. 746

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வாய்க்குமே மெய்ஞ்ஞான மருளுமுண்டு
வளமான சித்தர்களின் சேர்வையுண்டு
தாய்க்கமலம் வீற்றிருக்கு மனோன்மணியார்தாமும்
தப்பாது யுந்தமக்கு தருவார்ஞானம்
பேய்க்தரும்பு தின்றாக்கால் மதுரமாகும்
பேசரிய காயாதி வலுமையாலே
மாய்க்கவே போகாது சடலந்தானும்
மகதேவா நீயுமொரு சித்தனாமே. 747

சித்தான முனிதானே சீஷாவென்பார்
செகந்தனிலே யசுவனியார் பேரன்றானோ
முத்தான மூவுலகைக் கடந்தசித்தோ
மூதுலகைக் கட்டறுத்த முனியோவென்பார்
பத்தியுள்ள பதினெண்பேர் பதாம்புயத்தைப்
பட்சமுடன் காத்திருக்கும் சித்தோவென்பார்
முத்திவழி தான்தெரியும் ரிடியோவென்பார்
மூதண்டங் கொண்டசித்தோ வென்பர்காணே. 748

என்பாரே புலஸ்தியனே மதியுள்ளானே
யெழிலான கருவிலமே மச்சகேந்திரா
தென்றிசையி லகஸ்தியனார் சீஷனென்பார்
தேற்றமுட னெடுங்கால சித்தோவென்பார்
வென்றிடவே யவரிடத்தில் வுபதேசங்கள்
வெற்றியுடன் பெற்றவரும் நீயோவென்பார்
குன்றான பொதிகைமலை சித்தோவென்பார்
குவலயத்தில் புஷ்பமக மேரென்பாரே. 749

மகமேரு யென்றபதம் யார்க்குக்கிட்டு
மன்னவனே புலஸ்தியனே மதியுள்ளானே
செகமுழுது முனைப்போல பாலசித்து
தேற்றமுடன் கண்டதிலை யென்பாரல்லோ
குகை முழுதுந் தேடியே திரிந்திட்டாலும்
குணமுள்ள சித்துனைப்போல் காணோமென்பார்
அகமெல்லா முனைப்புகழ்வா ரப்பாகேண்மோ
ஆண்மையுள்ள புலஸ்தியனே யிந்திரவானே 750

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

# கஞ்சமலை சித்தர் பெருமை

இந்திரனே புலஸ்தியனே யிறைவாகேண்மோ
யெழிலான இன்னமொரு மாற்கஞ்சொல்வேன்
சுந்தரனே கஞ்சமலை யென்றோர்நாடு
சூரியனார் காணார்க ளந்தநாடு
அந்தமுள்ள கானகமா மந்தநாடு
அப்பனே கஞ்சமலை யென்னும்நாடு
விந்தையுள்ள கிரிமேலே கோபுரந்தான்
வித்தகனே வதின்பெருமை கூறொண்ணாதே. 751

ஒண்ணான நாடதுதான் மலைநாடப்பா
வுத்தமனே சம்புவென்ற விருட்சமொன்று
கண்ணான பூதமென்ற விருட்சமொன்று
காவலனே யதன்பெருமை கூறொண்ணாது
தண்மையுள்ள விருட்சமதின் கீழேயப்பா
தயாபரனே ரிடிதேவ ரிரண்டுசித்து
வண்மையுடன் காயாதி கற்பங்கொண்டு
வளமுடனே நெடுநாளா யிருப்பார்தாமே. 752

இருப்பாரே கெவுனமென்ற சித்துதாமும்
யெழிலுடனே பிரணவத்தை யுச்சரித்து
பெருக்கவே ஸ்தூலமென்ற சித்துசெய்து
பேரான ஸ்தம்பனத்தை யுச்சரித்து
நெருக்கமுடன் செபமாலை கையிலேந்தி
நெடுநாளாய் மாரணமாஞ் சித்துசெய்து
பெருக்கவே ஸ்தூலத்தை வெவ்வேறாக
வேட்கமுடன் திருக்கூத்து வாடுவாரே. 753

ஆடுவார் கானகத்தி லிருப்பாரப்பா
அப்பனே மலைமேலே சிரசுகாண்பீர்
நாடுபதி தன்னிலப்பா கால்கரங்கள்
நளினமுடன் கண்டவரும் பார்க்கலாகும்
தேடுவார் சித்துமகா சொரூபர்தம்மை
தேடுகையில் பாங்குடனே யடுத்துகாண்பார்
காடுதனி லிருந்தசித்துக் காணோமென்று
காட்டகத்தை திரிந்துமே வருகுவாரே. 754

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வருகுமது காலமது நேருங்காலம்
வளம்பெறவே முன்போலே ரூபமெல்லாம்
ஒருமைபட தான்சேர்ந்து ரிடியார்தாமும்
ஓகோகோ நாதரவர் முன்னே நிற்பார்
அருதடனே சென்றல்லோ பார்க்கும்போது
அப்பனே யிதோவல்லோ கஞ்சநாதர்
பருவமுடன் வாலையதாய் நிற்கின்றாரே
பட்சமுடன் பதாம்புயத்தைப் பணிகுவாரே 755

பணிந்துமே யெந்நாளும் துதியேகொள்வார்
பாங்குடனே யவர்பாத மஞ்சலிப்பார்
துணிவுடனே புலஸ்தியனே சுந்தராகேள்
துரைராசர் மெய்ச்சுகின்ற ஞானப்பாலே
மணியான ரிடியாரைக் கண்டுமேதான்
மதியுடனே யவர்பாத மஞ்சலித்தால்
தணிகையுட னுந்தனைத்தான் தயவுகூறி
தண்மைபெற யாதென்று வினவுவாரே. 756

வினவியே கேட்டுமது காலந்தன்னில்
வித்தகனே புலஸ்தியனே புகல்வேனப்பா
நினவுடனே யசுவனியார் பேரனென்றும்
நீதியுள்ள வகஸ்தியர்தன் சீடனென்றும்
மனமுடனே யுறுதிகொண்டு மகிழ்வதாக
மன்னவனே தானுரைப்பாய் மதியுள்ளானே
தினமதுவாய் நெடுங்காலங் கஞ்சமலைதன்னை
தீர்க்கமுடன் காணவென்று வழிகொண்டேனே. 757

வழிகொண்டு வந்ததொரு பாலனென்பாய்
வளம்பெரிய நாதரும்மைக் காணவென்று
பழியதுவும் நேராமல் பட்சத்தோடும்
பக்கலிலே யாதரித்து யிதவுகொண்டு
மொழிகொண்டு யும்மையுமே யாசீர்மித்து
மேன்மையுடன் வருளெல்லாம் தத்தமாக
அழியாத வரந்தந்து வன்புள்ளானே
அன்புடனே ரட்சித்துப் போற்றுவாரே. 758

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

போற்றியதோ ரிடியாரைத் தாள்பணிந்து
பொங்கமுடன் காயாதி கேட்பாயானால்
தேற்றமுடன் வரந்தந்து தனமுமீய்ந்து
தெளிவுடனே யுந்தமக்கு யாவுமீவார்
ஆற்றமுடன் விருட்சமது வருகேசென்றால்
அப்பனே பதினெண்பேர் வாகமங்கள்
கூற்றனவன் காணாத நூல்களப்பா
கோடிவகை புராணவிதி காசமாமே. 759

காசமாம் கிரிமேலே வதிசயங்கள்
காண்பதற்கு யாராலு முடியாதப்பா
வாசமது பதினெண்பேர் பாடும்நூல்கள்
வளம்பெரிய தாக்கநூல் காண்பாயப்பா
நேசமுடன் கிரிநடுவி லாயக்காலாம்
நேர்மையுடன் கண்ணிற்கு தோற்றலாகும்
பாசமதை கருவறுத்து சிக்கறுத்து
பாலகனே ஞானத்தின் பாலைக்கேளே. 760

பாலான பாலதுவும் கேட்கும்போது
பாங்கான ஞானமுறை யுமக்குக் கிட்டும்
சேலான ரிடியாரும் தேடிவைத்த
சிறப்பான காயத்தின் கற்பமப்பா
மாலான பூநீற்றின் மார்க்கங்கூறி
மகாதேவா வழலையிட குறிப்புங்கூறி
தாலான வழிதடமு முழுதுஞ்சொல்லி
தற்பரனே முத்திக்கு வழிசொல்வாரே. 761

சொல்லவே துவாபரத்தின் யுகத்திலப்பா
சொற்பெரிய நாதாந்த ரிடிதானங்கே
வல்லமையாங் கெவனமது மிகவேபூண்டு
வளம்பெரிய நாதாக்க ளருளும்பெற்று
கொல்லவொண்ணா விலங்கைபதி நாடுசென்று
கொற்றவனாம் ராட்சதரின் போரில்சென்று
நல்லதொரு கெவனமாங் குளிகைகொண்டு
நலமுடனே வந்தவகை கூறுவாரே. 762

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கூறவே கெவுனத்தின் மார்கஞ்சொல்வார்
குணமான புலஸ்தியனே குருவேயப்பா
மாறலது நேராது மதியுள்ளானே
மகாபெரிய போர்க்களத்தில் சென்றேயப்பா
தேறலது சமாதியரண் கோட்டைக்குள்ளே
தெளிவுடனே நெடுங்கால மிருந்தசித்து
ஆறவே வழலையுத்து சூட்சமுப்பும்
அப்பனே காயாதி முறைசொல்வாரே. 763

முறையான முறையோடும் வழிபாடப்பா
மூர்க்கமது தானீக்கி வினயத்தோடும்
மறையான பொருளெல்லா மறைப்புனீக்கி
மாட்சியுடன் குருபதத்தை நண்ணலாகி
நிறைவாங்கி யுந்தமக்கு போதிப்பாகி
நீதியுடன் மருணீக்கிப் போதந்தந்து
புறையொன்றும் நேராமல் புண்ணியாகேள்
புங்கமுட னனுக்கிரகம் தருவார்பாரே. 764

## துவாபர யுகத்தில் ராட்சதர் கூட்டம் நீதி சொல்வது

பாரப்பா புலஸ்தியனே மச்சகேந்திரா
பாலகனே யெனதைய ரசுவனியாந்தேவர்
சீரப்பா மனங்கண்ட சாட்சிமட்டும்
சிக்கெனவே தாளறுத்து மதியம்பூண்டு
நேரப்பா தாம்கண்ட வரைதான்மட்டும்
நெடிதான மனுமுறையோ டுரைத்தநீதி
ஆரப்பா யுந்தனுக்காய் சொல்வேனையா
அன்புடனே கேட்டுமங்கே மதிசொல்வீரே. 765

மதியான ராட்சதர்கள் வைத்தவைப்பு
மன்னவனே யிருப்பிடமும் அடையாளந்தான்
துதியோடு மிலங்கைபதி வாவிக்குள்ளே
துறையோடு மரண்வாயல் கோட்டைக்குள்ளே
பதிவிட்டு வீசாண்ய புரத்திலங்கே
பட்சமுடன் றுதியோடு சென்றுமேதான்
விதியோடு சமாதிமுகம் நிற்பாயப்பா
வீரனக்குற்றுக்கல் காணலாமே. 766

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கல்லான தூண்மறைவு கதவொன்றுண்டு
காதலனே யட்சரத்தைக் கருதல்கொண்டு
செல்லவே யுருவதுவும் லட்சமோது
செங்கண்மால் போலேயொரு ரிடிதான்காண்பாய்
புல்லவே தேவதா ரிடிகள்போல
புகழுடனே தாட்பாளும் திறக்கலாகும்
வெல்லவே விட்டகுறை யிருந்ததாலே
வேதாந்தத் தாயருளால் கிட்டலாச்சே. 767

கிட்டான பொருளனைத்து முந்தமக்காய்
கிருபையுடன் றான்பெருவாய் சமாதிதன்னில்
மட்டான செந்தூரம் தனங்கள்யாவும்
மறைபொருளும் குளிகைமுதல் காயபற்பம்
திட்டமுட னுந்தமக்கு யோதியல்லோ
தீர்க்கமுடன் ரிடியாரு முபதேசிப்பார்
சட்டமுடன் பெரும்பாலுங் கெவனியாவாய்
சதுரான நாலுயுகம் காணலாமே. 768

சதுரான முகம்நாலும் காண்பீர்கண்டாய்
சட்டமுடன் கண்டுவதி செயங்கொண்டாலும்
மதுரான பாவிகளும் கர்மிமாண்பர்
பாருலகில் அனேகம்பே ருறவுகொள்வார்
மதுரமாம் வார்த்தையது மிகவேகூறி
மாணாக்கர் பேருறவு கொண்டுமல்லோ
விதுரனுமே யுறவுகொண்ட காதைபோல
வீரமுடன் வெகுகும்ப லணுகுவாரே. 769

கும்பலாய் கூட்டமுட னாட்டங்கொண்டு
குவலயத்தில் லதிவினயம் பந்தங்கொண்டு
வம்புகளுஞ் செய்துமல்லோ மட்டிமாண்பர்
மன்னவனே யுந்தனிடம் கிட்டலாகி
தெம்புடனே வருவார்கள் கோடிமாண்பர்
தேசத்தில் பகைகொண்டு திரிவாருன்பின்
பம்பரம்போல் சுழண்டாலுந் துய்யபாலா
பாவிகட்கு சற்றேனு மணுகிடாதே. 770

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

அணுகினால் பாபமது வுமக்குநேரும்
அப்பனே மோட்சத்துக் காளுமாவாய்
நணுகினால் மூவேழு சுற்றமப்பா
நலமுடனே பாழ்நரகுக் கேதுவாகும்
கணுகினிடம் சேர்ந்தாலும் கருமியாவாய்
காசினியி லுனையாரு மதியார்சித்தர்
அணுகிடிலோ வுன்சிரசு வெடித்துப்போகும்
அப்பனே யுன்மகிமை கூறொண்ணாதே. 771

## விஷபாகத்தயிலம் குஷ்டம் நீங்க

ஒண்ணாது புலஸ்தியனே மச்சகேந்திரா
ஓகோகோ நாதாக்கள் கூறாவண்ணம்
எண்ணரிய நற்பொருளாம் விஷபாகந்தான்
யெழிலான குஷ்டமுத லேகுதற்கு
வண்ணமுடன் சரக்குகளை கண்டாராய்ந்து
வளம்பெறவே கைபாகம் பிசகாவண்ணம்
தண்மையுடன் வழுத்துகிறேன் கர்மியோர்க்கு
தப்பாது கைபாகம் தவறிடாதே. 772

தவறாமல் பாஷாணம் பலமதாகும்
தாக்குடைய கெவுரியது பலமேயாகும்
அவமான கெந்தியது பலமிரண்டாகும்
அப்பனே லிங்கமது பலமதாகும்
கவமறுக்கும் வீரமது பலமேயாகும்
கருவான பூரமது பலமதாகும்
சிவந்ததொரு மனோசிலையும் பலமதாகும்
சிக்கான தாளகமும் பலமதாமே. 773

பலமுடனே சிங்கியது துரிசிதானும்
பாங்கான கார்முகிலும் பலமதாகும்
நிலந்தனில்ல தான்பூர்க்கும் பூநீரப்பா
நிஷ்களங்க மானதொரு வழலைதானும்
தலமான சரக்கதுவும் பலமதாகும்
தப்பாது தாரமது பலமதாகும்
சலமான சாரமது பலமதாகும் 774
சார்பான துத்தமது பலந்தான் கூட்டே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கூட்டவே கோளக பாஷாணமுந்தான்
குறிப்பான பொன்னம்பர் தானுமாகும்
நாட்டியதோர் நிமிளையது பலமதாகும்
நாதாக்கள் வைத்தவெண் பாஷாணந்தான்
வாட்டமுள்ள வஞ்சனமாம் பாஷாணக்கல்
வளமையுடன் பலமதுவும் நிறுத்துக்கூட்டு
நாட்டிகமாம் சூதமது பலமேயாகும்
தவறாமல் பேதியது கூடச்சேரே. 775

சேர்க்கவே யின்னமொரு கருமானங்கேள்
செயலான கருஞ்சீரம் காட்டுச்சீரம்
பூர்க்கவே யெட்டிவிரை தேற்றான்வித்து
புகழான காஞ்சோரி வித்தேயாகும்
ஆர்க்கவே யாடுதிண்ணா வித்தேயாகும்
அப்பனே வழிஞ்சியிட வித்தேயாகும்
மூர்க்கமாம் புங்கனிட வித்தேயாகும்
முன்பான யெருக்கினிட வித்துமாமே. 776

வித்தான கோவைவிரை பலமதாகும்
வீரான பிரமதண்டு பலமதாகும்
சத்தான சேரான்ின் வித்தேயாகும்
சதாவேரி வித்துமது பலமதாகும்
கொத்தான வெள்ளுள்ளி பலமதாகும்
கொடுரமாம் கொடிவேலி பலமதாகும்
சித்தான சரக்கெல்லாஞ் சரியதாகும்
சிறப்புடனே முருக்கினிட விரைதான்கூட்டே. 777

கூட்டியே சரக்கெல்லா மோரிடையேயாகும்
கொப்பெனவே முருக்கன்விரை சரியாய்க்கூட்டி
நாட்டமுடன் கல்லுரலி லிட்டுமைந்தா
னளினமுடன் நிம்பக்கா யளவுகொண்டு
தேட்டமுடன் ரவிதனிலே காயப்போடு
தெளிவாக பாண்டமதி லிட்டுமேதான்
சூட்டுடனே குழித்தயில மிறக்கக்கேளும்
சுந்தரனே கைபாகந் தவறிடாதே. 778

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாகமாந் தயிலமது விறக்கும்போது
பாங்குடனே கீழ்க்கலசம் பீங்கானப்பா
வேகமாம் பீங்கானில் தீதானப்பா
வெட்டெனவே பீங்கானில் அடிப்புறத்தே
சாங்கமுடன் சலமதுவுங் குழியில்விட்டு
தற்பரனே தயிலமது வாங்குவாங்கு
ஆகமங்கள் சாத்திரங்கள் பொய்யாதப்பா
அப்பனே முறைபோலே இறக்கிடாயே. 779

இறக்கியே தயிலமது பதனம்பண்ணு
யெழிலான புலஸ்தியனே மச்சகேந்திரா
உறக்கமது நேராது தயிலபாக
முத்தமனே சித்தர்முதல் ரிடிகள்நாதர்
திறமுடனே பலகோடி சாத்திரங்கள்
தீர்க்கமுடன் யாருந்தான் கூறவில்லை
அறமுடனே யிப்பாகம் செப்பினார்காண்
அப்பனே தயிலமதை பதனம்பண்ணே. 780

பண்ணவே தயிலமது யுண்ணும்பாகம்
பட்சமுடன் சொல்லுகிறேன் பான்மையாக
நண்ணமுடன் குன்றியது வளவதாக
நலமுடனே சர்க்கரையிற் கொண்டபோது
வண்ணமுள்ள தேகமதில் படரும்குஷ்டம்
வாகுடனே தானீங்கி தடிப்புமாறும்
எண்ணரிய குறைகுஷ்டம் வரியமேகம்
வெழிலான மேகம்பதி னெட்டும்போமே. 781

போமேதான் குஷ்டமது நீங்கியேதான்
பொல்லாத மேகத்தின் ரோகம்போகும்
நாமேதான் சொன்னபடி வினயம்நீங்கி
நலமுடனே காயாதிக் கிடமுண்டாகும்
ஆமேதான் வியாதிகளு மின்னஞ்சொல்வே
னப்பனே செந்தாழை வெண்டாமரைபோகும்
நாமேதா னுரைத்தபடி சில்விஷங்கள்
நாடாது புலஸ்தியனே நண்புள்ளானே. 782

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நண்பான பத்தியந்தா னிதற்குச்சொல்வேன்
நாயகனே சொல்லுகிறே னன்புள்ளானே
கண்பான கோதுமையின் கஞ்சியாகும்
காதலனே வரவரிசி கஞ்சியாகும்
பண்பான தினையரிசி கஞ்சியாகும்
பாங்கான கருங்குழுவை யரிசியாகும்
திண்பான கம்பதுவு மிகவேகூட்டு
திறமான யிறைச்சிவகை கூட்டநன்றே. 783

நன்றான பாகமது பிசகிடாது
நாயகனே பத்தியந்தா னிதற்கோயில்லை
குன்றான பாலமிர்தங் கொள்ளலாகும்
கூரான மச்சவகை தள்ளலாகும்
தென்றிசையி லசுவனியா ரெந்தமக்கு
தேற்றமுடன் றாமுரைத்த முறைபாகந்தான்
சென்றிடவே மனதுவந்து யுந்தமக்கு
செப்பினேன் கைபாகஞ் செப்பிடாதே. 784

## சாரக்கட்டு

செப்பவென்றா லின்னமொரு கருமானங்கேள்
செங்கமலக் கண்ணானே கணிதவானே
ஒப்பமுடன் சாரமது பலந்தானாகும்
ஒகோகோ நாதாக்கள் கூறாவண்ணம்
தப்பிதங்கள் நேராது தயவுள்ளானே
சாங்கமுடன் காரகது பலமொன்றாகும்
எப்படியும் சீனமது பலமொன்றாகும்
யெழிலான வெடியுப்புப் பலமொன்றாமே. 785

பலமான வுப்புடனே யிந்துப்பாகும்
பாலகனே கரியுப்பு சோமனுப்பு
சிலமான சிலாசத்துப் பலமதாகும்
சிற்பரனே கல்மதமாம் கல்நாரப்பா
குலமான வண்டக்கல் சுன்னக்கல்லாம்
குறிப்பான வளையலுப்பு பலமதாகும்
இலமான குருசெயநீர் [illegible]ட்டித்
தன்மைபெற மூன்றுநா ளாட்டிடாயே. 786

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆட்டவே செயநீரா லாட்டியப்பா
அப்பனே மெழுகுபத மானபின்பு
தாட்டிகமாய் சாரத்துக் கங்கிகொண்டு
தற்பரனே ரவிதனிலே காயப்போடு
நாட்டமுடன் சீலையது வலுக்கச்செய்து
நாயகனே கோழியென்ற புடந்தான்போடு
பாட்டுடனே பாடதுதான் பிசகிடாது
பாங்குபெற யிப்பாகம் செய்திடாயே. 787

செய்யவே புடமாறி யெடுத்துப்பாரு
செயமுள்ள புலஸ்தியனே கைபாகந்தான்
உய்யவே யொருபோதும் பொய்யாதப்பா
வுத்தமனே சாரமென்ற கட்டுதானும்
நையவே யுடைப்பதற்கு விபரம்சொல்வேன்
நாயகனே நாயுருவி சாம்பலப்பா
துய்யநல்ல நீர்முள்ளி சாம்பலப்பா
துப்புரவா யெரிகாலன் சாம்பல்கூட்டே. 788

கூட்டியே சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டு
கொப்பெனவே மூன்றுப்பு சாம்பலப்பா
வாட்டமுடன் றானெடுப்பாய் மன்னாகேளு
வளமுடனே பாண்டமென்ற சட்டிக்குள்ளே
நீட்டமுடன் கீழ்மேலு மிட்டேகேளு
நீதியுட னடுமையம் சாரக்கட்டி
தேட்டமுடன் பொதிந்துமே சீலைசெய்து
தெளிவுடனே நாற்சாம மெரித்திடாயே. 789

எரித்துமே யாறவிட் டெடுத்துப்பாரு
யெழிலான சாரமென்ற சுன்னமப்பா
பொரித்ததொரு சோளம்போல் பூர்த்துக்காட்டும்
பொங்கமுடன் சுன்னமது புகலொண்ணாது
நெரித்தசுன்னந் தனையெடுத்துத் துரிசிக்கப்பா
நேர்மையுடன் றானெடுத்து செயநீர்தன்னால்
துரித்திரமே போகவென்று தார்வேந்தாகேள்
தப்பாது துரிசிக்குப் பூசிடாயே. 790

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பூசவே ரவிதனிலே காயவைத்து
புகழுடனே சீலையது வலுக்கச்செய்து
நேசமுடன் காடையென்ற புடந்தான்போடு
நெடிதான சுன்னமது பகரொண்ணாது
பாசமுள்ள சுன்னமதை குன்றிதானும்
பாலகனே தானெடுப்பாய் மைந்தாகேளு
மாசலது நேராமல் மன்னாபாரு
மகத்தான சூதமதில் பத்துக்கொன்றே. 791

பத்துக்கு சூதமதி லொன்றுதாக்கு
பாங்குடனே சூதமது மடிந்துபோகும்
சத்துடனே ரசமதுவம் துரிசிசத்து
சாங்கமுடன் கொன்றல்லோ வெண்ணெய்யாகும்
எத்துடனே வெண்ணெயது திரண்டுநிற்கு
மெழிலான ரசமதனை செப்பக்கேளீர்
மத்தித்த வெண்ணெயது யெடுத்துபாலா
மத்தங்காய்க் குள்வைத்துப் பொதிந்திடாயே. 792

பொதியவே சீலையது வலுக்கச்செய்து
பொங்கமுடன் புடமதுவும் கோழியாக
அதிராமல் புடமதுவு மெடுத்துப்பாரு
அப்பனே சட்டியதாய் பொருமிக்காட்டும்
விதிமுறையாய் முன்னுரைத்த காரசாம்பல்
வித்தகனே கீழ்மேலும் பொதிந்துமேதான்
கதிபெறவே தானெடுப்பாய் சாமம்நாலு
கர்த்தனே சுன்னமது சொல்லொண்ணாதே. 793

ஒண்ணாது சுன்னமது தானெடுத்து
ஓகோகோ நாதாக்க ளறியவேண்டி
நண்ணமுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று
நாட்டமுடன் றான்கொடுக்க மாற்றேபத்து
தண்மையுடன் தங்கமது யென்னசொல்வேன்
தப்பாது வாணிக்கு யுகந்தத்தங்கம்
வெண்மையுடன் பசுந்தங்கம் பிறவித்தங்கம்
வேதாந்தத் தாய்கொடுத்த தங்கமாச்சே. 794

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தங்கமா மிச்சுன்னம் ரவியிலப்பா
தன்மைபெற பத்துக்கு வொன்று தாக்கு
அங்கமுட னுருக்குமுகந் தன்னிலீய
அப்பனே மாற்றதுவு மென்னசொல்வேன்
புங்கசித்தி பெற்றதொரு தங்கமாச்சு
பேரான சுயத்தங்கம் சிவந்ததங்கம்
பங்கமது நேராது வருணத்தங்கம்
பாலகனே சிவயோகத் தங்கமாச்சே. 795

ஆச்சப்பா யிச்சுன்னங் கெந்திக்கப்பா
அப்பனே சாரமென்ற சுன்னந்தன்னை
மூச்சடங்க செயநீரால் தானரைத்து
முசியாமல் மெழுகதுபோ லாகவாட்டி
பாச்சலென்ற கெந்திக்கு வங்கிகொண்டு
பதராமல் ரவிதனிலே காயவைத்து
போச்சுதென்று நினையாதே புண்ணியபாலா
புகமூடனே கெந்திதனை சீலைசெய்யே. 796

செய்யவே காய்ந்தபின்பு புடந்தான்கோழி
செப்புகிறேன் போட்டெடுத்துக் காத்தில்வைக்க
துய்யநல்ல வெளுப்பாகி சுண்ணாம்பாகி
துப்புரவாய் கொக்கிறகு போலேநீறி
வையகங்கள் தானறியு மிந்தபாகம்
வளமையுடன் யாருந்தான் செய்யமாட்டார்
பையவே கெந்தியது பற்பந்தன்னைப்
பாங்குடனே சீஷாவிற் பதனம்பண்ணே. 797

பண்ணியதோர் பற்பமதைக் குன்றியப்பா
பாலகனே நெய்தேனிற் கொள்வாயானால்
குண்ணியதோர் பாண்டும் கபரோகம்போகும்
போக்கான மகோதரமும் கூண்டிட்டோடும்
நண்ணியதோர் சோகை காமாலைவீக்கம்
நாடாது குன்மமெட்டுங் கவிசைபோகும்
தன்மையுள்ள மேகநீ ரெல்லாம்போகும்
தட்டழிந்து கசரோகம் தணியும்பாரே. 798

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா சுன்னமது பகரொண்ணாது
பாலகனே சாரமென்ற சுன்னந்தானும்
ஆரப்பா சுன்னமதை செயனீர்தன்னால்
அப்பனே தாமரைப்பாய் நாலுசாமம்
கூரப்பா மெழுகுபத மானபின்பு
குறிப்புடனே தாளகத்துக் கங்கிகொண்டு
னீரப்பா ரவிதனிலே காயவைத்து
நிஷ்களங்க மாகவது சீலைசெய்யே. 799

சீலையது காயவைத்துப் புடந்தான்கோழி
சிற்பரனே புடமாறி யெடுத்துப்பாரு
மாலையது பற்பமது வீறியல்லோ
மகத்தான வேதைமுகம் கோடாகோடி
ஆலையது கரும்பிலிட்ட காதைபோல
அப்பனே சரக்குகளை கொல்லுமப்பா
வேலையாம் சுன்னமதை செம்பிலீய
வேதாந்தத் தாயினது வருளுண்டாமே. 800

அருளான வருள்காட்டும் தாளகந்தான்
அப்பனே மாற்றதுவும் கூறொண்ணாது
பொருளான பொருளதுவு மிதிலடக்கம்
போக்கான சரக்கெல்லாம் கட்டிப்போகும்
திருவான தங்கமது யிதற்கொவ்வாது
தீர்க்கமுள்ள சுயத்தங்கம் பிறவித்தங்கம்
குருவான தாளகந்தான் குவலயத்தில்
கூறுதற்கு நாவில்லை பாவில்லைதானே. 801

தானான சாரமென்ற சுன்னமப்பா
தாரணியி லனந்தமாம் போக்குதானும்
கோனான மானிடர்கள் செய்வாரப்பா
கொற்றவனே சாரமதை லிங்கந்தன்னை
பானான செயநீரா லரைத்துமேதான்
பாங்குடனே லிங்கத்திற் கங்கிகொண்டு
மானான ரவிதனிலே காயவைத்து
மன்னவனே சீலையது வலுக்கச்செய்யே. 802

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

செய்துமே கோழியென்ற புடந்தான்போடு
செப்பரிய புடமதுவு மாறினபின்
வெய்யவே லிங்கமது கவசம்நீக்கி
வேட்டமுடன் பார்க்கையிலே லிங்கமப்பா
துய்யநல்ல வுருக்கதுபோ லிருக்குமப்பா
துப்புரவாய் லிங்கமதை யெடுத்துமைந்தா
பையவே செம்புக்குப் பத்துக்கொன்று
பாலகனே செம்புருக்கி யீவாய்காணே, 803

ஈயவே செம்பதுவு முருகியல்லோ
யென்மகனே ரவியதுவும் கட்டிப்போகும்
தூயசெம்பு கட்டியது யிருகநிற்கும்
துப்புரவாய் செம்பதனை யூதிப்போடு
மாயமுள்ள மதியதுவும் பத்துக்கொன்று
மார்க்கமுடன் செம்பதுவு மொன்றேயீவாய்
காயமுள்ள வெள்ளியது பழுத்துநிற்குங்
கன்னவனே மாற்றதுவு மெட்டதாமே. 804

எட்டான வயததுவும் சொல்லொண்ணாது
யெழிலாக வாரடித்து புடமிட்டாக்கால்
திட்டமுள்ள தங்கமது புகலொண்ணாது
தீர்க்கமுள்ள தங்கமது பிறவித்தங்கம்
பட்டமுள்ள லிங்கமதை குடவனிலேயீய
பாங்கான குடவனுமே மாற்றோயெட்டு
சட்டமுடன் குடவனுமே மாற்றோமெத்த
சாங்கமுடன் கூறுதற்கு நாவொண்ணாதே. 805

ஒண்ணான முன்சொன்ன சாரபற்பம்
வுத்தமனே தானெடுப்பாய் புலஸ்தியாகேள்
கண்ணான பற்பமதை யெடுத்துபாலா
கருவான வெடியுப்புக் கவசத்தாலும்
தண்மையுள்ள வெடியுப்புக் கவசங்கொண்டு
தகைமையுடன் ரவிதனிலே காயவைத்து
வண்மையுடன் சீலையது வலுக்கச்செய்து
வளமையுடன் புடமதுவுங் கோழியாமே. 806

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கோழியாம் புடமதுவு மானபின்பு
கொற்றவனே யெடுத்துப்பார் சுன்னமப்பா
தாழியாம் புடமாறிப் பாருபாரு
தாக்கான பற்பமது யென்னசொல்வேன்
பாழிலே செல்லாமல் கன்னந்தன்னை
பாலகனே சீஷாவிற் பதனம்பண்ணு
வாழியாம் நெடுங்காலஞ் சுன்னமப்பா
வைத்துமே சதாசிவத்தைப் போற்றிடாயே. 807

போற்றவே சுன்னமதை யெடுத்துமைந்தா
பொங்கமுடன் செம்புதனில் தாக்கிப்பாரு
ஆற்றவே கூடாது சுன்னமப்பா
அப்பனே செம்பதுவு மூறலேகி
நாற்றமுள்ள செம்பதுவுங் கட்டிப் போகும்
நாதாந்தச் செம்பதுவு மிறுகிக் காட்டும்
தேற்றமுடன் செம்பதுவும் தங்கச்செம்பாம்
தேசத்தில் தேடினால் கிட்டாதன்றே. 808

கிட்டாது யிம்மார்க்கம் யார்க்குக்கிட்டும்
கீர்த்தியுள்ள சிவயோகி காண்பான்பாரு
முட்டாளு முழுமூடர் யோகிமாண்பர்
மூதுலகில் பேர்வகுத்தோர் கோடாகோடி
அட்டாளுந் திசைதோறுந் திரிந்திட்டாலும்
அப்பனே விதியாளி காண்பானல்லால்
திட்டமுட னிப்பாகம் யாருங்காணார்
சிவமான சிவயோகி காண்பார்பாரே. 809

## சிவயோகம்

பாரப்பா யின்னமொரு பரமானங்கேள்
பாலகனே புலஸ்தியனே மச்சகேந்திரா
சீரப்பா சிவராஜ யோகமப்பா
செப்புகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
நேரப்பா தென்முகமாம் பதிதானப்பா
நெடிதான பொதிகைக்கு யடிவாரத்தின்
கூரப்பா குண்ணருகே சுனைதானுண்டு
குறிப்புடனே சித்தொருவர் கண்டிட்டடனே. 810

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கண்டதொரு சித்தவரும் சிவயோகந்தான்
கண்முன்னே சமாதிமுகம் நிஷ்டைகொண்டு
தண்டுடனே கலாபமணி கையிலேந்தி
தாக்குடனே கண்ணிரண்டு மூடியல்லோ
விண்டுலகில் சித்துமுனி நாதரப்பா
வேதாந்தத் தாயாரு முன்னேநிற்க
பண்டிதங்கள் பிசகாமல் வச்சரத்தைப்
பாங்குடனே யுச்சரிக்க பதிகண்டேனே. 811

பதியான சித்துமுனி யோகங்கண்டு
பாரினிலே ஞானமுளி வேடத்தோடு
சதிபெறவே முதல்வாசல் திறந்துகொண்டு
காவலனே வுண்ணாக்கு பூட்டுவிட்டு
மதியமிர்த மானதொரு மிரண்டாம்வாசல்
மன்னவனே மேலண்ணங் கொண்டுமூடி
பதியவே யுட்புரமாம் வாசல்தன்னைப்
பார்ப்பதற்கு சுவரதுவை விலக்கினாரே. 812

விலக்கியே முனைவாசல் மூன்றாம்வாசல்
விதிப்படி வண்ணார்ந்து கோட்டைக்குள்ளே
துலக்கமாய் மேலண்ணங் கொண்டுமேதான்
துப்புரவாய் கபாலத்தை துறவுகொண்டு
பிலக்கவே மூச்சதனை யுள்நிறுத்திப்
பிசகாமல் வாசல்வழி செல்லொட்டாமல்
வலக்கையுடன் நான்காவது வாசல்தன்னை
வளம்பெறவே யிடமதுவுங் காணலாச்சே. 813

ஆச்சப்பா வைந்தாங்கால் வாசலப்பா
அப்பனே நாசிவழி திறந்துமேதான்
மூச்சப்பா நாசியது மூடிருக்க
மூர்க்கமுடன் சிவயோகம் நிலைநிறுத்தி
பாச்சலுடன் மனக்கண்ணைப் பதிவுசெய்து
பாருலக கபாலமதைத் திறக்கொட்டாமல்
மாச்சலது நேராமல் மகிமைவானே
வளமுடனே வாசிநிலை நின்றிட்டாரே. 814

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நின்றாரே தேகமதைத் தானடக்கி
நிஷ்களங்க பிரேதமது போலேநின்று
குன்றான மகமேரு தேகந்தன்னை
குறிப்புடனே வசைவற்று வுருவங்கொண்டு
தென்திசையி லசுவனியார் சித்துமெச்ச
தேகத்தை யுடல்பொருள்க ளாவியோடு
வென்றிடவே சதானந்த நித்திரைப்போல
வேட்கமுடன் பிணமாகி பதிந்திட்டாரே. 815

பதிந்தசித்தைக் கண்ணாலே கண்டபோது
பாலகனே செத்ததொகு பிரேதமென்பார்
வதிந்தமுள்ள சிவயோகி பின்னுமப்பா
வளம்பெரிய கோட்டைவழி தடங்கள்மூடி
பொதிந்ததொரு வுள்வாசல் புறமடக்கி
பொங்கமுடன் வாசல்முனை தாள்திறந்து
மதிந்தவழி பஞ்ச பூதங்களாலே
மன்னவனே பூட்டிலிட்டு மகிழ்கொண்டாரே. 816

கொண்டதொரு முனிநாதர் பூதத்தாலே
கொண்டுமே சுவாசமது பூட்டிமாட்டி
தண்டுடனே நாசியது மேலேநோக்கி
சதாநித்தம் ரேசகத்தை பூரகத்தில்
எண்டிசையிங் காண்பதற்கு யாளுமாகி
யெழிலுடனே பராபரத்தை மனதிலுன்னி
முண்டுடனே யேகவெளி யோகியாகி
முயற்சியுடன் புறப்படவே கண்டோம்நாமே. 817

கண்டதொரு சிவவேட மிதுதானப்பா
கன்னவனே செகமெலா மிதுவேமார்க்கம்
அண்டர்முனி தேவாதி தேவரெல்லாம்
அப்பனே யிதுபோல யோகங்கண்டு
தொண்டுமிகத் தான்செய்து வரமும்பெற்று
தொல்லுலகைத் தான்கடந்த சித்துமானார்
விண்டசிவ யோகநிலை கண்டேனப்பா
வித்தகனே சமாதிநிலை கூறுவேனே. 818

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## சமாதிநிலையோகம்

கூறுவேன் புலஸ்தியனே மச்சகேந்திரா
குறிப்புடனே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
தேறுவேன் சமாதிநிலை யோகங்காண
தெளிவுடனே பூமிதனில் சுரங்கமப்பா
ஆறுபுடை தான்சூழத் தம்பிரானே
அப்பனே கல்லறையா மொன்றுண்டாக்கி
மாறுபடா வாசலது சுரங்கமப்பா
மன்னவனே கட்டடமும் செய்திடாயே. 819

கட்டடமும் முற்புறமும் பிற்புறமுமப்பா
காவலனே நாவலனே கருதக்கேண்மோ
திட்டமுட னடியதுவும் பத்தேயாகும்
தீர்க்கமுள்ள வகலமது நாலேயாகும்
சட்டமுடன் மேல்வாசல் வாகாயந்தான்
சாங்கமுடன் கபாடமது தாள்கொண்டுபூட்டி
இட்டதொரு படியதுவு மிகவாய்ச்செய்து
யெழில்பெறவே யேகுதற்கு வயணங்கேளே. 820

கேளப்பா வுன்நிலையி லிருக்குமார்க்கம்
கெவனமுடன் சொல்லுகிறேன் புண்ணியாகேள்
கோளப்பா நேராமல் குமுதவானே
கொற்றவனே நடுமையம் தேகந்தன்னை
மாளப்பா மடிப்புடனே கால்தான்கொண்டு
மன்னவனே கரமதனை மாற்றிக்கட்டி
பாளப்பா நடுமையம் நிலைநிறுத்திப்
பாலகனே யோகநிலை சமாதிகொள்ளே. 821

கொள்ளவே யோகத்தி னளவுகூர்வேன்
கொற்றவனே வேஷ்டியது முழந்தானாலு
விள்ளவே சிரசுக்கு வளவுதானும்
வித்தகனே வேஷ்டியது முழந்தான்மூன்று
எள்ளளவும் பிசகாமல் சாதனத்தை
யேற்றமுடன் சாதிக்க வகைதான் கேளு
தெள்ளமிர்த மானதொரு வாசியைத்தான்
தேற்றமுடன் சாதிக்கும் வகைதானப்பாரே. 822

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா சின்மயத்தை யுள்ளடக்கிப்
பாலகனே கும்பகத்தை மேலேநோக்கி
சேரப்பா கும்பகத்தை யிறுத்திப்பின்பு
செப்புகிறேன் ரேசகத்தில் பூரகந்தானப்பா
தீரப்பா பூரணத்தை யுள்ளிருத்தி
தீர்க்கமுடன் குண்டலியை மேலேதூக்கி
நேரப்பா கும்பநிலை பதியறிந்து
நேர்மையுடன் சதாகளையை நிர்னிப்பீரே. 823

களையான களையதுவு மேதென்றாக்கால்
கன்னவனே திருமாலின் களைதானப்பா
மளையான பாசுரத்தை யுள்ளடக்கி
மன்னவனே வாசிகையந்தான் மேலோடாமல்
தளையான சிதாபாசக் களையைதாக்கி
தற்பரனே வுதானவரை கீழேநோக்கி
பிளையான வவஸ்தையென்ற சித்தாவத்தைப்
பெருமையுடன் சாற்றலுட னவத்தைகாண. 824

காணவே கோசமதை யுள்ளடக்கி
கருவான மும்மலத்தை சிக்கறுத்து
கோணவே யேந்திரியங் கொள்கையாகி
கொற்றவனே பிரணவத்தை மாறிக்கொண்டு
சாணளவு பூமியைவிட் டெழும்பலாகி
சாங்கமுடன் கெவினியைத்தான் யேறொட்டாமல்
வேணபடி யங்குஷ்டமாம் படிகடந்து
வேகமுடன் சிதாபாசக் களையைத்தாக்கே. 825

தாக்கவே சொரூபநிலைக் காண்பாயப்பா
தகைமையுள சச்சிதா னந்தசோதி
ஆக்கமுடன் ஜெகசோதி யொளியைக்காண
அப்பனே சுடரொளிபோல் மாய்கையப்பா
ஊக்கமுடன் தன்னறிவு தோன்றாதாகி
லுத்தமனே காயாதிக் கிடங்கொடாமல்
வாக்கதுவும் பிசகாமல் மன்னாகேளு
மதிநீங்கி மருள்கொண்டு வகுப்பாய்த்தாமே. 826

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வகுப்பான நெஞ்சோடு தான்கிளர்த்தல்
மன்னவனே கலைதனையே மிகவேமாறி
தொகுப்பான சுடரொளியை சுழற்றிமாத்தி
சுந்தரனே சடாட்சரத்தை யுச்சரித்து
மிகுப்பான மதியமுர்தங் கொள்வாயானால்
மிக்கான வம்பரத்தைக் காலால்தாக்கி
தருப்பான சின்மயத்தி லங்கிமாட்டி
தற்பரனே யுன்மூலம் தாக்கிப்பாரே. 827

பார்க்கவே சமாதிநிலை யிதுவேயாகும்
பண்பான சமாதிதனி லிருப்போரெல்லாம்
ஏர்க்கவே யோகநிலை யறிதலாகும்
யெழிலான சமாதிக்கு யிதுவேயோகம்
தீர்க்கமுடன் புலஸ்தியனே யிந்திராகேள்
திறமுடைய யோகமென்ற சாதனத்தை
ஆர்க்கவே செய்பவற்கு யெல்லாஞ்சித்தி
அப்பனே சமாதிக்கு வழிதான் காணே. 828

## மதியமுர்த நிலை

வழியான புலஸ்தியனே புண்ணியவானே
மகாதேவா யுந்தமக்கு யின்னங்கூர்வேன்
சுழியென்றும் வாசல்தனை திறக்கவேதான்
சுந்தரனே வண்ணத்தை நுணிநாவாலே
பழியாத கும்பமதில் மூச்சைநாட்டி
பாலகனே வுள்மூலம் சுழிதானப்பா
முழியான நேத்திரத்தில் சுழனைதாக்கி
மூதண்ட சுவாசமதை நிறுத்துவாயே. 829

நிறுத்துமே கபாலத்தின் வாசலாக
நிஷ்களங்க மானதொரு வமுர்தமப்பா
பொறுத்துமே துளிதுளியாய் வீழும்பாரு
போக்கான வமுர்தமென்ற சலத்தினாலே
நிறுத்துமே நெஞ்சோடு மமிர்தமெங்கும்
நிலையான பசுபதியின் களையைப்போக்கும்
அறுத்துமே கபரோக மகன்றுபோகும்
அப்பனே கருணைநிலை யுன்னிப்பாரே. 830

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

உன்னவே பசுபாசக் களையினாலே
வுத்தமனே சலமதுவு மமிர்தமாகும்
தின்னவே பசிகால மாறிப்போகும்
தீர்க்கமுடன் காயமது சுட்கிக்கொள்ளும்
பன்னவே காயாதி யிதற்கொவ்வாது
பாலகனே சித்தமிர்த மிதுவேயாகும்
மன்னவனே யிச்செய்கை வெளிவிடாதே
மகாதேவ ரசுவனியார் திருக்கூத்தாச்சே. 831

## பேரின்ப வீடு

கூத்தான கூத்ததுதான் சொல்லொண்ணாது
குறிப்புடனே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
சாத்தலெனும் பேரின்ப வீட்டைச் சொல்வேன்
சகாதேவா புலஸ்தியனே வளமைசொல்வேன்
நாத்தவரா திருந்துமே ராஜயோகி
நாட்டிலே வெறுப்புடனே சிற்றின்பத்தை
தூத்தியே புரம்பாக்கிப் புண்ணியவானே
துப்பகற்றி நல்வழிக்கி யிடந்தான்கேளே. 832

கேளப்பா சாத்திரங்க ளுரைத்தவண்ணம்
கெவனமுடன் கண்டுமே யாராய்ந்தப்பா
நாளப்பா வீண்தெய்வங் கொள்ளலாகா
நட்பான தேவதையுந் துதிக்கலாகா
பாளப்பா பிடாரிமுதல் துர்க்கைதேவி
பாங்கான பிரணவங்கள் சூட்சமார்க்கம்
ஆளப்பா மெய்ஞ்ஞானி சாத்திரங்கள்
அப்பனே தள்ளலது நன்மையாமே. 833

நன்மையா மாய்கையற நிற்கவேண்டும்
நாதாக்கள் சாத்திரத்தை யறிதல்வேண்டும்
துன்மையாம் சமையங்கள் கட்டறுத்தல்
சுருதிபெறும் சாத்திரங்கள் நுணுக்கங்கண்டு
வண்மையா மிதிகாசம் சிக்கறுத்தல்
வளமுடனே லோகத்தின் வாழ்க்கை நீக்கி
தென்றிசையில் சித்தர்முனி காண்பதற்கு
தேற்றமுடன் கண்டுரைத்த பெருநூலாமே. 834

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நூலான பெருநூலா மின்னூல்போல
நுணுக்கமுடன் கொள்ளுவது மிதிகாசந்தான்
பாலான நூலிது பெருநூலப்பா
பாலகனே யசுவனியார் யெந்தமக்கு
காலான பதிகண்டு தடமுங்கண்டு
கன்னவனே யுறுதிகொண்ட கடல்தானப்பா
மாலான பெருநூலாம் கர்மகாண்ட 835
மன்னவனே பன்னீரா யிரந்தானாமே.

## சதுரகிரி கர்ம காண்டம்

ஆமேதான் பன்னீரா யிரந்தானப்பா
அப்பனே கர்மகாண்டம் தாமுரைத்தார்
போமேதான் சத்த சாகரந்திரிந்து
பொங்கமுடன் மாணாக்கள் பிழைக்கவென்று
தாமேதான் பாடிவைத்தார் கர்மகாண்டம்
தாரணியில் சதுரகிரி மேற்கேபாலா
நாமேதான் சொன்னபடி சுரங்கமப்பா 836
நாயகனே பாதாள வரையுண்டாமே.

வரையான வரைக்குள்ளே சமாதிசித்தர்
வளம்பெரிய காவணத்தின் சுரங்கமப்பா
திரையான மறவுடனே திட்டுவாசல்
தீர்க்கமுள்ள வாஞ்சனேயர் காவலப்பா
குறைநீக்கி யுட்சென்றால் சித்தர்காவல்
குறிப்புடனே யவர்பாத மஞ்சலித்தால்
உரையுடனே யுந்தமக்கு வாசீர்மங்க்ள் 837
வுத்தமனே யனேகமாய்க் கோடிப்பாரே.

கோடிப்பார் யாரென்று வினயங்கொண்டு
கொற்றவனே யுந்தமையுங் கண்டுபேசி
ஆடிப்பாய்க் கேட்டாக்கால் என்பாய்கேண்மோ
அப்பனே சாத்திரங்க ளதீதத்தோடு
நீடியதோர் நெடுங்கால மருளும்பெற்று
நிஷ்களங்க மாகவல்லோ விடையுங்கண்டு
தேடியே தங்களிடம் வந்தேனென்று 838
தெளிவுறவே தாமுரைப்பாய் திறமையோனே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha
திறமாகக் கேட்கையிலே திவ்வியமோகா
தீர்க்கமுள்ள குஞ்சிதமே திகழ்வல்லோனே
குறமான கர்மகாண்டம் பெருநூலப்பா
குருபரனே காண்பதற்கு வந்தேனென்று
சிரமுடனே யவர்பதத்தை தாள்பணிந்து
சிற்பரனே நமஸ்கார மஞ்சளித்து
அறமதுவும் வழுவாமல் புண்ணியவானே
அங்ஙனமே நூல்கண்டு வருகுவீரே. 839

வருகுவீர் யின்னமொரு மாற்கம்சொல்வேன்
வளமுடைய பாஞ்சால்லிய புலத்தியாகேள்
திருவான கோவிந்தா கோபாலாகேள்
தீர்க்கமுட னுந்தமக்கு யாவுமீய்ந்து
பெருமையுடன் நூல்கொடுத்து வழியும்சொல்லி
பேரான வம்பலத்தை திறந்துகாட்டி
துரையான நூல்கொடுத்து வழியுங்கூறி
நுட்பமுடன் பொதிகைக்கி யேகென்பாரே. 840

## யானைமலை அயிராவத காயகற்பம்

ஏகியே விடையதுவும் பெற்றுக்கொண்டு
யெழிலான யானையின்றன் மலைதானப்பா
தூங்கியே திரியாதே துய்யபாலா
துப்புரவாய் வைராவத மலைதான்சொல்வேன்
தாங்கிடவே மலையோரங் குண்ணுமுண்டு
தண்மையுள்ள வடபாக மேற்கேயப்பா
ஓங்கியதோர் கல்லப்பா ஜெகந்தான்பத்து
வுத்தமனே. வடையாளங் கண்டுகொள்ளே. 841

கொள்ளவே கல்லருகில் கிட்டேசென்றால்
கொற்றவனே தாப்பாளும் சங்கிலிதானுண்டு
எள்ளளவும் பிசகாது துய்யபாலா
யெழிலான் சங்கிலியைத் தொட்டபோது
உள்ளவே வழிகாட்டு மன்னாகேளு
வுத்தமனே நெடுந்தூரஞ் சென்றுபாரு
வள்ளலுயர் சித்துமுனி நாதரய்யா
வளமுடனே கொலுவிருக்க காணலாமே. 842
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காணலாம் சித்துமுனி கண்டபோது
 கைலாய தேவரிடி வாக்கேதென்றால்
பூணவே சிறுபாலா யார்தானென்பார்
 புங்கவனே புகழுடைய புனிதவானே
மாணமருங் கல்வியுள்ள ரசுவனியாரப்பா
 மகத்தான பேரனென்று வழுத்தக்கேளீர்
ஆணவங்கள் தானொடுங்கி புலஸ்தியானே
 அடிவணங்கி தெண்டனுடன் பணிகுவாயே. 843

தெண்டனுடன் காவலனே நிற்கும்போது
 தேற்றமுட னசரீரி வாக்குண்டாகும்
கொண்டுமே கைலாகு விடைகள் தந்து
 கொற்றவனே வயிராவதந் தன்னிற்கிட்டும்
மண்டலமா முயரமது போலேகாட்டு
 மகத்தான சித்துமுனி யருளினாலே
சண்டமா ருதம்போல தடாகம்காண்பாய்
 சாங்கமுடன் பொதிகையின்றன் மாய்கைதானே. 844

தானான பலகையாம் பொதிகைசங்கம்
 தட்டாமல் கண்டவுடன் கண்ணிற்றோற்றும்
கோனான சித்தரிட மருகிற்சென்று
 குருபரனே காயாதி கேட்பாயப்பா
மானான மகதேவர் கொண்டபற்ப
 மகத்தான வசுவனியார் கற்பமப்பா
தேனான கற்பத்தை கொண்டபோது
 தேகமது கற்றூணா யிருக்ும்பாரே. 845

பாரப்பா கற்பமது கொண்டபோது
 பளிங்கான வரையாதி யிருக்கலாகும்
நேரப்பா காயாதி கற்பத்தாலே
 நெடிதான சித்துவிளை யாடலாகும்
தீரப்பா சிவயோகம் செய்துகொண்டு
 சிற்பரனை யெந்நாளு மூறதிகொண்டு
கூரப்பா ஞானோபதேசந்தன்னை
 குறிப்புடனே உபதேசஞ் செய்குவீரே. 846

CC0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

செய்யவே சித்துவிளை யாடலாகும்
　　செயலான பாக்கியமும் பெருகலாகும்
துய்யநல்ல கதிபெறவே வுபதேசங்கள்
　　துப்புரவாய் பெறுவதற்கு நாளும்கிட்டும்
பையவே சீஷவர்க்க மூலத்தோர்க்கும்
　　பட்சமுட னுபதேசம் செய்வீரப்பா
மெய்யுடனே காயாதி கற்பத்தாலே
　　மேதினியி லெந்நாளு மிருப்பீர்தாமே. 847

இருக்கவே வெகுநூல்க ளாராய்ந்தப்போ
　　யெழிலான சமாதிக்கு யிடமுண்டாக
பெருக்கவே மனோன்மணியா ளருளும்பெற்று
　　பொங்கமுடன் விட்டகுறை தானகற்றி
திருக்கமலம் வீற்றிருக்கும் புனிதமாதை
　　தீர்க்கமுடன் றரிசனைக்கு முன்னேநிற்க
மருக்கமுட னருள்பெற்று மன்னாகேளு
　　மார்க்கமுடன் யோகநிலை கொள்ளுவாயே. 848

கொள்ளவே புலஸ்தியனே கணிதவானே
　　கொற்றவனே பூபாலா சொல்லக்கேண்மோ
தெள்ளமிர்த மானதொரு புண்ணியவானே
　　தெவிட்டாத யென்கோவே தெளிவுள்ளானே
கள்ளமில்லா சீஷருக்கு யிந்தபாகம்
　　காட்சியுட னுபதேசப் பொருளுமீய்ந்து
உள்ளபடி தேகமதை கற்றூணாக்கி
　　வுத்தமனே சமாதியது யேகுவீரே. 849

ஏகவென்றால் பன்னீரா யிரத்திநேர்மை
　　யெழிலான சாத்திரங்கள் கூறவில்லை
சாகமது நேராது சமாதியோகம்
　　சட்டமுடன் நெடுங்காலம் தகமைகொள்வாய்
ஆகமாய் கைதவத்தை விட்டிடாதே
　　யுத்தமனே சாயுச்சிய பதவிகிட்டும்
ஆகமங்கள் பொய்யாது அன்புள்ளானே
　　அப்பனே சூட்சவழி யறிந்துசொல்லே. 850

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## குளிகை சமுதாய சுரலட்சணம்

சொல்லவே யின்னமொரு வகைமானங்கேள்
சுந்தரனே புலஸ்தியனே சுகுணதீரா
வெல்லவே குமரியது வங்கசத்து
வேகான கொடிவேலி செம்புமாகும்
புல்லவே கவுதும்பை வுப்புமாகும்
புகழான வேளையது ஈயமாகும்
நல்லவே புளியாரை செம்புமாகும்
நவிலவொண்ணா செம்புளிச்சி செப்புமாமே. 351

செம்பான பசளையது வும்புமாகும்
சிவப்பான கற்றாழை செம்புமாகும்
கம்பான கருணையது செம்புமாகும்
காசிலிதான் மூலியது சொர்னமாகும்
வெம்பான வேம்பதுதா னீயமாகும்
வீரான யெருக்கதுதா னீயமாகும்
தும்பான துளசியது வுப்புமாகும்
துடியான சோராவும் சொர்ணந்தானே. 352

தானான கஞ்சாவும் சொர்ணந்தானாம்
சார்பான வாவாரை செம்புமாகும்
மானான தாமரையும் செம்புதானாம்
மகத்தான வல்லியது செம்புமாகும்
கோனான வாளியது செம்புமாகுங்
கொற்றவே காட்டாத்தி யீயமாகும்
பானான செய்குரண்டி சொர்னமாகும்
பளிங்கான யெலிக்காதி பொன்னுமாமே. 353

பொன்னான கருஹுமத்தன் சூதமாகும்
போக்கான வில்வமது செம்புமாகும்
மன்னான செயகுறண்டி செம்புமாகு
மகத்தான செங்கீரை யீயமாகும்
தென்னவனே வரப்பூலா வுப்பதாகும்
தெளிவான குறட்டையது யீயமாகும்
பன்னவே குவளையது யீயமாகும் 354
பாங்குடனே கருவேலு மிரும்புதாமே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தாமான பாற்குண்டி யியசத்து
தகைமையுள்ள ஹஞ்சலது யீயமாகும்
நாமேதா னுரைத்தவண்ணம் பலாவுமப்பா
நலமான யீயத்தின் சத்தேயாகும்
ஆமேதான் மாமரமும் செம்பேயாகும்
அப்பனே பாற்சொரண்டி யீயமாகும்
போமேதான் பெருந்தும்பை சொர்னமூலி
பொங்கமுடன் கருந்துரா வீயமாமே. 855

ஈயமாம் பாளையது செம்பேயாகு
மெழிலான வேங்கையது செம்புசத்து
தூயகற்பம் பனைமூல மீயமாகும்
தூக்கான சேரானுமே செம்பேயாகும்
சாயபாம் கையானுஞ் செம்புசத்து
தாக்கான கருங்குன்றி யீயமாகும்
மாயமர மணித்தக்கா ளீதானப்பா
மன்னவனே வுப்பனிட சத்துமாமே. 856

சத்தான மூலியது சின்னியப்பா
சதுரான சூதமென்ற சத்தேயாகும்
முத்தான பிரமதண்டு மூலிதானு
முயர்ச்சியுள்ள தங்கசத்து யென்னலாகும்
கொத்தானு மூலியது யீயமாகும்
கொற்றவனே ருத்திராட்சம் செம்பேயாகும்
முத்திதருங் கொன்றையது செம்பேயாகு
முடிமன்னா புலஸ்தியனே யின்னங்கேளே. 857

கேளப்பா பேய்த்தும்பை யுப்புமாகும்
கெடியான நாய்த்தும்பை யீயமாகும்
வாளப்பா நறுங்கொன்றை யீயச்சத்து
வளமான புங்கனது பொன்னாஞ்சத்து
நாளப்பா செம்மனுட யிலைதானப்பா
நலமான செம்பினிட சத்துமாகும்
கோளப்பா கொடிமுந்திரி யெலைதானப்பா
கொற்றவனே சூதமென்ற சத்துமாமே. 858

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சத்தான களாவினிட யெலைதானப்பா
சார்பான ரவியினிட சத்தேயாகும்
முத்தான வெள்வேலன் யெலைதானப்பா
முதிர்ந்தவுப்பு சத்தாகு மின்னங்கேளாய்
சித்தான சிறுகுரிஞ்சான் சத்துமப்பா
சிறப்பான மல்லியது பொன்னுமாகும்
குத்தான சரக்கொன்றை செம்புசத்து
குரூரமாம் வாழையது வுப்புமாச்சே. 859

ஆச்சப்பா மூக்குறட்டை ரவிசத்தப்பா
அப்பனே கருங்காலி பொன்னுமாகும்
மாச்சலது நேராத நெல்லிமூலி
மகத்தான சூதத்தின் சத்துமாகும்
பாச்சலது வாராத துராதானப்பா
பாங்கான பொன்னிட சத்தேயாகும்
தீச்சலென்ற யெலந்தையது சத்தேயுப்பாம்
திறமான நெய்ச்சிட்டி யுப்புதானே. 860

தானான தக்காளி சத்தேஈயம்
தகமையுள்ள செருப்படையாம் செம்பேயாகும்
மானான பொன்னாவுங் கண்ணியப்பா
மன்னவனே வுப்புனிட சத்தேயாகும்
தேனான வாடுதிண்ணாப் பாளையப்பா
தெளிவான செம்பினிட சத்தேயாகும்
பானான பரட்டையுட கீரையப்பா
பாலகனே ஈயமென்ற சத்தேயாமே. 861

சத்தான சித்துவகை யெலைதானப்பா
தாரணியில் கண்டமட்டு நாமுரைப்போம்
வித்தான மூலியது சொர்னமூலி
வேதாந்தத் தாயுரைத்த விலாரியாகும்
சுத்தமுள்ள மூலியது காரமெத்த
சுயம்பான கோடாவின் சுழிதானாகும்
பத்தான மூலியது பசுந்தங்கந்தான்
பாருலகில் நாதாக்கள் கண்டதாமே. 862

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கண்டதொரு யெலைவகைக ளனந்தமுண்டு
காசினியில் சித்தர்முனி மறைத்தபாகம்
விண்டுரைத்தா லோகமெல்லாஞ் சித்தாய்ப்போகும்
வேதாந்தத் தாயுரைத்த விபரமாகும்
தொண்டுசெய்து பெற்றதொரு மூலியப்பா
தோராத கைகண்ட யெலையுமாகும்
வண்டினங்கள் முகருகின்ற யெலைகளப்பா
வளம்பெரிய காட்டகத்தே யனேகமுண்டே. 863

காட்டமுடன் யெலைகளது யின்னஞ்சொல்வேன்
கருவான புலஸ்தியனே யவிழ்ந்துகேளீர்
தேட்டமுள்ள யெலைகளது சத்துசொன்னேன்
தெளிவான சத்துவகை கோடியுண்டு
நாட்டமுள்ள சமுதாய யெலைகளப்பா
நாம்கண்ட யெலைகளது லக்கோயில்லை
வாட்டமுடன் மித்துருவு சத்துருவுதானு
மகத்தான யெலைக ளற்புதமும்பாரே. 864

## சரக்குக்கு காலன்மூலி

பாரப்பா மூலியது கருவூமத்தை
பரிவான பாஷாணந் தன்னைக்கொல்லும்
நேரப்பா கவுதும்பை யெலைதானப்பா
நெடிதான சலாசத்தை கொல்லுங்கொல்லும்
வீரப்பா விராலியது யெலைதானப்பா
விரைவான கெந்தகத்தைக் கொல்லும்பாரு
கூரப்பா கண்டங் கத்திரிதானப்பா
குதிப்புடனே தாளகத்தைக் கொல்லுந்தானே. 865

தானான முசுமுசுக்கை யெலைதானப்பா
தமைமையுள்ள பூரத்தைக் கொல்லுமப்பா
கோனான பல்லியென்ற பூண்டுதானும
கொற்றவனே வீரத்தைக் கொல்லுமப்பா
தேனான சிவகரந்தை தானுமப்பா
தேட்டமுள்ள லிங்கத்தைக் கொல்லுமப்பா
மானான செவ்வல்லி மூலியப்பா
மகத்தான கெவுரியைத்தான் கொல்லும்பாரே. 866

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கொல்லவே சிறுபுள்ளு யெலைதானப்பா
கொற்றவனே வரிதாரந் தன்னைக்கொல்லும்
சொல்லவே செங்குரிஞ்சான் யெலைதானப்பா
சுந்தரனே துரிசியைத்தான் கொல்லுமையா
வெல்லவே கற்றாழை தானுமப்பா
வேட்கமுடன் பால்துத்தந் தன்னைக்கொல்லும்
புல்லவே சிற்றகத்தி யெலைதானப்பா
புகழான வங்கத்தைக் கொல்லுந்தானே. 867

தானான புலஸ்தியனே மச்சகேந்திரா
தண்மையுட னின்னம்வெகு யெலைதானப்பா
வேனான காஞ்சோறி தழைதானப்பா
வேகமுள்ள சூதமதைக் கொன்றுபோடும்
பானான முள்ளங்கி தழைதானப்பா
பாலகனே சிங்கியைத்தான் கொல்லும்பாரு
கானான சிறுசின்னி தழைதானப்பா
காந்தமென்ற பாஷாண மடியும்பாரே. 868

மடியுமே யெருக்கினிட பாலினாலே
மகத்தான சங்கு பாஷாணம்கொல்லும்
நெடியதோர் கொடிவேலி தழைதானப்பா
நேரான வெடியுப்பைக் கொல்லும்கொல்லும்
கடியான மருதனிட தழைதானப்பா
கதிப்பான கல்லுப்பை நின்றுகொல்லும்
துடியான துராவினிட தழைதானய்யா
துப்புரவாய் சாரமதைக் கொல்லுங்காணே. 869

காணவே வேலியென்ற மூலியப்பா
கருவான படிகாரந் தன்னைக்கொல்லும்
பூணவே கொல்லிக்குப் பல்லியப்பா
புகழான சூதமதைக் கொல்லும்பாரு
நீணவே வைவேலி யெலைதானப்பா
நிஷ்களங்க மானகல்லுப்பைக் கொல்லும்
ஆணவமாம் கட்டுகொடி தழைதானப்பா
அப்பனே சுக்கானைக் கொல்லுமாமே. 870

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஆமேதான் கற்றாமரை தானுமப்பா
அப்பனே நிமிளையது தன்னைக்கொல்லும்
தாமேதான் பூவரசி மூலியப்பா
தனியான வெள்வங்கத் தன்னைக்கொல்லும்
நாமேதான் குறட்டையென்ற யெலைதானப்பா
நலமான வம்பர்தனை சாகச்செய்யும்
போமேதான் பொன்முசுட்டை யெலைதானப்பா
பொங்கமுடன் வப்பிரேக மடியும்பாரே. 871

மடியுமே கருவேலன் தழையினாலே
மகத்தான முத்திராட்சந் தன்னைக்கொல்லும்
துடியான பூவந்தி தழைதானப்பா
துப்புரவாய் நாகமதைக் கொல்லும்பாரு
வெடியான சிரியானி னங்கையப்பா
வேட்டமுடன் அயமதனைக் கொல்லலாகும்
தடியான தழுதாழை மூலியப்பா
சாங்கமுடன் செம்புதனைக் கொல்லுங்காணே. 872

காணவே யிம்பூரா யெலைதானப்பா
காவலனே பாஷாண மடிதலாகும்
தோணவே கடல்பாலை மூலிதானும்
தோராமல் பொன்னம்பர் தன்னைக்கொல்லும்
மாணவே மாந்துளிரோ யென்னசொல்வேன்
மகத்தான வுப்புக்குக் காலனாகும்
சாணளவு தழையப்பா கடலிரஞ்சி
தப்பாது வெள்ளவங்க மடியுந்தானே. 873

மடியுமே புனல்முருங்கை பாஷாணந்தான்
மகத்தான காரமது யென்னசொல்வேன்
முடியுமே பொன்னினா வானரயப்பா
மூதண்ட தங்கமதைச் சாகச்செல்யும்
துடியான சித்திரமாம் பாலையப்பா
துப்புரவாய் செம்பதுதான் சவளைசெய்யும்
குடியான பொன்காவலன் தழைதானப்பா
கூறுகின்ற வயமதனை மடிக்கும்பாரே. 874

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பார்த்திடவே செங்குவள மச்சகேந்திரா
பாவலனே ஞானத்தி னுண்மையோனே
பூர்க்கமலம் கபாருந்திருக்கும் புண்ணியபாலா
புங்கவனே கவுபால் மெச்சுந்தீரா
ஏர்க்கவே கொங்கிலவன் தழைதானப்பா
யெழிலான பிரதியுப்பு தன்னைக்கொல்லும்
தீர்க்கமுடன் சிவனாரு தழைதானப்பா
திறமுடனே சூதமதை மடக்கும்பாரே 875

## பஞ்சபூத தழைகள்

மடக்கவே யின்னமொரு வகைமானங்கேள்
மன்னவனே புலஸ்தியனே மணியேகேண்மோ
படர்க்கையாந் தழைகளப்பா பஞ்சபூதம்
பாரினிலே மாணாக்கள் பிழைக்கவென்று
அடக்கமாம் பூதவகை பிரித்துக்காண்பாய்
அப்பனே பஞ்ச பூதத்தின் நேர்மை
றுடக்கமா மெலையதுவும் தவறிடாது
சுத்தரனே விபரமது சாற்றக்கேளே. 876

சாற்றவே செம்பாளை பிரிதிவாகும்
சார்பான கவுதும்பை வாயுமாகும்
போற்றவே துராவது வுப்புவாகும்
பொலிவான கிரந்தையது தேயுவாகும்
ஆற்றவே காஞ்சோரி வாகாசந்தான்
அப்பனே வைந்தாகப் பிரிக்கும்போது
கூற்றனைப்போல் சரக்குக்குக் காலனாச்சு
குவலயத்தி லாரறிவா ரிந்தக்கூத்தே. 877

கூத்தான குமரியது தேயுவாகும்
குணமான காசானும் வாயுமாகும்
நாத்தமுள்ள சங்கனும் ஆகாசமாகும்
நலமான புளியாரை பிரிதிவாகும்
சாத்தமுடன் பீநாறி யெலைதானப்பா
சாங்கமுட னப்புவென்றே செப்பலாகும்
நேர்த்தியுள்ள சரக்கெல்லா மொன்றாய்ச்சேர்த்தால்
நேர்மையுள்ள பஞ்சபூத மென்னலாமே. 878

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

என்னவே யைந்ததைந்தாய் பிரித்துப் பார்த்து
யெழிலான சரக்கெல்லாம் கூட்டினாக்கால்
பன்னவே பஞ்சபூத மென்னலாகும்
பாருலகில் நாதாக்கள் பகுத்தவண்ணம்
துன்னவே பஞ்சபூத குறவுபட்டால்
துப்புறவாய் பேதமது வகுத்துக்காட்டும்
நன்னயமாய் பூதங்கள் தரித்துமல்லோ
நலமுடனே நடத்துபவன் வாதியாமே. 879

வாதியாம் லோகமெலாம் ப்ஞ்சபூதம்
வகுப்புடனே கார சாரங்களெல்லாம்
சோதிமுனி வகுத்ததோர் நூலிற்காண்பீர்
சுந்தரனே யின்னூலிற் சுருக்கிச்சொன்னோம்
ஆதியா மன்னூலிற் சொன்னநேர்மை
அப்பனே யிந்நூலிற் கூறவில்லை
நீதியாம் நுணுக்கவகை மாத்திரந்தான்
நிஷ்களங்க மாகவல்லோ நிர்மித்தோமே. 880

நிர்மித்த சாத்திரமு மைந்துபூதம்
நிஷ்களங்க மாகவேதான் பஞ்சகர்த்தாள்
பிர்மிக்க வாடுகிற கூத்தெல்லாம்தான்
பேருலகில் நாதாக்க ளாடுங்கூத்து
சர்மமது தேகமது வுருவேயானால்
தகைமையுட னுருவுக்கு மைந்துபூதம்
கர்மிகளும் பாபிகளு மறியமாட்டார்
காசினியில் புண்ணியற்கு கிட்டுந்தானே. 881

கிட்டினால் சாத்திரங்கள் முறைபாடோடும்
கிருபையுடன் மனோன்மணியா ளருளும் வேண்டும்
எட்டினால் விட்டகுறை யிருக்கவேண்டும்
யெழிலான பாபகர்மம் நீக்கல்வேண்டும்
திட்டமுடன் வெகுகோர்வை நூல்கள் கண்டால்
தீர்க்கமுடன் வுபதேசம் பெறுகலாகும்
சட்டமுட னசுவனியார் சொன்னநீதி
சாற்றினே னுந்தமக்காய் சாற்றினேனே. 882

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## சக்தி சோதிக்கக் கிராவணம்

சாற்றினேன் புலஸ்தியனே மச்சகேந்திரா
சர்ங்கமுடன் சத்துசோதிக்க மித்திரம்
போற்றிய வெண்கார மொன்றேயாகும்
புகலான வளையலது மொன்றேயாகும்
கூற்றனாம் வீரமது வொன்றேயாகும்
குறிப்புடனே யிவைகளெல்லாம் பொடியதாக்கி
ஆற்றவே செம்புதனை யுருக்கிப்பாலா
அப்பனே கிராசமது கொடுத்திடாயே. 883

கொடுக்கவே யின்னமொரு மாற்கங்கூர்வேன்
கொற்றவவே வெங்காரம் வீரந்தானும்
அடுத்ததோர் பூங்காவி வுப்புதானும்
அப்பனே லிங்கமொடு பூரந்தானும்
தொடுத்ததொரு படிகாரம் பொட்டிலுப்புதானும்
தொடுப்பான சாரமுடன் சாம்பல்கூட்டு
மடித்துமே யித்தனையு மொக்கசேரு
மன்னவனே சத்துகளை சோதிப்பாயே. 884

சோதிக்கக் கல்மஷங்க ளற்றுப்போகும்
சுத்தமுடன் களங்கெல்லாம் சவளையாகும்
பேதிக்க களங்கெல்லா முருகியல்லோ
பெருமையாஞ் சவளையது யென்ன சொல்வேன்
ஆதித்தன் சந்திரனோ வெளுத்துக்காட்டும்
அப்பனே முத்துப்போல் காணும்பாரு
வாதிகளோ யிப்பாக மறியமாட்டார்
வளம்பெரிய பன்னீரா யிரந்தான் சொல்லே 885

## சாதிலிங்க கடிகை வேதை

சொல்லவென்றால் லிங்கமது பலமொன்றாகும்
சூட்டுகிறேன் ரவியதுவும் பலந்தான்காலாம்
வெல்லவே குடவனது பலந்தான்காலாம்
வேதாந்தத் துராவதுவும் பலந்தான்காலாம்
புல்லவே ராவியது பொடியதாக்கிப்
போக்கான குன்றியது பசையினாலே
மெல்லவே தான்பிரட்டி லிங்கத்திற்கு
மேலான கவசமது செய்திடாயே. 886

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

செய்துமே புடமதுவும் பூப்புடந்தான்
செப்புகிறே னுமிதனிலே போட்டபின்பு
நையவே சிவனுப்பு சீனந்தானும்
நாதாந்த செயநீர்தான் வெடியுப்பாகும்
பையவே தானரைத்துப் பதனம்செய்து
பக்குவமாய் லிங்கத்திற் கங்கிபூட்டி
துய்யவே முன்போலப் புடத்தைப்போடு
துப்புறவாய் லிங்கமது கட்டிப்போச்சே. 887

கட்டியதோர் லிங்கமதைத் தானெடுத்துக்
கருவான செம்புதனை யுருக்கிமைந்தா
நட்டமிலா லிங்கமது பத்துக்கொன்று
நாயகனே தான்கொடுக்க வுரிந்துகொள்ளும்
திட்டமுடன் செம்புதனை யெடுத்துபாலா
துப்புரவா யூதிவிடு தங்கச்செம்பாம்
கட்டமுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று
கருத்துடனே கொடுத்திடவே மாற்றாறாமே. 888

ஆறான மாற்றதுவு மென்னசொல்வேன்
அப்பனே வாரடித்துப் புடந்தான்போடு
தூறான பொன்னதுவும் மாற்றோபத்து
துப்புறவாய் நாதாக்கள் தங்கமாச்சு
கூறான தங்கமது பிறவித்தங்கம்
குவலயத்தி லாருந்தான செய்யமாட்டார்
வாறான புண்ணியோர்கள் செய்யுந்தங்கம்
வளமான பாபிகட்கு கிட்டாதன்றே. 889

கிட்டாது யிம்மார்க்கம் கிட்டாதப்பா
கீர்த்தியுள்ள புலஸ்தியனே புண்ணியபாலா
முட்டாளா யிருந்தோர்க்கு பாபம்கிட்டு
மூதுலகில் விதியாளி யறிவான்பாரு
சட்டமுடன் பன்னீரா யிரந்தானப்பா
சாங்கமுடன் கண்டவர்கள் மோட்சங்கொள்வார்
இட்டமொழி தவறாது அசுவனியார்வாக்கு
யெழிலான குருவாக்கு என்னவாமே. 890

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## ஜெயவீரராசன் குளிகை

என்னவே யின்னமொரு வகைமானங்கேள்
யெழிலான புலஸ்தியனே புகல்வேனப்பா
சொன்னதொரு வீரமது பலந்தானாகும்
சுந்தரனே தானெடுப்பாய் தில்லைப்பாலில்
நன்னயமாய் ரவிதனிலே காயப்போடு
நலமாக கட்டியது முழுகமட்டும்
பன்னவே காய்ந்தபின்பு வீரந்தன்னை
கருவாகக் கவசமது செப்பக்கேளே. 891

செப்பவென்றால் பொன்னம்பர் பலமதாகும்
செப்பமுள்ள சூதமது பலமேயாகும்
ஒப்பமுடன் இரண்டையுந்தான் வேமப்பாலால்
வுத்தமனே மெழுகுபத மாக்கியேதான்
தப்பிதங்கள் நேராமல் தம்பிரானே
தண்மையுடன் தானரைப்பாய் சாமம்நாலு
மெப்புடனே வெண்ணெய்யென்ற மெழுகுதன்னை
மேன்மையுடன் வீரத்துக் கங்கி கொள்ளே. 892

கொள்ளவே வீரமதை ரவியில்வைத்து
கொப்பெனவே சுண்ணாம்புச் சீலைதன்னால்
எள்ளளவும் பிசகாமல் துய்யபாலா
யெழிலான ரவிதனிலே காயவைத்து
தெள்ளமிர்த மானதொரு புடந்தான்கோழி
தேற்றமுடன் றான்போட்டு யெடுத்துப்பாரு
உள்ளபடி வீரமது மணிதிரண்டு
வுத்தமனே குளிகைபோ லாகுந்தானே. 893

தானான குளிகையது யென்னசொல்வேன்
தாயாரு மனோன்மணியாள் மெய்ச்சும்வீரம்
மானான மகாரிடிகள் பதினெண்பேர்கள்
மண்டலத்தில் மெச்சுகின்ற குளிகையாகும்
கோனான ராஜர்பதி மன்னர்மெச்சும்
கோபாலா யிக்குளிகை கணக்கோமெத்த
தேனான தேவரிடி யகுவனியார்தாமும்
தெளிந்துரைத்த குளிகையது யெனக்குத்தாமே. 894

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

எனக்குரைத்த குளிகையது வீரமப்பா
 யெழிலான பாகமதை கண்டாராய்ந்து
மனக்குறைக ளில்லாமல் மகிமைவானே
 மண்டலத்தில் யாமுனக்கு யுரைத்தோமப்பா
சினமதுவும் நேராமல் தீரவானே
 சிக்கெனவே முறையோடு முடிப்பாயானால்
கனமான குளிகையினால் அநேகங்காட்சி
 காசினியில் காண்பதற்கு விடமுண்டாமே. 895

இடமான குளிகைதனை யெடுத்துமைந்தா
 யெழிலுடனே ஆவதுவுங் கறவுங்காலம்
திடமான மனதுடனே குளிகைதானும்
 தீர்க்கமுடன் முதுகின்மேல் வைத்தாயானால்
கெடமான ஆவதுவும் பால்தானப்பா
 கேண்மையாங் கறவாது குளிகையாலே
விடமான குளிகைதா னெடுத்தபோது
 வீரான பாலமுர்தஞ் சுரக்குந்தானே. 896

சுரக்குமே பாலமிர்த மதிகங்காணும்
 சுந்தரனே யிக்குளிகை பெருமைமெத்த
உரத்ததொரு குளிகைக்கு யின்னங்கூற்வேன்
 வுத்தமனே வீரனென்ற ராசன்தானும்
இரப்பதற்கு சீவனத்துக் கிடமேதென்றால்
 யெழிலான சித்தருட மரபுகண்டு
நிரக்கவே குளிகையது யெடுப்பாய்மைந்தா
 நிஷ்களங்க மாகவேதா னுரைக்கக்கேளே. 897

உரைக்கவே யாறுவகை செயநீர்தன்னால்
 வுத்தமனே ரசிதமென்ற தகட்டிலப்பா
திரையதுவும் நேராமல் துய்யபாலா
 துப்புரவா யணுவளவு தடவினாக்கால்
புரையாகி வெள்ளியது பழுக்குமப்பா
 புங்கசித்தி கொண்டதொரு புண்ணியபூபா
மறைவான புடமதுவு மிட்டபோது
 மகத்தான தங்கமது பற்றுமாக்கே. 898

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பத்தான மாத்துமது பகரொண்ணாது
பாரினிலே சித்தரிடி மெய்ச்சும்வேதை
சித்தான நவகோடி ரிடிகள் நாதர்
சிறப்புடனே தாம்கண்டு மதிக்குந்தங்கம்
முத்திபெறும் சிவயோகி மாண்பருக்கு
மூதுலகி லசுவனியார் சொன்னநீதி
எத்திசையுங் காணார்க ளிந்தப்போக்கு
யெழிலாகத் தானுரைத்த குளிகைபாரே. 899

பாரப்பா யிக்குளிகை குடவனிலேயூட்ட
பழுக்குமடா குடவனுமோ தங்கம்தங்கம்
நேரப்பா சொல்வதற்கு நாவோயில்லை
நெடிதான பசுமையுள்ள பிறவித்தங்கம்
சீரப்பா யிக்குளிகை செம்பினிலேயூட்ட
சிறந்ததொரு செம்பொன்னு தங்கமாகும்
கூறப்பா சிவயோகத் தங்கமென்று
குவலயத்தில் சொற்லுதற்கு நாவுண்டாச்சே. 900

உண்டான யிக்குளிகை யென்னசொல்வேன்
உத்தமனே வனாந்திரங்கள் செல்லும்போது
தண்டகா ரணியமதி லேகுங்காலம்
தற்பரனே குளிகையது தன்னையப்பா
கொண்டதொரு குளிகைதனை கயிறுமாட்டி
கொற்றவனே யிடுப்பதனி லங்கிமாட்டி
மிண்டுடனே காட்டகத்தே செல்லும்போது
மிக்கான தனிவழியுங் காணார்பாரே. 901

தனியான பாதைவழி நடக்கும்போது
தண்மையுள்ள கானகமும் கண்ணிற்தோற்றா
முனியான ராட்சதரும் தம்மைத்தீண்டா
ருத்தமனே யேவல்பில்லி சூனியந்தான்
கனியான சித்தர்முனி நாதர்தாமும்
கண்டாலு முனதிடத்தி லொன்றும்பேசார்
பனியான வனாந்திரங்கள் செல்லுங்காலம் 902
பாலகனே மிருகங்கள் கிட்டாதன்றே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

அன்றான யானைமுத லேனைத்தானும்
அப்பனே யுமைக்கண்டால் வணங்கும்பாரு
குன்றான கஜமுதலும் சிங்கம்யாளி
சூரான புலிகரடி செந்நாய்தானும்
வென்றிடவே யுனைக்கண்டால் விலகிப்போகும்
வேதாந்தத் தாயாரு மருளுண்டாகும்
சென்றாலு மெவ்வனமாம் காடேபுக்கில்
சேராது பசாசுமுதல் குளிகையாமே. 903

முதலான குளிகையது யென்னசொல்வேன்
மூதுலகி லாருந்தான காணாவீரம்
மதவானை வீரனென்ற குளிகையாலே
மகத்தான வேதைமுகம் கோடியுண்டாம்
சதகண்ட ராவணனும் குளிகைகொண்டான்
சதுரான குளிகையது யிதற்கீடுண்டோ
தசகண்ட ராவணனும் குளிகைகொண்டான்
தாரணியி லிக்குளிகைக் கீடொண்ணாதே. 904

## சூடாமணிக் கேசரக் குளிகை

ஒண்ணாது யின்னமொரு மார்கஞ்சொல்வே
னுத்தமனே புலஸ்தியனே புனிதவானே
கண்ணான சூடாமணியை யுந்தமக்கு
காவலனே யாமுரைப்போம் கணிதவானே
மண்ணுலகு குளிகைதனை செய்வதற்கு
மன்னவர்க ளாராலு முடியுமோசொல்
தண்ணுமையாள் கேசரமாம் குளிகையப்பா
தாரணியில் செய்யுகிற விபரங்கேளே. 905

கேளப்பா காந்தமொரு பலமேவாங்கு
கெடியான காந்தமதை சத்தெடுப்பாய்
பாளபபா போகாமல் சத்தைதானும்
பாலகனே சவளையது போலேயாக்கி
மீளப்பா குளிகையது போல்திரட்டி
மிக்கான சாரணைகள் செப்பக்கேளு
ஆளப்பா சாரணைக ளேதென்றாக்கால்
அப்பனே சொல்லுகிறேன் வயணங்கேளே. 906

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வயணமாம் நிமிளையது பலமொன்றாகும்
வாகுபெற வாறுவகை செயநீர்தன்னால்
நயமாகத் தானரைப்பாய் நாலுசாமம்
நாவலனே மெழுகதுபோ லாட்டிமைந்தா
சுயமான மெழுகதனை காந்தத்திற்கு
சுருதிபெற வங்கியது மிகவேபூண்டு
முயலான சீலையது வலுவாய்ச்செய்து
முயற்சியுடன் கோழியென்ற புடந்தான்போடே. 907

போடப்பா யிப்படியே பத்துமுறைபோடு
போக்கான காந்தமது கட்டியேதான்
நீடவே காந்தமது கட்டியேதான்
நீதியுடன் களங்கமதாய் நிற்கும்பாரு
கூடவே காந்தமென்ற குளிகைதன்னை
குருபரனே யெடுத்துமே பின்னுங்கேளு
நாடவே சிவப்பினிட கெந்தியப்பா 908
நாட்டமுடன் ஆறுவகை நீராலாட்டே.

ஆட்டியே மெழுகதுவை யெடுத்துமைந்தா
அப்பனே காந்தத்துக் கங்கிபூண்டு
வாட்டமுடன் சீலையது வலுக்கச்செய்து
வளம்பெறவே ரவிதனிலே காயவைத்து
நீட்டமுடன் கோழியென்ற புடந்தான்தீரு
நிஷ்களங்க மாகவேதான் யிறுகிக்கட்டும்
தேட்டமுடன் புடமாறி யெடுத்துப்பாரு 909
தெளிவான காந்தமது சொல்லொண்ணாதே.

சொல்லவே நாவில்லை சுந்தரவானே
சொற்பெரிய நாதாக்கள் செய்யும்வேதை
வெல்லவே யிக்குளிகை யார்தான்காண்பார்
வேதாந்தத் தாயாரும் காண்பாரப்பா
நல்லதொரு குளிகைக்கு யின்னஞ்சொல்வேன்
நாதாந்த சாரணையு மின்னமுண்டு
கொல்லவே சோதியென்ற விருட்சமப்பா 910
கொற்றவனே சொல்லுகிறே னின்னங்கேளே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## நாதாக்கள் சோதி விருட்சம்

கேளேதான் பட்டையது நொறுக்கியேதான்
கெவனமுட னாறுவகை ஜெயநீர்தன்னால்
தாளப்பா யறுசாம மரைத்தபோது
தகைமையுடன் மெழுகதுபோ லாட்டிமைந்தா
நாளப்பா கவசமது குளிகைக்கப்பா
நலமாக செய்துமே ரவியில்வைத்து
பாளப்பா சீலையது வலுக்கசெய்து
பாங்குடனே கோழியென்ற புடந்தான்போடே. 911

போடப்பா யிப்படியே பத்துமுறைபோடு
பொங்கமுடன் காந்தமது யிறுகிக்கட்டும்
நீடவே குளிகையாங் காந்தந்தானும்
நிஷ்களங்க மாகவல்லோ காயகற்பம்
கூடவே காயாதி குளிகையப்பா
குவலயத்தில் சித்தர்முனி செய்யுமார்க்கம்
ஆடவே யிக்குளிகை வேதைகூர்வோம்
அப்பனே துறைமுகமாய் செய்துகொள்ளே. 912

கொள்ளவே குளிகையது வாயிலிட்டால்
கொற்றவனே துலைதூரம் நடந்துசென்றால்
எள்ளளவு மாயாச மிளைப்புமில்லை
யென்னசொல்வேன் குளிகையிட வேகந்தன்னை
விள்ளவே குளிகையது வாயிலிட்டு
வீறுடனே புணர்ச்சியது வாயிரம்பேர்
தள்ளாமல் நாளொன்றுக் காயிரம்பேர்
தகைமையுடன் புணர்ந்தாலும் வெறிதீராதே. 913

தீராது கிருஷ்ணாவ தாரன்போல
தீர்க்கமுடன் லோகபதி மாந்தர்தம்மை
ஆராத போகமுட னணையலாகும்
அப்பனே நீயுமொரு சித்தனாவாய்
சீரான குளிகையினா லனந்தங்கோடி
திறமையுடன் வெகுதொழில்க ளாடலாகும்
ஆராத விளையாட்டு செல்லுமெல்லாது
குவலயத்தில் காந்தத்தின் சித்துமாமே. 914

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## அகஸ்தியர் புலஸ்தியருக்கு போதையில்லாமல் பாடிய நூல்கள் கூறுவது

தாமான நூல்களது கோடியுண்டு
தகைமையுள்ள நூல்களோ லக்கோபியில்லை
சாமானிய மானதொரு பெருநூலப்பா
சாற்றினார் சொல்வதற்கு நாவோயில்லை
போமேதான் யானுமப்பா போதைநீங்கிப்
பொன்னவனே யாமுரைத்த காவியந்தான்
நாமேதா னுரைத்தவண்ண மேதென்றாக்கால்
நாதாக்கள் முன்னாக நவில்கின்றேனே. 915

நவிலான நூலிதுதான் யேதென்றாக்கால்
நயம்படவே ஞான காவியந்தானாகும்
புவிதனிலே கொண்டாடும் பஞ்சகாவியம்
புண்ணியனே வாதமென்ற காவியந்தான்
குவிதமுடன் சொன்னதொரு வின்னமூன்று
குறிப்பான மாந்திரிக காவியந்தான்
விவிதமென்ற அஞ்சாய காவியந்தான்
லட்சணமாங் காவியந்தா னென்னலாமே. 916

என்னவே வயித்திய காவியந்தான்
யெழிலான மாணாக்கற் குகந்தநூலாம்
பன்னவே காவியந்தா னஞ்சேயாகும்
பாடிவைத்தேன் புலஸ்தியனே நெடுங்காலந்தான்
உன்னதமாங் காவியத்தை யுந்தமக்காய்
உத்தமனே ஞானக்கண் திறப்பதற்கு
நன்னயமாய் யுகம்பிரித்துச் சஞ்சியாக
நாட்டிலே யெல்லோருங் காணத்தானே. 917

காணவென்றால் சஞ்சிகை யேதென்றாக்கால்
கருவான புலஸ்தியனே கழறக்கேண்மோ
பூணவே பரிபாஷை சருக்கமப்பா
புங்கவனே சஞ்சிகை யென்னலாகும்
ஆணவமாய் போதையது கொள்ளாமற்றான்
அப்பனே கொலுமுகமா யுரைத்தநூலு
மாணமாங் கல்வியுள்ள தம்பிரானே 918
மகிமையெல்லா மஞ்சுக்குள் ளடக்கினேனே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

அடக்கினேன் பஞ்சமுகக் காவியந்தான்
அப்பனே நாதாக்கள் ரிடிகள்முன்னே
துடக்கமது நேராது துய்யபாலா
துரைராஜ சுந்தரனே காவியந்தான்
படர்க்கையாய் தன்வந்திரி பகவான்றானும்
பாங்குடனே தாமுரைத்தா ரிதுபோல்வண்ணம்
சடக்கமது நேராம லுரைத்தநூலாம்
சாற்றுகிறேன் மன்னவனே புலஸ்தியானே. 919

## தன்வந்திரி பஞ்சகாவியம்

மன்னவனே மார்க்கமது யேதென்றாக்கால்
மகுத்துவமாம் காவியங்கள் பஞ்சநூலாம்
தென்பொதிகை யசுவனியார் சொன்னநீதி
தேற்றமுடன் சொல்லுகிறேன் துய்யபாலா
பன்னவே வயித்திய காவியந்தானாகும்
பாலகனே சிறுகாவிய மொன்றேயாகும்
நன்னயமாய் யேம காவியந்தானாகும்
நலமான சம்பூரண காவியந்தானாமே. 920

தானான பூரண காவியந்தானாகும்
தாக்கான பஞ்சபூத காவியந்தானாகும்
கோனான குருநூலா மென்னலாகும்
குவலயத்தி லாருந்தான் கூறவில்லை
மானான காவியந்தான் போதையில்லாக்
காலமதில் பாடிவைத்த குருநூலப்பா
தேனான வின்னூல்தா னைந்து கோர்வை
தேற்றமுட னவருரைத்த குருநூலாமே. 921

குருநூலா மென்னூல்தா னஞ்சுகாண்டம்
கூறினே னசுவனியார் பாதம்போற்றி
பெருநூநாம் போதையது மிகவேநீக்கிப்
பேசரிய தத்துவங்க ளுள்ளமர்த்தி
கருநூலாம் கருவிகர ணாதியந்தம்
கருத்துறவே ஞானப்பா லூட்டிவைத்தேன்
சிருநூலாம் பஞ்ச காவியந்தானப்பா
சீர்பெறவே போதையிலாக் காலந்தானே. 922

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

காலமாம் புலஸ்தியனே மச்சகேந்திரா
காவலனே சுந்தரனே கலைவல்லோனே
சீலமுடன் முக்கோடி கிரந்தஞ்சொன்னேன்
சிறப்பான னூல்களெல்லாம் போதையோடும்
பாலகனே சொல்லிவிட்டே னனந்தங்கோடி
பட்சமுடன் யாமுரைத்தோம் பண்பாய்க்கேளு
ஆலவிஷ முண்ட சிவனருளினாலே
அப்பனே போதையோடு விளம்பினேனே. 923

விளம்புவேன் பஞ்ச காவியந்தானப்பா
வித்தகனே போதையில்லாக் காலந்தன்னில்
கிளம்பவே ஞானோப தேசமெல்லாம்
கிருபையுட னுந்தமக்கு யுபதேசிப்பேன்
தளம்பவே ஞானத்தின் சூட்சமெல்லாம்
சாற்றுகிறே னுந்தமக்கா வருளுங்கொண்டு
வளமையுடன் லோகவதிசயங்களெல்லாம்
வாகுடனே வெளிப்படையா யுரைத்திட்டேனே. 924

உரைத்தேனே காவியத்தின் யோகசூட்சம்
உத்தமனே காவியத்தி லறியலாகும்
திரைத்தபொருள் காவியந்தான் சமாதிபூண்டேன்
தீர்க்கமுட னரங்கேற்ற மில்லையப்பா
மறைத்தபொருள் பன்னீரா யிரந்தானப்பா
மகிமையெல்லா மிதற்குள்ளே காண்பாயப்பா
துரைத்தனத்தார் ராஜாதி ராஜர்கோடி
துகளறவே காண்பதற்குப் பாடினேனே. 925

## மெய்ஞ்ஞானப்பால்

பாடினே னின்னமொகு மாற்கஞ்சொல்வேன்
பாலகனே மாணாக்கள் பிழைக்கவென்று
தேடியே பொருளெல்லா மிதிலடக்கம்
தேற்றமுடன் காயாதி மார்க்கஞ்சொன்னேன்
கூடியதோர் பொருளெல்லா மிதிலடக்கம்
குறிப்புடனே சூட்சாதி சூட்சஞ்சொல்வேன்
நாடியதோர் ஞானப்பா லூட்டுவேன்யான்
நாதாந்த வகுவனியமர் தேவர்க்கே. 926

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வாக்கான ஞானமது யேதென்றாக்கால்
வளம்பெரிய மெய்ஞ்ஞான மிதுவேயாகும்
நோக்கான பொருளெல்லா மிதிலேதோயும்
நொடிக்குள்ளே பாவ புண்ணியங்கள்தோற்றும்
தேக்கான பட்டமுள்ள பூமியப்பா
தேற்றமுடன் கண்டுமிக வாராய்ந்தேதான்
ஆக்கமுடன் சமாதிமுகம் தாள்பிடித்து
அப்பனே மெய்ஞ்ஞானம் கேட்பீர்தானே. 927

தானான மார்க்கமது மெய்ஞ்ஞானந்தான்
தண்மையுள்ள விதியாளி யறிவான்பாரு
கோனான புலஸ்தியனே மச்சகேந்திரா
கொற்றவனே சின்மயத்தால் கோசங்கொண்டு
மானான கும்பகத்தை மேலேநோக்கி
மகத்தான அருட்பாத நிலையில்நின்று
பானான பரஞ்சுடரைக் கையமர்த்தி
பாலகனே பசுபாசக் களையிலூணே 928

ஊணவே பரஞ்சுடரைக் கையமர்த்தி
வுத்தமனே நிஷ்டையிலே வுறுதிபூண்டு
காணவே வெகுகோடி மாண்பரெல்லாம்
காசினியில் மெய்ஞ்ஞான போதைக்கண்டு
வேணபடி பஞ்சாட்சர போதையாலே
வெகுகோடி மாண்பரெல்லா மையம்பூண்டு
நாணவே சின்மயத்தோர் வழியில்நின்று
நாட்டமுடன் சமாதிமுகம் காணார்தாமே. 929

தாமான யோகமென்ற சாதனத்தை
தகைமையுடன் கண்டுமல்லோ சாதனத்தால்
கோமானே மெய்ஞ்ஞானப் பாலையுண்ண
கொற்றவனே வெகுபாவந் தன்னைநீக்கி
சாமானிய மானதொரு மெய்ஞ்ஞானத்தை
சாற்றினேன் நாதாக்க ளறியவேண்டி
பூமானே யுபதேச நிலையிலப்பா
புகழுடனே பூட்டுகிறேன் சித்துகேளே. 930

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சித்தான சிவயோகங் கொள்ளல்வேண்டும்
சிறப்பான யுபதேசம் வுண்மைவேண்டும்
பத்தான கொடுவழியை நீக்கவேண்டும்
பாவமென்ற கொடும்பழியை யகற்றவேண்டும்
முத்திபெறும் நல்வழியை நோக்கவேண்டும்
மூவுலகில் கசடதனை மறுத்தல்வேண்டும்
நித்தமுமே ஞானேந்திரியங் கொள்ளவேண்டும்
நிரோட்சித்தால் காயசித்தி யடையலாமே. 931

அடையவே கோணந்திரி யாகவேண்டும்
அப்பனே புலால்பகையை மறக்கவேண்டும்
நடையிலே சின்மயப் பழக்கம்வேண்டும்
நாதாந்தத் திறவுகோ லறியவேண்டும்
தடையான சிற்றின்ப மறத்தல்வேண்டும்
தகைமையுடன் பேரின்ப நிலையேவேண்டும்
சடையுடனே வேஷமது கொண்டுமென்ன
சடாபார டமரகத்தைக் காட்டொண்ணாதே. 932

ஒண்ணாத காரியத்தால் ஞானம்பொய்யா
முத்தமனே குணக்கறிவால் பற்றல்வேண்டும்
தண்மையுடன் பதிபாசக் களையகற்றித்
தகைமையுடன் கர்மேந்திரிய நிலையேவேண்டும்
வெண்மையாஞ் சுடரொளியைப் பற்றவேண்டும்
வேதாந்தத் தாய்தனையே நினைத்தல்வேண்டும்
உண்மையது மிகக்கூறி புலஸ்தியாகேள்
உத்தமனே சிவயோக நிலையில்நில்லே. 933

நில்லான பாதையது யேதென்றாக்கால்
நிர்மலமாய் பௌசிகத்தை யுணர்த்தல்வேண்டும்
கல்லான மனமதுவு முருகவேண்டும்
காசினியில் கண்டோர்க்கு நிஷதங்கூறி
வெல்லவே சொருபநிலை யுள்ளடக்கி
வெட்டவெளி யம்பரத்தைத் தாவல்வேண்டும்
அல்லவே நிஷ்டையது புரியுங்காலம்
அப்பனே பதிபாச நிலையைப்பற்றே. 934

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பற்றவே நிலைவழியில் கசடறுத்துப்
 பான்மையுடன் மெய்ஞ்ஞானப் பாலருந்து
சுற்றமுடன் மெய்ஞ்ஞான மருந்தும்போது
 சுந்தரனே கபாடவழி வாசல்தோன்றும்
வெற்றியுட னம்பரத்தைக் கண்டாயானரல்
 வேதாந்தந் தாயினது சோதிதோன்றும்
குற்றமது நேராது வசுவனியார்வாக்கு
 குவலயத்தி லறிந்தவனே யோகியாமே. 935

அறிந்தாலும் சுயநிலையைப் பற்றவேண்டும்
 அப்பனே வம்பரத்தில் நிற்கலாகா
செறிந்தபொருள் சிக்கறுத்து முடியரிந்து
 செம்மலுடன் விளக்கமென்ற பொய்கைதன்னில்
குறிந்தமய சஞ்சீவிப் பாதைகண்டு
 குறிப்புடனே வாசல்வழி முன்னேநின்று
முறிந்தபதம் நேராமல் முளைவிட்டு
 மூர்க்கமதைகலை நிறுத்தி முயலக்கேளே. 936

முயலான பாதையிலே நிற்கும்போது
 மூச்சதுவும் கனல்கொண்டு மாட்டிநிற்கும்
மயலான வழிதனிலே நிற்கும்போது
 மன்னவனே யுந்தமக்குக் கனலோமெத்த
பயமான மூலமென்ற சுடர்தானப்பா
 பாலகனே கனல்வழியா யோட்டும்பாரு
சுயமான கேசரத்தை நடத்தவொட்டா
 சுரிதமென்ற வுட்பொருளை யறிவாய்தானே 937

தானவனே யுட்பொருளை யறிதல்கண்டு
 தாக்குடனே கொடும்பாதக் கனலைமாற்றி
வானவனே சரிதைகிரி யோகந்தன்னை
 வளமையுடன் கண்டுமே மிகவாராய்ந்து
சோனவனே கன்னவழி தான்புரிந்து
 சொருபமென்ற வருள்நிலையைப் பற்றியேற
சானமெனுங் குண்டலத்தில் கவுனசெயோகம்
 கருத்துடனே மூச்சுவழி காப்பாய்பாரே. 938

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா மூச்சுவழி கண்டபோதே
பளிங்குடனே யோகமென்ற பாதைதோன்றும்
சீரப்பா பாதைவழி யறிந்தபோதே
சிற்சுடரும் பரவெளியு யறிந்தபோதே
கூரப்பா குணபாடு வழிபாடோடும்
குவலயத்தில் கண்டவரே சொரூபனப்பா
தேரப்பா விதியாளி யறிவான்பாரு
தேசத்தில் புத்தியில்லான் காணான்தானே. 939

காணாத சூளுக்கறியா மட்டிமாண்பர்
காசினியில் ஞானத்தை யறிந்தோன்போலும்
வீணாக வார்த்தையது மிகவேகூறி
வீறுடனே வாயாட்டங் கூறுவான்பார்
சாணான வயிரதுவும் பிழைக்கவேண்டி
சண்டாள னிடக்கூறு மிகவாய்ச்செய்து
தோணாத மொழியதுவு மிகவேசொல்லி
தொல்லுலகில் கழுதைபோல் திரிவார்பாரே. 940

பார்க்கவென்றால் சண்டியைப்போல் கழுதைமாண்பர்
பாருலகில் யோகமென்ற வேஷம்பூண்டு
தீர்க்கமுடன் ஞானப்பா லுண்டோர்போலும்
திறமுடைய யோகவழி வறிந்தோர்போலும்
நீர்க்காவி மிகபூண்டு வுத்திராட்சம்
நியமமுடன் கழுத்ததனில் பூண்டுமேதான்
சார்த்தகியாழ் வார்போலே வேஷம்பூண்டு
சடையிட்டுத் திரிவாரே சண்டிமாண்பர். 941

சண்டியாம் பொய்வேட மிகவணிந்து
சாதுரிய மாத்திரையாம் தடிகளுன்றி
கண்டிதமாய் வார்த்தையது கடியகோபம்
காசினியில் பிரமிக்க கவசம்பூண்டு
உண்டியெனும் போசனத்தை வெறுந்தோன்போலும்
வுதாசினமாங் கேள்வியது மிகவேகொண்டு
தொண்டுசெய்ய தந்தமக்கு சீஷனோடும்
தோராமல் நிலைவழியில் தோன்றுவானே. 942

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தோன்றையிலே மானிடர்கள் கண்டபோது
தோற்றமுடன் எதிர்நிற்கப் பண்டாரம்போல்
ஊன்றியே மாத்திரைக்கோல் பிரம்புதண்டு
வுத்தமனும் கரமேந்தி நிற்கும்போது
மான்றோலும் சங்குசெய கண்டியோடு
மகத்தான பாதமென்ற குறடுதானும்
சான்றவர்போல் சீஷவர்க்க முன்னேயேவல்
சதாசிவத்தி னேர்மையோடு நிற்பார்பாரே. 943

பாரப்பா சீஷர்களும் சிவயோகிக்கு
பக்குவமாய் கமண்டலத்தை யடித்துமேதான்
நேரப்பா நெறிமுகமாய்ப் பணிந்துபோற்றி
நேர்ப்புடனே யுபசார மஞ்சலோடும்
ஆரப்பா மானிடவக் கூட்டங்கேளீர்
அப்பனே மல்லிகார்ச் சுனப்புரந்தான்
வீரப்பா சிவயோகி சித்தென்பார்கள்
வெகுகலைகள் வெகுதவங்கள் கொண்டோர்தாமே. 944

கொண்டதொரு புண்ணியன்போ லதீதங்கூறி
கொற்றவனே யுபதேச மிகவாய்ப்பேசி
தொண்டுசெய்யும் சீஷவர்க்கம் தன்னைக்கண்டு
சுந்தரனே கைமடலி லிருக்கும்நீறு
அண்டர்பிரா னெமக்களித்த திருவெண்ணீற்றை
அப்பனே விதிபாசக் காமம்நீங்க
வண்டயமாம் புஷ்பதாம் பூலத்தோடு
மகாதேவா கொடுவென்று கூறுவாரே. 945

கூறுவார் பசப்புமொழி யதிகஞ்சொல்லி
குறிப்புடனே பிரணவப் பொருளையீய்ந்து
கோறுவார் யெமதிடத்திற் கொஞ்சம்நாள்தான்
கொற்றவனே தொண்டுபத மிகவாய்ச்செய்து
தேறுதலாய் யுடல்பொருள் களாதிபந்தம்
தேற்றமுட னுந்தமக்கே தத்தமென்பார்
மாறுபடா வார்த்தையது போலேகூறி
மதியாட்டங் கொண்டுமல்லோ பசப்புவாரே. 946

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பசப்புடனே வெண்ணீறு தாமெடுத்துப்
பளிங்குடனே மெய்ஞ்ஞானம் கூறுவோர்போல்
தசமான மாற்றதுவு முமக்கேதேசம்
சடாபாரம் தனிலிருந்து கொடுக்கலாகும்
நிசமான சீஷவர்க்கே முனக்கேயல்லால்
நீணிலத்தில் மற்றவருக் குபதேசந்தான்
அசலதுவும் கொடுப்பதற்கு மனமேயில்லை
அப்பனே யுந்தமக்கு தத்தம்பாரே. 947

தத்தமென்பார் மெய்ஞ்ஞானப் பொருளேயென்பார்
சதாகால முபதேச முமக்கேயப்பா
சுத்தமுள்ள குணவானே னீர்தானென்பார்
சுந்தரனே தேசத்தில் கிட்டாதப்பா
எத்திசையுந் திரிந்தாலும் புனிதவானே
யெழில்பெரிய சுகுணபரி சீஷர்கேண்மோ
முத்திபெறும் வழியுமக்குப் புரிதலாகும்
மோசமில்லை யுந்தமக்கு கிடைக்கலாச்சே. 948

கிடைத்துதே ஞானமென்ற பொருளோடொக்க
கிருபையுடன் யேமமென்ற பொருளுமப்பா
தடையறவே நாதாந்த சித்துதம்மால்
தகமையுடன் யுந்தனக்கு வாய்ந்தல்லால்
சடைபோன்ற சித்துமுனி வனேகம்பேர்கள்
சாங்கமுடன் கண்டவர்கள் கோடியுண்டு
இடைதனிலும் நேராம லுந்தமக்கு
யிட்சணமே கிடைத்ததுதான் விதியென்பாரே. 949

என்னவே சிவஞான சொரூபர்தாமும்
யெழிலான அகப்பொருளும் புறப்பொருளுமாக
துன்னவே சடக்கறுத்து வெளியதாக
துப்பகற்றி சிக்கறுத்து யுபதேசிப்பார்
மன்னவர்கள் தான்மயங்க வதீதங்கூறி
மாசற்ற பெரியோர்போல் மயக்குவார்கள்
நன்னயமாய் கட்டுகொண்ட சிவயோகத்தார்
நாதாக்கள் போலவரும் நடிப்பார்காணே. 950

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நடிப்பாரே [illegible]மும்
நளினமுடன் கண்டல்லோ யேங்குவார்கள்
துடிப்பான சிவயோகம் பூண்டாப்போல
துப்புரவாய் வாசிநிலை யறிவுகூறி
பிடிப்பான வம்பரத்தில் பற்றிநின்று
பேரான சமுயங்கள் தீர்ந்தாற்போல
குடிப்பான லாகிரியாம் வஸ்துதாமும்
குறிப்புடனே யறிந்துவுதா சனங்கூறுவாரே. 951

கூறுவார் பகட்டெல்லாம் நம்பவேண்டாம்
குருபரனே புலஸ்தியனே குணமுள்ளானே
மாறுபடும் வார்த்தைமொழி யதீதங்கூறி
மன்னவனே யுந்தமக்கு வினயஞ்சொல்லார்
தேறுதலைக் கூறியேதான் திறமுஞ்சொல்லார்
தெருவில்நின்று வாயளக்கம் செய்யும்யோகி
கோறுகின்ற போகந்தமை நம்பவேண்டாம்
கொற்றவனே குருபரனே யின்னங்கேளே. 952

## ஞானிகள் பொய்ப்பால்

கேளப்பா புலஸ்தியனே மச்சகேந்திரா
கெடியான யெந்தன்மொழி தவறாவண்ணம்
நாளப்பா போகாம லசுவனியார்தேவர்
நளினமுடன் றாமுரைத்த முறைபாடப்பா
தாளப்பா பொய்ப்பாலாம் ஞானப்பாலாம்
சாற்றுகிறேன் சதுர்மன்னா தம்பிரானே
ஆளப்பா விசுவாதி போலவந்து
அப்பனே திலர்தமதை தீட்டுவாரே. 953

தீட்டியே லாடமதில் திலர்தந்தீட்டி
தீர்க்கமுடன் யெதிர்நின்று வார்த்தைகூறி
தாட்டிகமாய் சமுதாய குணம்பகுத்து
சதாகாலம் ஞானப்பால் கொண்டாற்போல
நீட்டமுடன் யெந்தோழா யெந்தன்சாமி
நீதியுடன் யாமுரைக்கும் பால்தானப்பா
தேட்டமுட னுபதேச மமக்கேயல்லால்
தெளிவுள்ள [illegible] 954

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

என்னவே சிவயோகி மாண்பரப்பா
யெழிலான வுபசார வார்த்தைகூறி
நன்னயமா யிதிகாச வுண்மைசொல்லி
நாதாந்தத் திறவுகோல் நவிலச்சொல்லி
துன்னவே யேமாற்றல் சுயம்புகூறி
துரைராச சுந்தரனே வெளியிட்டேகி
சொன்னபடி நடப்பதற்கு துலைவுகோடி
சோராமல் நடத்துபவன் யோகனாமே. 955

## கேசரமார்க்கம்

யோகனா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
யொளிவான கேசரத்தை நடப்பதற்கு
போகமென்ற வுச்சாடன மையல்நீக்கிப்
பொங்கமுடன் காயாதி கற்பங்கொண்டு
ஏகவெளி யமபரத்தைக் காண்பதற்கு
யெட்டியே மூச்சடக்கி யோகவாசி
பாகமுடன் வாசியைத்தா னிழுத்துவாங்கிப்
பாங்குடனே பிரமநிலை சாதிப்பாயே. 956

சாதிக்க சாயுச்சிய பதவியாகும்
சதாநிஷ்டை யடைவதற்குக் காலங்கிட்டும்
சோதிக்க வைந்தெழுத்து மாறிற்றோன்றும்
சுடரொளிபோல் கண்ணுக்கு வொளியேவீசும்
பேதிக்க வட்சரமாய் குண்டலியைக்காட்டும்
பேரான சூக்குமத்தை யறியலாகும்
ஆதித்தன் சூரியன் சந்திரனோகாண்பாய்
அப்பனே சோதிமயம் வீசல்தானே. 957

வீசலாம் சுடரொளியின் வாசல்தோன்றும்
வித்தகனே விநாயகனே முன்னேநிற்கும்
மாசல்வழி தடங்கண்டா லம்பரந்தான்
அம்பரத்தி னுளவறியார் மட்டிமாண்பர்
தூசகலு மம்பரத்தில் சோதிகாண்பாய்
துப்பகல கேசரத்தின் மார்க்கந்தோன்றும்
மோகமது நேராது கேசரத்தில்
மோதுகின்ற மூச்சதுவை யுள்ளேதாக்கே. 958

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தாக்கையிலே கேசரமும் வெடியாதப்பா
    தற்பரனே சிற்பரனே தண்மையோடும்
மூக்குமுனை சுழிமுனையை மூச்சில்தாக்கு
    முனையான கேசரத்தை மிகவேகாட்டும்
ஆக்கமுட னாவியது சுழினை நாக்கி
    அப்பனே காந்தாரி யுள்ளடக்கி
நாக்குமுனை மேல்வாச லம்பரத்தை
    நாட்டுகையில் தான்துறவு திறக்கும்பாரே. 959

பாரப்பா குய்யமென்ற மூலந்தன்னில்
    பாங்குடனே ரேசகமாம் பூரகத்தை
நேரப்பா முனைவழியே நின்றுகொண்டு
    நெடிதான குண்டலியைக் கீழமர்த்தி
தீரவே வாசிவழி கும்பகத்தை
    தீர்க்கமுடன் நடத்துபவன் கேசரந்தான்
சாரமுடன் சடாட்சரத்தை யுச்சரித்து
    சாங்கமுடன் நிலைதனிலே நிறுத்துவாயே. 960

நிறுத்துகையில் கோயில்குள மாறுதோன்றும்
    நிராமயத்தில் பராமயமு மிகவேகாட்டும்
பொறுத்துமே வாசல்வழி மூச்சேசெய்யும்
    பொங்கமுடன் கபாலமது கொதிப்புதோன்றும்
நிறுத்துமே மூச்சுதனை நிராமயத்தில்
    நீடவே மேல்வாசல் திறக்கொட்டாது
கறுத்துமே புகைபோல சேவிக்காட்டும்
    கன்னவனே புலஸ்தியனே கருவாய்க்கேளே. 961

கேளப்பா நடுமையம் பூட்டிருக்கும்
    கெவனமுடன் வாசியைத்தான் பூட்டுவாங்கி
நாளப்பா மேற்பாதை மூட்டுபார்த்து
    நளினமுடன் பூட்டதுவை திறக்கும்போது
கோளப்பா சுள்ளாணி யொன்றுதோன்று
    கொற்றவனே வுள்ளாணி யிரண்டுநிற்கும்
மீளப்பா யிவ்விரண்டு பூண்டுகண்டால்
    மிக்கான சிவயோக கேசரமுமாமே. 962

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேசரமா மிப்பாதை யாருங்காணார்
கெவனமுடன் கண்டறிந்தோன் பெரியயோகி
மோசமது நேராமல் கேசரத்தை
மோசித்து சாதித்தா வனேசித்தன்
பாசமென்னு முட்கயறு சூத்திரந்தான்
பாருலகில் கேசரத்தான் காணமாட்டான்
ஓசலுடன் கிராவணத்தை மீட்கக்காட்டி
ஓட்டிவைத்தால் கேசரத்தா னென்னலாமே. 963

என்னவே கோடியுகம் சிவயோகந்தா
னெழிலுடனே சாதித்து யென்னலாபம்
துன்னவே சமாதிநிலை கொண்டுமென்ன
தூசகற்றி கபாடநிலை யறியாவிட்டால்
பன்னவே பிரபோத சந்திரன்
பளிங்குபோல் மதிமுகமுங் காணலாகும்
சொன்னபடி கேசரத்தின் பட்டமப்பா
சோராமல் நின்றலையக் காண்பாய்தானே. 964

தானான பட்டமது பரந்தேயப்பா
தானலையும் பான்மையென்ற மொழிதான்போல
கோனான வாகாஷந் தன்னிலேதான்
கொற்றவனே சிகரமதைக் காணலாகும்
தேனான யுந்தன்மனங் கெட்டுவிட்டால்
தேற்றமுடன் கிட்டுபய னொன்றுமில்லை
பானான பராபரமுங் காணலாகும் 965
கண்டாலே கேசரமும் தோற்றும்பாரே.

பார்க்கையிலே ஞானவொளி வாசல்தோன்றும்
பரஞ்சுடர்போல் மெய்ஞ்ஞானப் பிரகாசந்தான்
பூர்த்தமலர் போலாக பொலிவுகாணும்
புஷ்கரனே புங்கசித்தி பெறுவாயப்பா
தீர்த்தமுடன் வாரிதிதான் குமிழிகாட்டும்
திறமான வமிர்தமது தானேபொங்கும்
நீர்க்கமலம் வீற்றிருக்கு மனோன்மணியாள் சேர்வை 966
நிரத்தமுடன் சதாகாலந் தோன்றுந்தானே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## ஆறாதார நிலை காணல்

தானான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
தயாபரனே முப்புரத்தைக் கண்டபாலா
தேனான மனோன்மணியாள் பாதங்கண்டு
தெரிசித்த சற்குருவே மச்சகேந்திரா
கோனான யெனதைய ரசுவனியார்தேவர்
கோமகனே யெந்தனுக்கு யுபதேசித்த
மானான வாராதா ரத்தினேர்மை
மகிழ்வுடனே யுந்தமக்குப் போதிப்பேனே. 967

போதிக்க புலஸ்தியனே வாறாதாரம்
பொங்கமுடன் யோக நிஷ்டையிலேதானும்
நீதியுடன் சமாதிமுகம் நேர்மையோடும்
நிஷ்களங்க மாகவே யோகநிஷ்டை
சாதிக்க பஞ்ச பூதத்தின்கூறு
சட்டமுடன் பிரிதிவை யுள்ளடக்கி
வாதித்துப் பிரிதிவை மேலேநோக்கி
வாகுடனே ஸ்தம்பித்து நின்றிடாயே. 968

நின்றதொரு வப்பூவை யுள்ளடக்கி
நீதியுடன் தேயுவை கீழமர்த்தி
தென்றிசையில் வாயுவை யெதிரேநோக்கி
தேற்றமுட னாகாச மடியிற்காண
வென்றிடவே பஞ்சபூத மொன்றாயாகி
லேகமுட னுற்பனத்தை யொன்றாய்க்கொண்டு
சென்றதொரு பூதங்க ளொன்றாய்ச்சேர
செகதலத்தில் பஞ்சபூத மென்னலாமே. 969

என்னவே பூதத்தி னேர்மையப்பா
யெழிலான வொடுக்கமதை யாமுரைப்போம்
நன்னயமா யேதென்று மயங்கவேண்டாம்
நாதாக்கள் தன்னொடுக்கம் நயந்துரைப்பேன்
பன்னவே பஞ்சகர்த்தா ளாட்டங்கூர்வேன்
பளிங்குடனே பிரிதிவுதா னப்புதனிலொடுங்கும்
சொன்னதொரு வாயுவுதான் தேயுதனிலொடுங்கும்
சொந்தமுட னாகாச மொடுக்கம்பாரே. 970

CC-0. Jangamwadi Math Collection, Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பாரப்பா வொடுக்கநிலை யறிந்தபோது
பாலகனே வாராதா ரத்தைக்காண்பாய்
நேரப்பா வாராதா ரத்துக்குள்ளே
நேர்மைபட வொழுக்கநிலை யடையுந்தன்மை
சேரப்பா வொடுக்கநிலை கண்டபோது
செயலான கிரியைமுதல் சரிதையோகம்
ஆரப்பா ஞானமென்ற யோகமப்பா
அப்பனே அதிலடக்க மாய்ந்துபாரே. 971

ஆய்ந்துமே வாசல்வழி திறக்கும்போது
அப்பனே கனல்கொண்ட பாதைதானும்
பேய்ந்தமழை சேரான கதையைப்போல
பேரின்ப நிலைதனையைக் காணலாகும்
தேய்ந்தபொருள் வாசல்வழி தமர்கள்போட்டு
தோராமல் கயிறுகொண்டு விழித்தாற்போலும்
சாய்ந்ததொரு மூலத்தைப் பற்றிநின்று
சதானித்தம் வாராதாரம் நடத்துவீரே. 972

நடக்கவென்றால் மேலண்ணம் நாட்டிப்பாரு
நலமான கருவிகர ணாதியந்தம்
சொடக்கமுடன் தமர்வாசல் திறப்பதற்கு
சொற்பெரிய சின்மயத்தைத் தாவவேண்டும்
அடக்கமுட னாராதா ரக்கயிற்றால்
அப்பனே நவகோடி வாசல்தோன்றும்
சடக்கமது நேராமல் சதுருள்ளானே
சாங்கமுடன் நடுவாசல் காண்பீர்கேளே. 973

கேட்கவே நடுவாசல் சமுதாயந்தான்
கேண்மைகொண்டு வாசல்வழி காணலாகும்
தாட்கமலம் வீற்றிருக்கும் தாயார்சோதி
சட்டமுடன் பார்ப்பதற்கு பரிவுகாட்டும்
மீட்கவே வாராதா ரத்தினாலே
மிக்கவே சத்திசிவம் தெரிசிப்பாகும்
சூட்கமுடன் மேற்பாதை யறிந்தபோது
சுந்தரனே தீபவொளி தெரிசிப்பாயே. 974

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தெரிசிக்க பூட்டதுவுந் துறந்துகாட்டும்
தேற்றமுடன் ஞானவொளி பிரகாசந்தான்
பரிசிக்க சோதிமயம் கண்டபோது
பாலகனே வாசிவழி திறந்துகாண
வரிசித்த சலமதுபோல் வாயுதங்கி
வளம்பெரிய சுடருடனே மகவுதோன்றும்
சரியொத்த பிரணவத்தை சாதித்தாக்கால்
சற்குருவி னருளாலே பொருள்காண்பீரே. 975

பொருளான பொருளதுவு மென்னசொல்வேன்
பொங்கமுடன் சுருதிநிலை யறியலாகும்
தெருளான வாராதாரம் நிலையைக்காண
தேற்றமுடன் கபாலத்தி லிருந்துமேதான்
குருவான குருபதமு மிதிலேதோயும்
குவலயத்தில் நாதாக்க ளறிவார்பாரு
இருளான மூலாதா ரத்தையப்பா
மூதுலகில் காண்பவர்க ளில்லைதானே. 976

தானான வுடற்கருவைக் காண்பதற்கு
தாரணியில் வெகுகோடி மாண்பரப்பா
தேனான மனோன்மணியாள் பாதம்காண
தேற்றமுடன் பிரணவத்தை யுச்சரித்தோர்
கோனான கொலுவேந்த ராஜராஜர்
கொற்றவனே வாராதா ரத்தைக்காண
பானான பரஞ்சுடரைப் போற்றியேதான்
பரமவொளி யம்பரத்தைப் பற்றினாரே. 977

பற்றியே முனைவாசல் பதிவிருந்து
பட்சமுட னம்பரத்தில் வாசிதூக்கி
நெற்றிவழிக் கண்ணாலே சிவயோகத்தை
நேர்மையுடன் நிலைநாட்டிப் பூரகத்தை
சுற்றியே சுடரொளிக்கு விடங்கொடாமல்
சுந்தரனே சீவகளை தனிலிருந்து
வெற்றியுடன் மேலாதா ரத்தைநோக்கி
வேகமுடன் [illegible] 978

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஊணிக்க ஸ்தம்பனே மூச்சுறாது
வுத்தமனே கேசரத்தில் நின்றுவாடு
காணிக்கை யிருப்பதற்கு மூலாதாரம்
கண்டாலும் விடுகார்கள் யோகிமாண்பர்
ஆணிப்பா யமுர்தநிலை யறியுமட்டும்
அஷ்டாங்க யோகமதில் அமர்ந்துநிற்பார்
மாணிக்க மானதொரு சித்துபாலர்
மகிதலத்தில் கோடியுண்டு மதிப்புள்ளானே. 979

மதிப்பான புலஸ்தியனே மதிவல்லோனே
மானிலத்தில் நாதாக்கள் கூத்துசொல்வேன்
குறிப்பான வம்பரத்தில் டம்பரந்தான்
குறிப்புடனே செய்தாலு மூச்சுவித்தை
ததிப்புடனே யோங்கார முள்ளடக்கி
தட்டாமல் நிராமயத்தி லிருந்துகொண்டு
துதிப்புடனே வாராதா ரதத்தைக்காண்போன்
துப்புரவாய் லோகபதி சித்தனாமே. 980

சித்தான சித்துபரி பூஷணந்தான்
சிறந்தபசு பதியோகி யென்பாரல்லோ
முத்திவழி கண்டறிந்த முனிசிரேஷ்டன்
மூதுலகைத் துப்பத்தும் பிரமயோகி
சத்திசிவங் கண்டறிந்த கடந்தஞானி
சதாசிவ நிஷ்டையிலே யிருந்தசித்து
புத்தியுட னாராதா ரத்தைக்கண்ட
பூபால சிரேட்டரிடி யென்பார்காணே. 981

## சரீரக்கட்டளை நிலையறிதல்

என்னவே யின்னமொரு போக்குகூர்வே
னெழிலான புலஸ்தியனே சுகுணமாரா
நன்னயமாய் தேகநிலை கூர்வேனப்பா
நாதாந்த வசுவனியார் சொன்னவாக்கு
பன்னவே பிரிதிவாம் மண்தானப்பா
பாலகனே சடலமென்ற கூர்தானாகும்
சொன்னபடி சடலமது வந்தவாறு
சுந்தரனே புலஸ்தியனே கேட்டிடாயே. 982

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

கேட்டமொழி தவராதென் னையாவர்க்கு
கேசரத்தில் நாதாக்க ளாடுங்கூத்து
வாட்டமுட னெலும்பதனைக் காலாய்நாட்டி
வண்மையுடன் காலுக்கு துவாரமிட்டு
நீட்டமுடன் துவாரமதுக் கயிரேதென்றால்
நிஷ்களங்க மானதொரு வீணைநாதம்
ஆட்டமுள்ள நாதமது நரம்புதானாம்
அப்பனே வதிற்சொல்லு மருமைகேளே. 983

கேளப்பா வெலும்பினிட துவாரந்தன்னில்
கெட்டியாய் நரம்புதன்னால் வலித்திருக்கி
கோளப்பா நேராமல் நிலையாய்நாட்டிக்
கொற்றவனே விரத்தமதை யுள்ளேவிட்டு
தாளப்பா சர்மமென்ற தோலினாலே
சாங்கமுடன் றானமைத்து ரூபமாக்கி
பாளப்பா ரூபமென்ற சடலமப்பா
பாருலகில் மாந்தர்களும் செனித்தவாறே. 984

வாறான சடலமது தோன்றுங்காலம்
வண்மையுடன் பதிபாச நிலையிலப்பா
கூறான பஞ்ச பூதங்களாலே
குறிப்புடனே தத்துவங்கள் தொண்ணூற்றாறும்
ஆறான வாறுதலம் மதிலுண்டாச்சு
அப்பனே கருவிகர ணாதியந்தம்
மாறான சடலமென்ற பேர்தானாச்சு
மன்னவனே தேகநிலை கண்டுகொள்ளே. 985

கொள்ளவே தேகமென்ற சடலமப்பா
கொற்றவனே மாயாத பிறவியென்பார்
விள்ளவே காயாதி தேகமாச்சு
விற்பனனே சங்கோச மிகவுண்டாச்சு
தெள்ளமிர்த மானதொரு காயமப்பா
தேசத்தில் திரிந்தாலும் கிட்டாதப்பா
எள்ளளவு மானதொரு தவஞ்செய்தாலும்
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.
யெட்டாது யுந்தனுக்குச் சென்மந்தானே. 86

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தானென்ற சென்மமது மானிடந்தான்
தாரணியி லுந்தமக்கு வாய்த்ததப்பா
மாரனென்ற பிறவிகளும் சீவசெந்து
மானிலத்தில் பிறந்ததுவோ கோடாகோடி
பானென்ற பிறப்பதுவு மங்கவீனம்
பாரினிலே செனிக்காமல் பிறப்புநன்று
தேனென்ற மொழியாளின் கிருபையாலே
செனித்ததே யுந்தமக்கு புண்ணியமாச்சே. 98.

ஆச்சப்பா புலஸ்தியனே அன்புள்ளானே
அப்பனே யாசையது பிறவியாச்சு
மூச்சடங்கும் பிறவிக்கு யாசைலக்கோ
மூதுலகில் கூறுதற்கு யாராலாகும்
பாச்சலென்ற தேகமது நிலையில்நின்றால்
பாலகனே மண்ணாசை பெண்ணாசை
மாச்சலது கொள்ளாது பொன்னினாசை
மானிலத்தி லெல்லவற்கும் வாய்க்குந்தானே. 988

தானான பிறவியது கொண்டபோது
தகைமையுடன் லோகபதி மாண்பரெல்லாம்
மானான தேகமது பிரியுமட்டு
மகத்தான வுடல்பொருள்க ளாவியெல்லாம்
தேனான பந்துக்கள் பாசபந்தம்
தேற்றமுட னுயிரதுவு நீங்குமட்டும்
மோனமுடன் மசானகரை செல்லுமட்டு
மொழியாது வாசையென்ற கடல்தான் பேகளே. 989

கடலான வாசைதனை வெறுத்தோன்போலும்
காசினியில் வெகுகோடி மாண்பரப்பா
மடலான வாசையது சென்மந்தானு
மகிதலத்தி லொழியுமட்டு மாசைபோகா
திடமுள்ள மனதுவந் தேற்றங்கூறி
தீர்க்கமுடன் பரிபாஷை பேசுவார்கள்
சடமதுவு மொழிந்தாலு மாசைநீங்கா
சாங்கமுடன் புலஸ்தியனே சாற்றினேனே. 990

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

## வராககிரி கமண்டலசித்து—லட்சங் காப்பு

சாற்றவே யின்னமொரு மார்க்கங்கூர்வேன்
சார்வான வராககிரி வளப்பம்கேளீர்
போற்றவே வராககிரி மேற்கேயப்பா
பொங்கமுடன் கமண்டல சித்துதாமும்
ஆற்றமுடன் மலையோரம் குன்னுபக்கல்
அப்பனே கோபுரமா மதிலுமுண்டு
ஊற்றதிக மானதொரு நதியுமண்டு
வுத்தமனே ஜம்பீசுவர ரென்னலாமே. 991

என்னவே தேவதா ஸ்தானமப்பா
யெழிலான தாமரையின் தீர்த்தமுண்டு
சொன்னபடி தாமரையின் பக்கலோரம்
சொரூபராம் கமண்டல சித்துதானும்
நன்னயமாய் திரேதாயி னுகத்திலப்பா
நாதாந்த சித்தர்களுங் காணார்காணார்
உன்னிதமாய் புத்துடனே மரமும்தானாய்
வுத்தமனே யோகி யிருந்தார்பாரே. 992

பார்க்கையிலே சடாயுனிட சாபத்தாலே
பாருலகில் நெடுங்கால மிருந்தசித்து
தீர்க்கமுட னுலகதுவு முடிவுகாலம்
திறமுடனே யறிவதற்கு காயகற்பம்
ஏர்க்கவே மூன்றுமுறை யுண்டசித்து
யெழிலான கமண்டலமாஞ் சித்தேயாகும்
மார்க்கமுடன் வெகுகோடி காலமப்பா
மானிலத்தி லிருந்தசித்து யென்னலாமே. 993

என்னவே சதுர்யுகமா மூன்றுமுறையப்பா
யெழிலுடனே ஞானப்பா லுண்டசித்து
துன்னவே யுகமதுவு முடிவுகாலம்
தொல்லுலகை கண்டவரு மில்லையப்பா
சொன்னபடி யுகயுகமாய் நிஷ்டைபூண்டு
சோராமல் கண்விழித்து பார்த்தசித்து
மன்னவர்களாண்டவர்க ளுலகுதன்னை
மானிலத்தில் கூறுதற்கு நாவொண்ணாதே. 994

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

ஒண்ணாது சித்துமுனி நாதர்தம்மை
ஓகோகோ நாதாக்கள் கண்டதில்லை
வண்ணமுடன் பரலோக சித்தென்பார்கள்
வளம்பெரிய நாதாக்கள் வணங்கும்சித்து
திண்ணமுடன் ஞானசா கரந்தானப்பா
தீர்க்கமுடன் பாடிவைத்தார் லட்சங்காப்பு
மண்ணினது சமாதிபுரம் கல்கோட்டைக்குள்
மறைத்துவைத்தார் கேட்டிடிலோ கொடுப்பார்தாமே. 995

கொடுப்பாரே புலஸ்தியனே மச்சகேந்திரா
கோறியே யவர்பாதம் தொழுதுபோற்றி
ஒடுக்கமா யசுவனியார் தம்மைநோக்கி
வுத்தமனே வஞ்சலிகள் அதிகம்பெற்று
நடுக்கமுடன் வராககிரி சென்றுதானும்
நாதாக்கள் வரமதுவு மிகவாய்ப்பெற்று
இடுக்கமது நேராமல் துய்யபாலா
யெழிலுடனே யவர்பாதம் வணங்கிடாயே. 996

வணங்கையிலே யுந்தமக்கு யெல்லாஞ்சித்தி
வாகுடனே கேட்டதெல்லா முனக்கேயீய்ந்து
சுணங்கமது நேராமல் சுருதியோடும்
துப்புரவா யுபதேசம் செய்வாரப்பா
மணங்கமழ குகையிலிருந் தொலிகள்காண்பாய்
மாசற்ற பராபரத்தின் சுடரேநிற்கும்
சினமதிலே ஜோதிமய மொளிவேதோன்றி
சிக்கெனவே கண்விழிக்க மறையுந்தானே. 997

மறைவான ஜோதிமயம் கண்டபோதே
மன்னவனே யிருளகற்றி பொருளேகாண்பாய்
திறைவான மனோன்மணியா ளருபந்தோன்றும்
தீர்க்கமுட நெடுங்காலம் சித்திகொள்வாய்
முறையோடுங் குறைபாடு வழிபாடோடு
முத்தமனே வெகுகாலம் சமாதிபூண்டு
குறையாமல் நாலுயுக சித்துமாவாய்
குருபரனே புலஸ்தியனே புண்ணியோனே. 998

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

புண்ணியனே யிந்நூல்பன் னீராயிரந்தான்
 பூவுலகில் நாதாக்கள் மறைத்தவண்ணம்
கண்ணிமையு மரவாம லடியேன்றானும்
 காசினியில் சித்தர்முனி நாதர்பாதம்
புண்ணியங்கள் பெறுவதற்கு வசுவனியார்தேவர்
 பூபால னடிதொழுது வடியேன்றானும்
தண்மையுடன் காயாதி கொண்டபின்பு
 தகைமையுட னுந்தமக்கா யோதிட்டேனே. 999

ஓதினேன் புலஸ்தியா பெருநூலப்பா
 வுத்தமனே யுந்தமக்காய் லோபகாரம்
சாதியாய் தவமறிந்து தடமறிந்து
 சாங்கமுடன் நூல்கொடுத்தால் புண்ணியந்தான்
நீதியாய் நடக்காத கர்மிமாண்பர்
 நீணிலத்தி லிருப்பார்க ளீயவேண்டாம்
பாதிமதி தம்பிரா னாணை கண்டீர்
 பாருலகில் முக்காண்ட முற்றதாமே. 1000

அகஸ்தியர் பெருநூல்

வயித்திய காவியம்—12000

3-வது காண்டம் முற்றுப் பெற்றது.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

# அகஸ்தியர் 12000 என்னும் பெருநூல் காவியம் முதற்காண்டம் குறைந்தபாடல்கள் : விடுபட்ட பாடல்கள்

## வரிகள்

பக்கம் 22 பாடல்-21.—7வது வரி

பதிதமுள்ள ஸ்தம்பனங்கள் பச்சைமூலி

பக்கம் 22 பாடல்-22 2வதுவரி

கொடிதான விஷமூலி விருட்சப்போக்கு

4 வது வரி-நலமுடனே பாடிவைத்தேன் காண்டந் தன்னில்

பக்கம் 23 பாடல்-24-2 வது வரி

மானிலத்தில் சாபமதுக் கிடமதாச்சு,

பக்கம் 23 பாடல்-26-4வது வரி

வளமையுடன் பழிதனக்கு வாளுமாக

பககம் 24 பாடல்-30

4வது வரி-சட்டமுடன் நீந்தியல்லோப் பாழாய்ப்போச்சு

8 வது வரி-முதுமையுடன் நூலதனைத் தலைகீழாக

பக்கம் 25 பாடல்-31

2வது வரி-சுருதி பொருள் வேதமுதல் மறவேயாகும்

3வது வரி-நன்னயம்போல் னூலதனை மெய்யென் றெண்ணி

7, 8வது வரிகள் கன்னவன் தான்கொடுத்த கொடை யென்றெண்ணி

காசினியிலே மாண்பர் கழுதை மாண்பே

பாடல் 32-5 வது வரி

காண்பர்பே ஆனாலும் நடிகல் வேணும்

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

7 வது வரி

வீணான மடையருக்கு யென்னூல் வேணும்

பக்கம் 29 பாடல்-48

2 வது வரி-வீரமுடன் பலகோடி சித்தர்தாமும்

5 வது வரி-சுறாம்புலவும் புகுந்துடையா யின்னங்கேளு

7 வது வரி-அரும்பொருளை யாவருக்கும் உபயமாக

பக்கம் 30 பாடல்-53 முதல் நான்கு வரிகள்

பாரேதான் காயாதி கற்பஞ் சொன்னேன்
பாரினிலே சதாகாலம் இருக்கவென்று
நேரேதான் முப்பூவை முடிப்பதற்கு
நேர்மையுடன்...முறையுஞ் சொன்னேன்

பாடல் 54 நான்காம் வரி

சாகரத்தை விட்டொழித்த தன்மைபோலும்

பக்கம் 2 பாடல்-59

ஆமேதான் புத்திவான் புலஸ்தியாகேள்
அப்பனே லகுவாக நடத்தி வந்தால்
வாமேதான் வளமையென்ற எழுத்தினாலே
வளமையுடன் வாசியைத்தான் நடத்தவேண்டும்
மாமேதான் கும்பகத்தி லிருந்து கொண்டு
மகத்தான வாசியை நீ பிலக்கச் செய்து
நாமேதான் சொன்னபடி பழக்கஞ் செய்தால்
நவதுவா ரங்களெல்லா மடையும்பாரே.

பக்கம் 36 பாடல்-73

திண்ணமாம் புலஸ்தியனே செப்பக்கேளும்
திறமான சிவமுப்பு யார்தான்காண்பார்
வண்ணமா மண்டத்தின் யெண்ணைபோக்கி
வளமையுடன் வண்டத்தை யெடுத்துக் கொண்டு
கண்ணமுடன் கல்லுரலில் போட்டுமேதான்
கசடகற்றி யிருப்புலக்கை யாலே குத்தி
சண்ணமுட னிருசாம மிடித்துத்திரு
சட்டமுடன் தூளாகிப் பொடியாய்ப் போமே.

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

 Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha 

பக்கம் 87 பாடல்-79 முதல் 4 வரிகள்

போனதொரு மாவதனைக் கல்வமிட்டு
பொங்கமுடன் தானெடுத்துப் பனினீர்தன்னால்
தீனமொடு செயனீரா லரைக்கும்போது
திண்ணமுடன் வண்டமது மைபோலாகி

பக்மம்-88 பாடல்-84

போற்றவே இன்னமொரு கருமானங்கேள்
பொங்கமுடன் புலஸ்தியனே சொல்லக்கேளும்
மாற்றமுடன் சத்தியுப்பு சொல்வேன்பாரு
மகத்தான உப்பதுதான் யார்தான் கண்டார்
சீற்றமுள்ள உப்பதுவே யார்மகனே காண்பார்
சிவயோகி காண்பதல்லால் மற்றோர் காணார்
கூற்றமென்னுஞ் சத்திமுப்பு சிவன்தான் சொன்னார்
குணப்படவே யாமுனக்குச் சொன்னோம் பாரே.

பக்கம் 98 பாடல்-3

பாரேதான் இதற்கீடு சொல்லப் போமோ
பாருலகில் சித்தர்முனி கண்டவேதை
நேரேதான் முப்பூவைக் காணமாட்டார்
நேர்நிறைபு...... அறியமாட்டார்
சீரேதான் வெண்மைநிற மதிகமுண்டு
சிறப்பான வழலைக்குக் காரமெத்த

பக்கம் 5 பாடல் 185 கடைசிவரி

நிசமான ஞானவழி கூறுவானே

பக்கம் 54 பாடல் 149 4வது வரி

வல்லமையில் நாடியினா லறியவானாய்

பக்கம் 147 பாடல் 521 6வது வரி

திறனான பில்லி பூதங்களுண்டு

பக்கம் 53 பாடல் 546

இ. ராஜாதி ராஜனவர் காயகற்பம்
நாள்தோறும் அரவத்தின் விஷம் கொள்வார்
தராதலம் புகழுகின்ற சர்ப்பராஜன்
தாரணியில் மாணிக்கம் பூண்ட மன்னன்

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

பராசரிடி முதலானோ ரிவர்க்குச்சீஷன்
பாருலகில் இவர்போலுஞ் சித்துவுண்டோ
துராவுடனே ஜடாமுடியுங் கொண்டசித்து
துறையறிந்த சர்ப்பராஜ னென்னலாமே.

பக்கம் 55 பாடல் 562

## சங்கப் புலவர் நூல்களறிய

ஆச்சப்பா நூலாதி சங்கநூல்கள்
அளவில்லா நூல்விவரஞ் சொல்வேன் பாரு
மாச்சலென்ற கல்லாடம் பனுவலாகும்
மகத்தான தேரையர் காப்பியமுமாகும்
வீச்சுடனே காக்கை பாடினியமாகும்
விரைவான சிந்தாமணி சிறப்புமாகும்
வாச்சென்ற தருக்கசங் கிரகமாகும்
வாகான பாட்டியல் வெண்பாவாமே.

பக்கம் 1:9 பாடல் 570

' வது வரி: சுருக்கமுடன் வேதாந்தக் கருவுதானும்

பக்கம் 161 பாடல் 76 8 வதுவரி

கொப்பெனவே ரத்தமா மிஷந்தானாமே

பக்கம் 89 பாடல் 683 முதல் 698 வரை

நூலான நூலதனைக் கொடுக்கவென்று
நிட்பமுட னெங்கள்குரு நாதர் சொன்னார்
காலான சண்டீஸ்வர நூல்தானப்பா
காசினியில் வெகுபேர்கள் கண்டதில்லை
பாலான மொழி போன்ற காவியந்தான்
பாருலகில் யாரேனுங் கண்டதுண்டோ
மாலான யீசுவர சித்து நூலை
மார்க்கமுடன் பதனமது செய்யென்றாரே 688

என்றுமே சுத்தமுள்ள தருமிகட்கும்
எழிலாக கருமிகட்கு மருமிகட்கும்
நன்றான காவியத்தைக் கொடுக்க வேண்டாம்
நலமுடனே பதனமது செய்யவென்று

CC-0. Jangamwadi Math Collection. Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

குன்றான குகைதனிலே யிருந்த நூலை
குருபரனா ரெங்களுக்குத் தந்தாரப்பர
சென்றுமே பொதிகைமலைப் போறோமென்று
சிறப்புடனே வந்தாரே சித்தர்தாமே. 689

## சித்தர்கள் நூல்வாங்கி பொதிகையில் வந்தது

சித்தான புலஸ்தியனே யின்னஞ் சொல்வேன்
சிறப்புடனே சித்தர்களின் மகிமைதானும்
முத்தர்மனந் தானுவந்து கொடுத்தநூலை
முசியாமல் தென்பொதிகை கொண்டுவந்தார்
பத்தியுடன் பொதிகைமலை சங்கத்தாரும்
பாடிவைத்த காவியத்தைப் பலருங்காண
சுத்தியுடன் நைவேத்திய பூசையோடும்
துவக்கமுடன் அரங்கேற்றல் செய்தார்பாரே. 690

## பொதிகையில் சண்டிசுவரர் காவியத்தை அரங்கேற்றல் செய்தது

பாரேதான் காவியத்தை சித்தரெல்லாம்
பட்சமுடன் சங்கத்தார் முன்னேயப்பா
நேரேதான் முகதாவில் நூலைவைத்து
நேர்மையுடன் அரங்கேற்றல் செய்தாரங்கே
கூரேதான் பொதிகைமலை சித்தர்தானும்
கூரான திருமூல வர்க்கத்தோடும்
வீரேதான் தர்க்கமது செய்துமல்லோ
விருப்பமுட னரங்கேற்றல் நிறுத்தினாரே. 691

## பொதிகைமலை சித்தர்களும் திருமூல வர்க்கத்தாரும் நூலை ஆட்சேபித்தது

நிறுத்தவே காவியத்தை முடங்கல் செய்தார்
நிகரான திருமூல வர்க்கத்தார்கள்
மருவான திருமூல ரெண்ணாயிரந்தான்
மகத்தான நூல்தனைச் செய்திருக்க

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha


குருமுனி வகஸ்தியனார் காவியந்தான்
கூறான காண்டமது பனிரெண்டுமாகும்
நறுமணங் கொண்டதொரு காவியந்தான்
நலமான பன்னீரா யிரந்தானாமே. 692

ஆமெனவே பன்னீரா யிரந்தானப்பா
அருமையுள்ள காவியங்கள் செய்திருக்க
தாமெனவே திருமூல ரெண்ணாயிரந்தான்
சட்டமுடன் பெருநூலுஞ் செய்திருக்க
போமெனவே பொதிகைமலை தன்னிலப்பா
பொங்கமுட னரங்கேற்ற வில்லையா
நாமெனவே வன்னூலை யேற்றல்செய்து
நலமுடனே யன்னூல்பின் செய்யென்றாரே. 693

என்றாரே பெருநூல்கள் தானிருக்க
யெழிலான சிறுநூலை நினைக்கலாமோ
குன்றான மலைபோலே வாயுள் வேதம்
கொப்பெனவே நூலிருக்க நீதியுண்டோ
தென்றிசையில் சித்தர்முனி நரங்களெல்லாம்
சீருடனே ஏந்பதற்கு ஒப்பேயில்லை
வென்றிடவே சித்தர்முனி கூட்டங்கூடி
விருப்பமுடன் ஆட்சபந்தம் செய்வார்தாமே. 694

தானான குருநூல்கள் பெருநூலப்பா
தாக்கான வாயுறு வேதந்தானும்
கோனான யெனதையர் கும்பயோனி
குறிப்பான பெருங்காண்ட மாயுள்வேதம்
தேனான மனோன்மணியாள் கிருபையாலே
தேற்றமுடன் பாடிவைத்த காண்டமப்பா
மானான காண்டமது பனிரெண்டுமாகும்
மகத்தான நூலிதுதான் பெருநூல்பாரே. 695

பாரேதான் ஆயுறு வேதந்தானும்
பாங்கான பன்னீரா யிரந்தானாகும்
நேரேதான் திருமூல ரெண்ணாயிரந்தான்
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.
நேர்மையுடன் பாடிவைத்த பெருநூல்தன்னை

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சீரேதான் தென்பொதிகை சார்பில்தன்னில்
சிறப்புடனே யரங்கேற்றல் செய்யவென்று
தீரேதான் சங்கத்தார் முன்னதாக
தீவிரமாய்ப் புறப்பட்டார் முனிவர்தாமே. 696

## காவியம் பன்னீராயிரத்தையும் திருமூல ரெண்ணாயிரத்தையும் பொதிகையில் அரங்கேற்றல் செய்தது

முனியான சித்தர்முனி சீடவர்க்கம்
முனையான தென்பொதிகை சார்பிலப்பா
தொனியான சங்கத்தார் முன்னதாக
தேற்றமுடன் பனிரெண்டு காண்டந்தானும்
நனியான திருமூல ரெண்ணாயிரந்தான்
நலமான காவியங்க ளிரண்டையுந்தான்
கனிவுடனே யரங்கேற்றல் செய்யவென்று
கருத்துடனே சங்கத்தார் முன்வைத்தாரே. 697

வைத்தாரே பெருநூலாங் காவியத்தை
வளமாக சங்கத்தார் முன்னதாக
மெய்க்கவே வேதநூல் சாத்திரத்தை
விருப்பமுடன் பதினெண்பேர் சித்தர்தாமும்
மொய்க்கவே சங்கத்தார் வுத்தாரந்தான்
முறைப்படியே பெருநூலை முன்னேவைத்து
செய்க்கவே திருமூலர் காவியத்தை
சிறப்புடனே பின்படியில் வைத்தார்தாமே. 698

தாமான முறைப்படியே நூலைவைத்து
சாங்கமுடன் சண்டீசர் நூலை வைத்தார்
கோமானா மகஸ்தியனார் நூலை முன்னும்
கொற்றவனார் திருமூலர் நூல்தான் பின்னும்
வேமேதான் சண்டீசர் நூல்தான் கீழே
விருப்பமுடன் வைத்தார்கள் சித்தர்தாமும

CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

நாமேதான் சொன்னபடி மார்க்கங்கூறி
நலமான வரங்கேற்றல் செய்தார்பாரே. 699

பக்கம் 96 பாடல் 725—2வது வரி

சொல்லவென்றால் யுத்தமது செய்வதற்கும்
தோல்வியென்ற வெல்விதனை யடைவதற்கு

பக்கம் 198 பாடல் 735 கடைசி 4வரிகள்

வாலிபப் பெண் ருதுவாகும் வுதிரமூலி
வாகான நீரின்மேல் யுடைக்குமூலி
சாலியனார் பானைதனை யுடைக்குமூலி
சட்டமுடன் பெருமூலி யனந்தங்கேளே.

பக்கம் 198 பாடல் 736

கேளேதான் மராமரமாம் விருட்சமூலி
கெடிதான பூதத்தின் விருட்சமூலி
பாளேதான் பாதாள மூலிதானும்
பாங்கான சிவன்மூலி ஐவேலிக்காய்
கோளேதான் நேராமல் குருவிருட்சம்
கொற்றவரைத் தான்மயக்கும் கோட்டான்சாறும்
நாளேதான் போகாமல் ஜலந்தானும்
நலமான தேவதா விருட்சமாமே

பக்கம் 200 பாடல் 741

பிச்சான செம்போத்து கரும்போத்தாகும்
பேரான கண்ணனென்ற பட்சியப்பா
நச்சரவங் கொண்டதொரு கொண்டலாத்தி
நாயகனே பச்சையென்ற புறாவுமாமே

CC-0. Jangamwadi Math Collection. Varanasi

Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha


பக்கம் 200 பாடல் 742

ஆமேதான் புறாவினுட பிச்சுதானும்
வப்பனே தூக்கணாம் பிச்சுதானும்
தாமேதான் அடைக்கலத்தின் பிச்சுதானும்
தாக்கான காடையென்ற பிச்சுதானும்
போமேதான் பன்றியுட பிச்சுதானும்
போக்கான காட்டெருமை பிச்சுதானும்
நாமேதான் கரும்பூனைக் நண்ணுதானும்
நலமான தேவாங்குக் கண்ணுதானே

பக்கம் 237 பாடல் 896

சித்தான சித்துமுனி ரிடிதானப்பா
செங்கண்மால் தானறிந்த யோகசித்து

பக்கம் 250 பாடல் 941

இணங்கவே நவகண்ட ரிடியைக்காண
யெழிலான மனதுவந்து யரசன்றானும்



SRI JAGADGURU VISHWARADHYA
JNANA SIMHASAN JNANAMANDIR
LIBRARY
Jangamawadi Math, Varanasi
Acc. No. 8055
CC-0. Jangamwadi Math Collection, Varanasi.

